## அன்பு மலர்கள்

இராமலிங்க விஜயம்

உடலுறுதி

திருக்குற ளின்பம்

தியான மாலை

திருநூல்

தமிழுணர்ச்சி

யோக சித்தி

மஹா கவி காளிதாசன்

வசந்த சுந்தரி

ஏழை படும் பாடு

அன்பின் அற்புதம்

சிலம்புச் செல்வம்

அன்பு மலர்—27

# இளிச்சவாயன்

புலவர்மணி விக்தர் ஹ்யூகோவின்

(LAUGHING MAN)

1551



சுவாமி சுத்தானந்த பாரதியார்

அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

# பதிப்புரை

எமது நிலயத்தின் இருபத்தேழாம் அன்பு மலரை இயற்கை யன்னைக்கு அர்ப்பணிக்கிறோம். இந்நூல் பிரெஞ்சு நாவலரசான **விக்தர் ஹ்யூகோ**வின் அரியபெரிய நூலாகும். ஹ்யூகோ மகாகவி, பெரிய நாவலர், அரிய நாடகாசிரியர், சுதந்திர வீரர், ஏழைகளுக் காகப் பாடுபட்ட கருணையாளர். நெப்போலியனுக்குப் பிறகு எழுந்த பூர்போன் முடியரசைத் தகர்த்துக் குடியரசை நிலைநாட் டிய வீரருள் ஹ்யூகோ ஒருவர். அவர் தேச சுதந்திரத்திற்காகத் தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் பலியீந்தார்; எளிய வாழ்க்கை வாழ்ந்தார். அரசாங்கம் அவரை நாடு கடத்தியது. அவர் சென்ற நாடுகளிலெல்லாம் பூர்போன் அதிகாரிகள் சூழ்ச்சி யால் இடர்கள் நேர்ந்தன. நாட்டுக்கு நாடு அவர் துரத்தப்பெற் றார். ஆங்காங்கே ஏழைகள் துயரையும் செல்வர் கொடுமையையும் அவர் பார்த்தார். அவர் இங்கிலாந்தில் இருக்கும்போது அந்நாட் டார் வாழ்வையும் வரலாற்றையும் நன்றாக ஆராய்ந்தார். அதன் … இளிச்சவாயன் என்னும் சரித்திரக் கதை எழுந்தது.

ஹ்யூகோ குடும்ப வாழ்விலும் பெருந்துயரப்பட்டார். இந்த நூல் முடியுந்தருவாயில் அவருடைய அருமைச் செல்வியர் இருவர் இரண்டு இளங்குழந்தைகளை விட்டுக் கடலில் மூழ்கி இறந்தனர். அந்த ஆறாத்துயரில் இக் கதாநாயகனையும் கடலில் ஆழ்த்தினார் நாவலர்.

இக்கதை சமுதாய வாழ்க்… …யாகும். செல் வர் செருக்கும், எளியர் துயரும், உ… …ன்பங்களும், உண்மைக் காதலும், போலிக்காதலு… …இன்பமும், இடம்ப வாழ்வின் பாபமும், சமதர்ம விளக்க… …வலைப்

போல் வருணிக்கும் வேறு நாவல் இல்லை யென்னலாம். இந்நாவலை பிரான்ஸில் மறைந்துறைந்த லெனினுக்குப் பொதுவுடைமை ஆவேசமீந்தது. இந்நூலைத் தமிழர் திருப்பித் திருப்பி படிக்கத் தகும்.

இந்நூல் மூலம் பிரெஞ்சில் சுமார் 2000 பக்கங்கள். இந்நூற் கதையை இளந்தமிழில், ஹ்யூகோ போன்ற இனிய காம்பீர்ய நடையில் **சுவாமி சுத்தானந்த பாரதியார்** எமக்கு எழுதி யளித்தார். அடிகள் பிரெஞ்சில் நல்ல புலமை பெற்றுப்பல அரிய கவிகளை இயற்றியுள்ளார் என்பதைத் தமிழர் அறிவர். பிரெஞ்சிலக்கியத்தின் பேராசிரியர் நூல்கள் பலவற்றை அடிகள் தமிழில் எழுதியுள்ளார். அவற்றை உரிய காலத்தில் வெளியிடுவோம்.

இனிச்சவாயன் என்னும் இந்நூலைக் கருத்துடன் ஹிந்துஸ்தானில் வெளியிட்டு நூலாகக் கட்டிக்கொடுத்த ஸ்ரீ ரா. நாராயணன் அவர்களுக்கு எமது நன்றி என்றும் உரியது. ஹிந்துஸ்தான் தமிழ் நாட்டின் ஒப்பற்ற செய்திக் களஞ்சியம். உண்மையான தேசத் தொண்டன். காந்தியடிகளின் திருவுள்ளம் என்றே அப்பத்திரிகையைச் சொல்ல வேண்டும். எமக்குப் பேருதவி செய்த ஹிந்துஸ்தான் நீடுசெழித்தோங்குக. இந்நூலை எழுதத் தூண்டிய ச... பத்திராதிபர் ஸ்ரீ வை. கோவிந்தன் அவர்களுக்கு எமது ... நன்றியாகுக. இம்மாதிரி பல நூல்களை அடிகள் ... திருக்கிறார். அவற்றின் பாதுகாப்பாளரா... உள்ளோம். எங்கள் பணி மே... னருளும், அன்பர் உதவி...

இராமச்சந்திரபுரம்
பிரமாதி மார்கழி, ௰...

# பொருளடக்கம்

இளிச்சவாயன்

# 1. கொம்ப்-ரா-ஷி-கோ

ம கொம்ப்-ரா-ஷி-கோ (*Comp-ra-chi-Cos*) என்றல் என்ன ? உங்களுக்குத் தெரியுமா ? தெரிந்தால், உங்கள் உள்ளம் நடுங்கும்; குடல் கலங்கும். அதென்ன, பேயா, பிசாசா, குட்டிச்சாத்தானு, ஜக்கம்மாவா? இல்லை; இவையாவது மந்திரத்திற்கு அடங்கும். கொம்ப்-ரா-ஷி-கோ வேலை பேயினும் கொடிது ; ஏவல், பில்லி சூனியங்களைவிடப் பயங்கரமானது. பெயரைக் கேட்டாலே 'கொம்பேறி மூக்கன், ராக்ஷஸன் என்பது போலிருக்கிறதல்லவா ? கொம்ப்-ரா-ஷி-கர் இராக்ஷஸரைவிட இரக்கமற்றவர்.

பதினேழாவது நூற்றாண்டில், "கொம்ப்-ரா-ஷி ...." என்றாலே அழுத பிள்ளை வாயை மூடும். இங்கிலாந்து, ஸ்பெயின், ஜெர்மனி முதலிய நாடுகளில் அந்தப் பெயர் பூச்சாண்டியாக வழங்கியது. "கொம்ப்-ரா-ஷி-கோ" என்பது ஸ்பானியச் சொல். அதற்கு "ஷேலா" என்றும் ஒரு பெயருண்டு. அதன் பொருள் "பிள்ளை திருடி விற்பது."

கொம்ப்-ரா-ஷி-கர் ஒரு பெரிய இரகசியக் கூட்டத்தார். இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்பெயின், ஜெர்மனி, இதாலி முதலிய நாடுகளிலெல்லாம் அவர் கூட்டம் கூட்டமாகத் திரிவர். அவர்கள் ஒரு இடத்தில் தங்குவதில்லை. காரியம் ஆனதும், உடனே இடம்மாற்றிச் செல்வர். அவர்களிடையே ஒற்றுமையுண்டு. சட்ட திட்டங்

கள் உண்டு; அவருக்குத் தலைவன் உண்டு. தலை போனு லும் அவர்கள் தலைவனைக் காட்டிக்கொடுக்க மாட்டார் கள். இந்த மாதம், இத்தனுந் தேதி, இன்ன இடத்தில், இத்தனை பேர் கூடவேண்டும் என்ருல், உடனே அதே மாதிரிக் கூடித் தீர்மானங்கள் செய்து நிறைவேற் குண்டு போட்டுச் சுட்டாலும் தமது இரகசியங்களை அவர்கள் வெளியே சொல்லவே மாட்டார்கள். அவர் களிடம் பேச்சு கொஞ்சம்; செயல் அதிகம். அவர் கள் பேச்சு ஐரோப்பிய பாஷைகளின் கதம்பமாயிருக் கும். எல்லாத் தேசங்களின் கிராமியப் பேச்சுக்களையும் அவர்கள் கற்று வைத்திருப்பர். எந்த நாட்டிற்குப் போனுலும், அந்த நாட்டிற்கேற்றபடி தமது காரியத் தைச் சாதிப்பர். இவர்களுடைய பூகோளமே வேறு. ஒவ்வொரு நாட்டிலும், காடு மலைகளில் இவர் தலை நகர் உண்டு. அங்கேதான் இவர் சதியாலோசனைகள் நடக்கும். இவர் தலைவன் பகடைமாதிரி அங்குமிங்கும் மாறி இருந்து, ஆணையிட்டு இந்தக் கூட்டத்தை நடத்துவான். இக் கூட்டத்தார் பரம ஏழைகளேயாவர்; இவர் குடிப்பது கூழ்; உடுப்பது கந்தை; இருப்பது படுப்பது எல்லாம் கிடைத்த இடத்திலேதான். இவர் களை அடையாளம் கண்டுபிடிப்பதுகூடக் கடின மாகும். பகலில் இவர்கள் கோமாளிகள் போலவும், தொம்பக் கூத்தாடிகள் போலவும் வருவர். இவர்களால் பல பேர் பணக்காரர்களாவர்; இவர்கள் மட்டும் பயங் கரமான பாபத்தொழில் செய்து, பிண்டத்திற்கும் திண்டாடுவர்.

இவர் மதம் என்ன என்பீர்களா? கேட்டால், "நாங்கள் கிறிஸ்தவர்கள்; அதிலும் கத்தோலியர்

அதிலும் ரோமன் கத்தோலியர்" என்பர். கிறிஸ்து மதப் பண்டிகைகளையும் கொண்டாடுவர்; ஆனல், இவர் அனுஷ்டிக்கும் மதம் சம்மதமேயாம். இவர்களுக்கென்று ஓதுவாரும் உபதேசியாரும் உண்டு. மனிதனுக்கு இரண்டு காதிலும் துளைகள் உண்டல்லவா? உபதேசம் ஒரு காதில் அம்புபோலப் பாய்ந்து, இன்னொரு காது வழியாகப் போய்விடும். உபதேசத்திற்கு பிறகு? உத்தேசந்தான்........தங்களுக்கு ஏற்றவான தொழிலைத்தான் இவர் செய்வர்.

## 2. கொம்ப்-ரா-ஷி-கர் வேலை

கொம்ப்-ரா-ஷி-கர் என்ன செய்துவிடுவர் என்கிறீர்களா? கேளுங்கள். மன்மதனை மந்தியாக்குவர்; அழகியை ஆந்தையாக்குவர்; பிள்ளையைப் பிண்டமாக்குவர்; பிண்டத்தைப் பிள்ளையாக்குவர்; கமலக் கண்ணனைக் காக்காய் கண்ணனாக்குவர்; முல்லை போலச் சிரிக்கும் குழந்தையை மூதேவிபோலாக்குவர்; சிலையிலடித்த விக்கிரகம் போன்ற பிள்ளை தன்னைப் பிரேதம்போலாக்குவர்; கார்மேகம் போன்ற கூந்தலழகியைக் கருங்காட்டுப் பேயாக்குவர். இப்படிச் செய்ய பிரம்மதேவனாலும் ஆகுமா? பிரம்மதேவன் வைத்த மூக்கு, விழி, வாய், கை, கால் எல்லாம் அப்படியே இயற்கையாக வளரும். கொம்ப்-ரா-ஷி-கர் கையில் அகப்பட்டால் கிளிமூக்கு சப்பை மூக்காகிவிடும்; குமுதக்கண் கோட்டான் கண்ணாய்விடும்; மலர்வாய் உதடே இல்லாத சாளை வாயாகிவிடும். டார்வின் மதம் குரங்கை மனிதனாக்கி

யது. கொம்ப்-ரா-ஷி-கர் வேலை மனிதனைக் குரங் காக்குவது. அதுமட்டுமா? கொம்ப்-ரா-ஷி-கர் நெட் டையனைக் குட்டையனுக்குவர்; நிமிர்ந்த முதுகைக் கூனலாக்குவர்; அன்ன நடையைக் கரடி நடை யாக்குவர்; சீமான் வீட்டுப் பிள்ளையை உருக்குலைத் துத் தெருக் கோமாளியாக்குவர். இவைமட்டுமா? குரலைக்கூட மாற்றிவிடுவர். குயில்போன்ற குரலைக் கோழிக் குரலாக்குவர். தச்சன் மரத்தைச் செதுக்கிப் பூவேலை செய்கிறானல்லவா? அதுபோலவே, மனித உடலில் இவர்கள் விகார வேலைகள் என்னென்ன செய்யமுடியுமோ அத்தனையும் செய்து தீர்ப்பார்!

## 3. அவலக்ஷண சாஸ்திரம்

"என்ன காலம்! என்ன மாயம்! இதென்ன குறளி வித்தையா? ஏவலா? எப்படி இவர்கள் ஆளை உருக்குலைக்கிறார்கள்?" என்று பயங்கரமான வியப் பால் நமது மனம் திகைக்கிறதல்லவா? குறளியு மில்லை, கொள்ளிப்பேயுமில்லை. இத்தனை விகாரங் களும் செய்வது பௌதிக ரசாயன சாஸ்திரந்தான்! சாமுத்திரிகா லக்ஷண சாஸ்திரங்களும், உடல் அலங் கார சாஸ்திரங்களும் நமது நாட்டில் இருக்கின்றன. லக்ஷண சாஸ்திரங்களை அனைவரும் கற்பர், விரும்பு வர். **கொம்ப்-ரா-ஷி-கரோ அவலக்ஷண சாஸ் திரத்தை** ஆவலாகக் கற்றறிவர். அப்படி ஒரு சாஸ் திரம் உண்டோ? பேஷாய் உண்டு. மனிதனிடம் நல்லதும் பொல்லதும் இருக்குமட்டும், அழகும் அவலக்ஷணமும் இருக்கத்தான் செய்யும். ஆளை உருக்குலைக்கும் வித்தை சீனாவிலும், இந்தியாவிலும்

இருந்தது. அதர்வண வேதத்தில் பகைவரைக் கெடுக்கும் மந்திர தந்திரப் பிரயோகங்களெல்லாம் உள்ளன. சீனாவில் பெண்கள் காலைக் குறுக்கும் வழக்கத்தை நாம் அறிவோம். ஐரோப்பா, பௌதிக ரசாயன அற்புதங்களைச் செய்யு முன்பே, சீனாவில் பல அரிய புதுமைகள் விளங்கின. நெசவு, அச்சு, காகிதம், பீரங்கி, மயக்க மருந்து (குளோரபாரம்), ஆளை உரு மாற்றும் வித்தை எல்லாம் சைனாவில் முன்னே இருந்தது. சைனா, பழம் பிடிவாதங்கொண்டு, கால வேகத்திற்கேற்றபடி தனது கலையை முன்னேற்ற வில்லை. ஐரோப்பா கிழக்கிலிருந்துதான் கற்றதை யெல்லாம் காசாக்கி, மேன்மேலும் ஆராய்ச்சியால் வளர்த்துச் செயலாக்கி, வாழ்வு தழைக்கப் பயன்படுத்திப் புகழ்பெற்றது.

அவலக்ஷண சாஸ்திரமும் கிழக்கிலிருந்தே கொம்ப்-ரா-ஷி-கருக்கு எய்தியது. ஏனெனில், இந்தக் கூட்டத்தார் ஆசியாவிலும் சுற்றித் திரிவதுண்டு. தமக்குக் கிடைத்ததைக்கொண்டு மேன்மேலும் ஆராய்ந்து, ஆராய்ந்து பரிபூரண அவலக்ஷண சாஸ்திரத்தை நிருஷ்டித்தனர் கொம்ப்-ரா-ஷி-கர். இவர் சாஸ்திரத்தில் சில துணுக்குகள் ரண வைத்திய நூலிற் புகுந்துள்ளன.

கொம்ப்-ரா-ஷி-கர் உடல் கூறு நன்குயறிவர். இன்ன அவலக்ஷணத்திற்கு இன்ன நரம்பை மாற்ற வேண்டும் என்று அவர்களுக்குத் தெரியும். முதலில் மயக்க மருந்தை (*chloroform*)த் தருவர். ஆள் நினைப்பற்று மயங்கிக் கட்டைமாதிரி விரைத்துப் போவான். பிறகு, கந்தகத்துடன் ஏதேதோ ரசா

களும், அரசரும்கூடக் கொம்ப்-ரா-ஷி-கர் துணையை நாடினர்.

## 5. பூதகி வேலை

ஏன்? எதற்கு? தங்கள் போட்டி பொறாமைத் தீக்கு நெய் வார்க்கத்தான்!

“எனக்கு ஒரு குழந்தையைக் காணோம்; அந்த வில்லியத்திற்குப் பொற்சிலைபோலக் குழந்தையா! அந்தக் குழந்தையை உருக்குலைத்துக் கோமாளியாக்கிப் பார்க்கவேண்டும்; அப்போது என் வயிற்றெரிச்சல் தீரும்,” என்று ஒரு பிரபுவின் மனம் எரியும்; அவன் சீமாட்டி அந்த எரியில் எண்ணெய் வார்ப்பாள். உடனே கொம்ப்-ரா-ஷி-கரை இரகசியமாகக் கூப்பிட்டுப் பணம் தந்து, “நடக்கட்டும் வேலை,” என்று உதடசைப்பர். அது போதும். மறுநாளே தொட்டிலில் இருந்த குழந்தையை ஒரு பூதகி வந்து தூக்கிச் செல்வாள். குழந்தைக்கு கொம்ப்-ரா-ஷி-கோ வேலை நடக்கும். கிளி மூக்கு சப்பையாகும்; உதடு போய்விடும்; முப்பத்திரண்டு பல்லும் திறந்த வாக்கில் இருக்கும்; கன்னம் மந்தி மாதிரிச் சுருங்கும். பத்து பனிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு கோமாளி தெருத் தெருவாக விகடம் செய்து பிச்சையெடுத்து வருவான். அவன் பிச்சைப் பணத்தைப் பங்குபோட்டுப் பிடுங்கிக்கொள்வர் கொம்ப்-ரா-ஷி-கர். அந்தக் கோமாளியே திருட்டுப் போன செல்வ மைந்தனுவான். அவனைப் பெற்றோர்கூட அடையாளம் கண்டுபிடிக்க முடியாது.

இப்படிப்பட்ட கோமாளிப் பிழைப்பு அக் காலம் வலுத்தது. எல்லாம் கொம்ப்-ரா-ஷி-கர் செய்யும் பூதகி வேலைதான்!

அரசர் அந்தப்புரங்களுக்கு விநோதமான அடிமைகள் வேண்டும். அவர்களைப் பார்த்தால் பெண்கள் வயிறு குலுங்கச் சிரிக்கவேண்டும்; ஆனால், காதல் என்ற உணர்வே அந்த அடிமைகளுக்கு இருக்கக்கூடாது. ஏவிய வேலை செய்யும் யந்திரம் போலே அவர்கள் இருக்கவேண்டும். இப்படிப் பட்ட அடிமைகளைப் படைப்பவர் கொம்ப்-ரா-ஷி-கரே யாவர். மர்மஸ்தானங்களில் கொம்ப்-ரா-ஷி வேலை செய்து அலிகளாக்கி அடிமைத் தொழிலுக்குக் குழந்தைகளை விற்பவர் கொம்ப்-ரா-ஷி-கர்.

அக்காலப் பிரபுக்களுக்கும், சீமாட்டிகளுக்கும் ஒரு தனிப் பைத்தியமுண்டு; அது என்னவென்றால், தாங்கள் ரதி-மன்மதன்போலிருக்கவேண்டும். தமக்கு அவலக்ஷணமான அடிமைகள் வேண்டும் என்பதாம். " எனக்குக் காலுறை (stockings) போட ஒரு குரங்கு மூஞ்சிப் பையன் வேண்டும்; கோச்சு வண்டியில் என் பின்னால் உட்கார்ந்துவர இரண்டு சப்பை மூக்கர் வேண்டும். எனக்குத் தேயிலை ஆற்றித்தர ஒரு கூனன் வேண்டும். என்னைக் காணும்போதெல்லாம் கோழி மாதிரி, ஆடுமாதிரி, நாய்மாதிரி சத்தஞ் செய்து வரவேற்க இரண்டு அடிமைகள் வேண்டும். எனக்கு இரகசியச் செய்திகள் அனுப்பிவைக்க, நான் போகும் இரகசிய இடங்களுக்குப் பின்னே வரப்போக ஒரு தொந்திக் கோமாளி வேண்டும்," என்றெல்லாம்

பிரபுக்கள் வீட்டிலிருந்து ஆபாச விண்ணப்பம் வரும். அதை நிறைவேற்றுவோர் கொம்ப்-ரா-ஷி-கரே யாவர்.



மன்னர் அரசியற் சூழ்ச்சிகளிலும் கோம்ப்-ரா-ஷி-கருக்குச் சரியான வேலையுண்டு. ஒரு பிரபுவை மட்டந்தட்டி அவர் சொத்தில் மண்ணைப்போட வேண்டுமானால், உடனே அங்கே கொம்ப்-ரா-ஷி-கோ வேலை நடக்கும். சீமாட்டி வயது காலத்தில் ஒரு அழகான மகனைப் பெறுவாள். அக் குழந்தை ஐந்து வயதாகித் தெருவில் விளையாடும். அரசன் கண்ஜாடை காட்டினால் போதும். "அம்பி, வா, மிட்டாய் தரு கிறேன்," என்று கூட்டிச் செல்வாள் ஒரு அழகான பெண்; தெருக் கோடிக்குச் சென்றதும் அப் பெண், குழந்தை கையில் மிட்டாய் கொடுத்து மறைவாள். இன்னொரு பெண், "என் செல்வக் கிளியே, வா, ஆப்பழம் வாங்கித்தாறேன்," என்று குழந்தையை இடுப்பில் எடுத்து ஒரு இரகசியமான சந்திற்கு விரை வாள். ஒரு பழக்காரன் பெரிய கூடையேந்தி வரு வான். குழந்தைக்கு ஒரு பழந்தருவான். அது தின்னும்போதே கூடையில் குழந்தையை வாரி வைத்து, ஒரே ஓட்டத்தில் ஒரு வீட்டிற்குள் நுழை வான்; மறுநாளே குழந்தை வேறொரு ஊரில் ஒரு மலைக்காட்டில் இருக்கும்; அங்கே கொம்ப்-ரா-ஷி-கோ வேலை நடக்கும். புத்திரசோகத்தால் பிரபு இறந்துபோவான். அவன் சொத்து சர்க்காரால் பறிமுதலாகும். அல்லது மன்மதன்போலக் குழந்தை

தொட்டிலிற் படுத்திருக்கும். மறுநாள் அதே தொட்டிலில் ஒரு எட்டேகால் லக்ஷணம் "வியா, வியா" வென்று கத்தும். "ஐயோ, என் அழகுக் குழந்தையைக் காணோமே! இந்த பிரம்மஹத்தி எங்கு வந்ததடா!" என்று தாய் அழுது தவிப்பாள். அந்த அழகான குழந்தை இரண்டொரு மாறுதல்களுடன் இன்னொரு சீமாட்டியிடம் வளரும்! "என் ஜேம்ஸ், எவ்வளவு அழகாயிருக்கிறான்," என்று வளர்ப்புத் தாய் மகிழ்வாள். ஜேம்ஸின் சொந்தத் தாய் அவலக்ஷணக் குழந்தையைக் கட்டியழுவாள்! இப்படிச் சீமாட்டிகளின் பொறாமைச் சூழ்ச்சிகளிலெல்லாம் கொம்ப்-ரா-ஷி-கர் பங்கு கொண்டுதவுவர். அவர் ஏழை யெளியவர் குழந்தைகளை விலைக்கு வாங்கிச் செல்வர். தொட்டில்களில் விட்டு மாயம் புரிவதும் உண்டு. பிரசவ அறைகளிலும் அப்படிப்பட்ட திரிசமன் ஏராளமாக நடக்கும். இவர் சுழிவிளையாடல்கள் இன்னும் பலவாம். இவர் அட்டூழியங்களை அடக்கக் கடுமையான சட்டங்களும் பிறந்தன. அச் சட்டங்கள் இவர்களை நேராகத் தூக்குமேடைக்கே அனுப்பின. ஆனால் பிரபுக்களின் சலுகையிருந்தமட்டும் அவர்கள் பாடு வேட்டைதான். பிரபுச் சித்தமோ—அது ஒரு பயங்கரப் பித்தமாகும்! தாம் சொல்வதற்கெல்லாம் அடிமைகள் '**ஆமாஞ் சாமி**' போடவேண்டும்; அவர் மனப்படியே பாபம், பயங்கரம் எல்லாம் செய்யவேண்டும். தமது எதிராளிக்கு எவ்விதமான இரக்கமும் காட்டக்கூடாது. கட்டளையை மீறக்கூடாது. மீறினால் —"போடு தூக்கு!" இரண்டே வார்த்தை. ஆள் கொலையாளி கையில் அகப்பட்டுத் தூக்குமேடையில்

தொங்குவான். தமக்கு உதவி செய்தவரையே கோபம் வந்து, கொலைசெய்த மஹாப்பிரபுக்களும் உண்டு.

## 6. கடுஞ் சட்டம்

ஸ்டூவர்ட் மன்னர் காலத்தில் கொம்ப்-ரா-ஷி-கோ வேலை பலமாக நடந்தது. சட்டத்தை அசட்டை செய்தனர் மன்னரும் பிரபுக்களும். அதிலும் ஜேம்ஸ் II (*James II*) காலத்தில், கொம்ப்-ரா-ஷி-கருக்குச் சுக்கிரதசை யடித்தது. ஆயிரக்கணக்கான தாய்மார்கள் பிள்ளைகளைப் பறிகொடுத்து அலறினர். ஆயிரக்கணக்கான குழந்தைகள் உருக்குலைந்தன. தெருக் கோமாளிகள் வலுத்தனர். அடிமைகள் வலுத்தனர். அக்கால இங்கிலாந்து மன்னர் அரண்மனையில் இராஜா எழுந்திருக்க என்ன செய்யவேண்டும் தெரியுமா? "கொக், கொக் கொக்கர கோழீ இஇ!" என்று ஒரு அடிமை கோழியாய்க் கதறவேண்டும். அப்போதுதான் ராஜா கண்ணைத் துடைத்துக் கொட்டாவி விடுவார்.

நமது நாட்டிலும்,

கொக் கொக் கோழி
கோழி முட்டை!
வெள்ளைக்காரா
வெடிஞ்சு போச்சு!

என்று இன்னும் சொல்லுகிறோமல்லமா? இது 18-வது நூற்றாண்டில் நமது தமிழகத்திற் புகுந்த வெள்ளைப் பட்டாளங்கள் பட்லர்களுக்குச் செய்து வைத்த சீமைப் பழக்கமேயாகும்.

மனிதக் குரலைக் கோழி குரலாக்குவது கொம்ப்-ரா-ஷி-கோ வேலை. ஜேம்ஸ் II தனது அரசியற் சூழ்ச்சிகளுக்குக் கொம்ப்-ரா-ஷி-களைப் பயன்படுத்திக் கொண்டான். இருவரும் கத்தோலியர்; மேரியடியார். ஆதலால், பிரியம் அதிகமானது. தனக்கு ஆகாத பிரபுக்கள் வம்சத்தை அழிக்கவும், அவர் மைந்தரை உருக்குலைக்கவும், அலிகளாக்கவும், மறைக்கவும், சந்ததியற்றவர் சொத்தைக் கைப்பற்றவும், கொம்ப்-ரா-ஷி-களைப் பயன்படுத்திக் கொண்டான் ஜேம்ஸ் II. இந்த அட்டூழியங்களெல்லாம் எத்தனை நாள் நடக்கும்! கொடுங்கோலும், ஆகாசவாணமும் எவ்வளவு தூரம் கிளம்பும்? ஒன்றுவது சார்லேஸைத் தூக்கிலிட்ட ஆங்கில வீராவேசம், விடுதலை வெறி கொண்டு 1688-ல் இரண்டாவது ஜேம்ஸைச் சிம்மாசனத்தினின்று உருட்டித் தள்ளியது. கொடுங்கோலை முறித்தெறிந்தது. ஜேம்ஸ் II பிரான்ஸிற்குச் சென்று பதினாலாவது லூயியைச் சரணடைந்தான். ஸ்டுவர்ட்டு சுயேச்சாதிகாரம், பிரெஞ்சு மண்ணுடன் மண்ணானது. ஜேம்ஸின் மாப்பிள்ளை ஆரஞ்சு வில்லியம் (*William of Orange*) உலாந்தாவில் இருந்தான். அவன் தாராள நோக்கமுடையவன், வெற்றி வீரன். அவனையே ஆங்கிலேயர் தமது மன்னனாக அங்கீகரித்தனர். வில்லியம் III-ன் காலம் முதல் இங்கிலாந்திற்கு ஒரு புதிய சகாப்தம் தொடங்கியது. அவன் காலம் முதல் ஆங்கிலேயர் செல்வாக்கும் வெற்றியும் உலகில் வலுத்தது. வில்லியம் III நீதிமான்; பொதுஜன நன்மையை மதிக்கும் செங்கோலன். கொடுங்கோல் மன்னரால் ஜனங்கள் பட்ட

துயர்களுக்குத் தன்னாலான பரிகாரங்களை அவன் செய்தான். கொம்ப்-ரா-ஷி-கோ கொடுமையால் பிள்ளையிழந்த தாய்மார் படும் துயரை அவன் நேரில் கண்டான். அவலக்ஷணக் கலை செய்யும் கொலைகளைக் கண்டு சினங்கொண்டான். உடனே கொம்ப்-ரா-ஷி-கர்மேல் கடுமையான சட்டத்தைப் பிரயோகித்தான்:

அதன்படி (1) பிள்ளை விற்பனை கொடிய குற்றமாகும். (2) பிள்ளை விற்பவர், வாங்குவோர் இருவருக்கும் பலமான தண்டனை கிடைக்கும். (3) தெருவிற் செல்லும் சந்தேகப் பேர்வழிகளைப் போலீசார் பிடித்து விசாரிக்க வேண்டியது; கேட்ட கேள்விக்குச் சரியான பதில் வராவிட்டால் தண்டிக்கவேண்டியது. (4) கொம்ப்-ரா-ஷி-கரைக் கண்டுபிடித்து, இரும்பைப் பழுக்கப் பழுக்கக் காய்ச்சி இவ்வாறு சூடு போடவேண்டியது: முதுகில் R (*Rogue*=போக்கிரி), இடது புஜத்தில் T (*Thief*=திருடன்), வலது புஜத்தில் M (*Manslay*=கொலைக்காரன் இவனைக் கொல்லு) இந்த மூன்றெழுத்துக்களையும் முத்திரா தானமாகப் பெற்றவன் பிழைப்பதேது? (5) கொம்ப்-ரா-ஷி-க்கு உடந்தையாக வேஷம்போடும் நடிகர்கள் யாராயிருந்தாலும் அவரைப் பிடித்து நெற்றியில் P (*Pilori*=தண்டனை சக்கரத்தில் வைத்துச் சுற்றல்). இப்படித் தண்டனைப்பட்ட செல்வர் சொத்து சுகங்களெல்லாம் பறிமுதலாகும். அவர்களுக்குரிய தோட்டங்களெல்லாம் அழிக்கப்பெறும். (6) கொம்ப்-ரா-ஷி-கருக்குப் பரிந்து பேசுவோர் ஆயுட் கைதியாகக் கடுஞ்சிறை காப்பர். கொம்ப்-ரா-ஷி-கோ குற்றவாளிகள் பெண்களானால் அவர்களை ஒரு விநோதமான

தண்டனையால் உயிரை வாங்குவர். கமலை ஏற்றம் போல ஒரு தண்டனை மரம் இருக்கும்; அது ஒரு ஏரி அல்லது நதியோரம் இருக்கும்; அதன் மேல் முனையில் ஒரு நாற்காலி போட்டிருப்பர்; அந்த நாற் காலியில் கொம்ப்-ரா-ஷி-கோ பெண்ணை ஏற்றி ஏற்றத் தை இறக்கி அவளைத் தண்ணீரில் பல தடவை ஆழ்த்துவர். "எத்தனை தாய்மார் வயிற்றெரிச்சலை நீ கொட்டிக் கொண்டாய்! உன் உயிரைக் கொல்லும் இத் தண்ணீர் அவர் வயிற்றெரிச்சலை அணைக்கட்டும்," என்று கொலைகாரர் கூச்சலிடுவர்.

இவ்வாறு கடுமையான சட்டம் அமுலுக்கு வந்ததால் கொம்ப்-ரா-ஷி-கர். "இனி நமது பிழைப்பு நடக்காது," என்று தாம் உருக்குலைத்த குழந்தைகளை எங்கெங்கோ காடு மலைகளில் விட்டுவிட்டுப் பல திசைகளில் ஓடி ஒளிந்தனர்................

## 7. புயல், பனி, வாடை!

இங்கிலாந்தில் டிசம்பர்-ஜனவரி மாதம் வீறிட் டடிக்கும் வாடை பொறுக்க முடியாதது. அதிலும், 1689 டிசம்பரிலிருந்து இரண்டு மாதங்கள் அடித்த வாடையைப் பயங்கரமான ஊழிப்புயல் என்றே சொல்லவேண்டும். மாளிகைச் சுகத்தில், கணப் பண்டை உட்கார்ந்து ஒரு புட்டி தட்டிவிட்டுச் சுருட்டுப் புகைக்கும் கனவான்களுக்கு ஒன்றுமில்லை! ஏழைகள்? ஆ, அந்த இரண்டு மாதமும், புயல் வாடையில் அடிபட்டு இறந்த ஏழைகள் ஆயிரக் கணக்கானவர். அந்த ஆண்டு மாந்தர் படித்த பைபிள் களில் "வறியரை நலித்த வாடை" என்று குறித்

தனர். ஆடையின்றி, வாடையில் மெலிந்து, தெருக்களிலும், மைதானங்களிலும், மலைகளிலும், காடுகளிலும் பெண்கள் விறைத்துக் கிடந்தனர்; சத்தற்ற அவர் மார்பில் வாய் வைத்துக்கொண்டே குழந்தைகள் இறந்தொழிந்தன. மனைவி மக்களைக் காணமல் ஏங்கி, சோற்றுக்குத் திண்டாடி, ஆண் மக்கள் போரில் அடிபட்ட வீரர்போலே அங்கங்கே விழுந்து கிடந்தனர். அந்தந்த ஊர் அதிகாரிகள், தாம் பார்த்தவரையில் இறந்த மக்கள் பெயர்களைக் குறித்து வைத்து, அவர் ஆவி கரையேறக் கோயில் மணி முழக்கினர்! அப்படி எழுதிவைத்த குறிப்புகளை இன்றும் காணலாம். அந்த ஆண்டில், தேம்ஸ் நதி பனியுறைந்தது; அப் பனிப் படலத்தின்மேல் கரடிகளும், காளைகளும் நடமாடின. மாலுமிகள் ஊன் வாட்டிச் சாப்பிட்டனர். பனி அவ்வளவு கட்டியிருந்தது. ஒருவர் முகம் இன்னொருவருக்குத் தெரியாமல் மங்கல் படர்ந்தது; வானும், கதிரும் மேகப்படலத்திற் புதைந்தன.

இப் பனிப்புயல் வாடை, தனது கொடூரம் அத்தனையும் காட்டியது போர்ட்லாந்துக் கரையிலேதான் (*Portland*). நாம் போர்ட்லந்து ஸெமண்டைப் பார்த்திருக்கிறோம்; அது இந்தப் போர்ட்லாண்டுப் பாறைகளை வெட்டிச் செய்யப்படுவதே. நமது கதைக்குரிய காலத்தில், இத் துறைமுகம் அனுதரவாயிருந்தது; அதன் இயற்கைச் செல்வத்தில் யாரும் கடப்பாறை போட்டுக் கோரப்படுத்தவில்லை. போர்ட்லாந்து துறைமுகம் அப்போது பிரபலமாயில்லை. அதில் பல பாறை வளைவுகள் உண்டு; அவற்றில்

இரண்டு செங்குத்தான பாறைகளிடையே குறுகிச் சிறுகிய ஒரு வளைகுடா இருந்தது. அங்கே மனித வாடையே கிடையாது. அங்கே போக மனிதர் அஞ்சுவர். அந்தக் குறுகிய இடத்தை நினைத் தாலே நெஞ்சு பகீர் என்னும். ஏன்? கொலையாளி களுக்கும், கடல் திருடருக்கும், வழிபறித் துண்பவருக்கும், மோசக்காரருக்கும் அதுவே சாம்ராஜ்யம் என்றால் கொம்ப்-ரா-தி-கருக்கும் அதுவே இடம் என்று சொல்லத் தேவையில்லை. அங்கே குவிந்துள்ள மண்டையோடுகளைக் கண்டால், இது போர்க்களமோ, கொலைக்களமோ என்று தோன்றும். இந்த இடம் உன்னதமான பாறை சூழ்ந்தது. இரண்டு பாறைகளுக்கிடையே உள்ள வெளியைத் தாண்டியே துறைமுகம் சேரவேண்டும். அப்படித் தாண்ட அங்கே பாலமில்லை. இப்புறம் பாறையைத் தாண்டி அப்புறம் பாறைக்குச் சென்றே திருடரும், கொலைஞரும் தமது பாவத்தொழிலை நடத்துவர். இரண்டு பாறைகளுக்கும் இடையே ஒரு பலகையைப் போட்டு, அவர் தாண்டிச் செல்வர். தமது காரியம் முடிந்து திரும்பும்போது, பலகையை நீக்கி ஒளித்து வைப்பர். இவர்கள் பாதகச் செயலைக் கண்டு, கடல் ‘குய்யோ முறையோ’ என்று வருஷக் கணக்காகக் குமுறியழுகிறது! யார் கேட்பது? அதோ, அந்த அபாயமான பாறையைச்சுற்றி எத்தனை கழுகு கள் வட்டமிடுகின்றன பாருங்கள்! அத்தனைக்கும் அங்கே பிணத்தீனி, நிணத்தீனியுண்டு! இப்பாறை களில் ஆடுகளே தாவித்தாவிச் செல்லமுடியும்; இவை மனிதர் நடக்க இயலாதவை. அவ்வளவு கரடு, முரடு,

மேடு, பள்ளம், நெரடிகள் நிறைந்தவை. நடக்கப்படித் தோன்றலாம்; இதோ இவர்களுக்கு ?

## 8. அவசரம்! அவசரம்!

அந்திப்பொழுது; புதர்ப்புலி மாதிரி மெல்ல மெல்ல உலகை இருள் கவர்ந்துகொண்டிருக்கிறது. புயல் வீறிடுகிறது; எவரும் வரத்துணியாத இந்தப் பாறையில், அவசரம் அவசரமாக எட்டுப்பேர் வருகின்றனர்; அவசரம் அவசரமாக இரண்டு பாறைகளுக்கிடையே பலகையைப் போடுகின்றனர். அவசரம் அவசரமாக மூட்டை முடிச்சுகளைச் சுமந்துகொண்டு அதைத் தாண்டிச் செல்கின்றனர். அவர்களில் இருவர் பெண்டிர்; அவர்கள் ஆயிரம் ஒட்டுப்போட்ட சட்டை துணிகளை அணிந்து, மூட்டை தூக்கி இறங்குகின்றனர். ஆண்கள் ஒட்டுக் கந்தை யணிந்து, தலையில் ஒரு நீண்ட தொப்பி வைத்துக்கொண்டு, அதன் அகன்ற விளிம்புகளால் முகத்தை மறைத்துக் கொண்டு இறங்குகின்றனர். எல்லாம் ஒட்டுக் கந்தல் மயம்; கந்தலுக்கு ஆண், பெண் என்பதில்லை. அவர் உடைகளுக்கும் அவ்வாறே. எட்டுப் பேரும் அஷ்ட தரித்திரத்தின் பிரதிநிதிகள் என்று சொல்வோம்; அவ்வளவு பஞ்சைகள்; அவர்கள் நெஞ்சைப் பார்த்தால், "வினையின் விளைவு" என்போம். இருளும் புயலும், இந்தத் தனிப்பாறையும் போலவே அவர் தோற்றமும் பயங்கரமாயிருக்கிறது. ஏதோ கரும் பேய்க் கூட்டங்கள் நடப்பதுபோலிருக்கிறது, இவர் காட்சி. எல்லாம் ஒரே கந்தல், ஒரே கரிக்கோலமாயிருப்பதால் இவர் இன்னார் என்று அடையாளம்

கண்டுபிடிக்க முடியாது. இவர்களில் ஒருவன் இக் கூட்டத் தலைவன் என்பது மட்டும் விளங்கும். அவனது நடையும், பாகையும் அவ்வாறு காட்டு கின்றன.

இவர்களுள் ஒரு பையனைக் காண்கிறோம்; அவனுக்குப் பத்துப் பதினொரு வயதிருக்கலாம். அவனுக்கும் ஒரு ஓட்டுக் கந்தல் அணிந்திருக்கிறார் கள். பாவம், குழந்தை வாடையால் நலிந்து நடுங்கு கிறான். அவன் தலையில் பெரிய மூட்டைகளை ஏற்று கின்றனர். குழந்தை வாயைத்திறக்காமல், பயந்து நடுங்கித் தனது சக்திக்கு மேலான மூட்டையைச் சுமந்து தள்ளாடிக்கொண்டு, மரப்பலகையில் நடந்து இறங்குகிறான். அவன் அனாதைபோலத் தோன்று கிறது. அவனுக்கு இரங்குவார் யார்? இக் கல்நெஞ் சரோ அவனை ஒரு அடிமைபோல நடத்தி வேலை மட்டும் வாங்குகின்றனர். எல்லா மூட்டைகளும் கரை சேர்ந்தன; எட்டுப் பேரும் கடற்கரைக்குத் தாவிச் செல்கின்றனர்.

அந்த அத்துவானக் கரையில், ஒரே ஒரு படகு நிற்கிறது; அது ஸ்பானியப் படகென்று தெரிகிறது. அதில் ஒரு தலைவனும், இரண்டு படகோட்டிகளும் இருக்கிறார்கள். அது கடற்கொள்ளைக்காரர் உபயோ கிக்கும் இரகசியப் படகுதான்! அதன் முகப்பில் கன்னி மரியாள் உருவம் காண்கிறது. அதனடியில் *Matutina* (மதுதினா) என்று அப் படகின் பெயர் காண்கிறது. படகில் விளக்கில்லை; ஏற்றாத விளக் கொன்றுள்ளது; அது பின்புறம் மறைக்கப்பெற்றுள் ளது. அதை ஏற்றினால், படகு தள்ளுவதற்கு வழி

தெரியும்; கரையிலிருப்பவர் அந்த வெளிச்சத்தைப் பார்க்கமுடியாது.

அவசரம், நிரம்ப அவசரம்! மூட்டைகளைப் படகில் தூக்கிப்போடுகின்றனர்! பிஸ்கோத்து மூட்டைகள், மீன் மூட்டைகள், ஸூப் (கொழும்பு) பாத்திரம், சாராயப் பீப்பாய்கள், பீர் பெட்டிகள், தார் பெட்டிகள், பிராந்திப் போத்தல்கள், உடுப்புப் பெட்டிகள், நகை நாணயப் பெட்டிகள், திவர்த்திகள், அவை எரிய வேண்டிய கந்தல், எண்ணெய் முதலியன, கைக்கு அடக்கமான தோல் பெட்டிகள், தங்கள் தொழிலுக் கேற்ற ஆயுதங்கள் அடங்கிய பெட்டிகள் முதலிய எல்லாச் சாமான்களும் படகேறின. பெண்கள் படகேறினர்; பையன் சாமான்களை யெல்லாம் கீழே அனுப்பிவிட்டு இன்னும் பாறைமேலேதான் இருக்கிறான். மற்றவர் ஏதோ காதுடன் காதுவைத்துப் பேசுகின்றனர். அவர் பேச்சு பல சொற் கதம்பமாயிருக்கிறது. சட்டென்று அவர்கள் படகில் ஏறுகின்றனர். பையனும் படகேறத் தாவிவருகிறான். "வந்தால் கடலில் தூக்கிப் போடுவோம். ஹூம்! நில் அங்கே" என்று மிரட்டுகின்றனர்; தலைவன் இரண்டு பாறைகளுக்கும் இடையிலுள்ள பலகையை 'விருட்'டென்று கடலில் தள்ளுகிறான். பிறகு தாவிச்சென்று படகேறுகின்றான். "உம்...." என்கிறான். கட்டுக்கயிறு ஒரே வெட்டில் அறுந்தது. துடுப்புகள் வெகு வேகமாக நீரைத் துழாவின; படகு அவசரம், அவசரமாகக் கடலை உழுது செல்லுகிறது.

குழந்தை படகைப்பார்த்து அப்படியே திகைத்து நிற்கிறான்.

## 9. இவர்கள் யார்?

பஞ்சைக் குழந்தையை இந்தப் பாழும் பாறையில் விட்டுச் செல்லும் இக் கிராதகர் யார்? புயல் வாடை, இருள், இரவு சூழும் கடலில் இவர்கள் அவசரம் அவசரமாகப் படகில் செல்லுவானேன்?

இவர்களே கொம்ப்-ரா-ஷி-கர். **வில்லியம் III** ஏற்படுத்திய குற்றச் சட்டத்திற்குப் பயந்து இவர்கள் இப்படித் தப்பியோடுகிறார்கள். இந்தப் போர்ட்லாக் துத் துறைமுகத்திலேயே இவர்கள் போக்கு வரத்து இரகசியமாக நெடுநாள் நடந்து வந்தது. இக் கொம்ப்-ரா-ஷி-கர் ஸ்பானியரேயாவர். இவர், இங்கிலாந்திலிருக்கும் குழந்தைகளைக் கொண்டுபோய் ஸ்பானியாவில் விற்பர். ஸ்பானியக் குழந்தைகளை உருக்குலைத்து இங்கிலாந்தில் விற்பர்! இக் குழந்தை விற்பனைக்காக இவர்கள் இரகசியக் கூட்டமாகச் சேர்ந்து வேலைசெய்கிறார்கள். ஜேம்ஸ் காலத்தில் இவர்களுக்குத் தொழில் நன்றாக நடந்தது. வில்லியம் III ஏற்படுத்திய சட்டத்தால் அது வேரோடழிந்தது. இவர்களிடம் யாரோ இக் குழந்தையைத் தந்திருக்கிறார்கள். அக் குழந்தையை இக் கொடியர் உருக்குலைத்து, அடிமை மாதிரி வேலை வாங்கி, முடிவில் இப்படிப் பாழிடத்தில் 'சாகட்டும்' என்று விட்டுவிட்டார்கள்.

ஏன்? ஊர்க்காலிகள், கொள்ளைக்காரர், சோதாக்கள், கொம்ப்-ரா-ஷி-கர் இவரனைவரையும் புதிய சட்டம் கடுமையாகத் தண்டித்தது. யாரிடமாவது அனுமதத்தான குழந்தையிருந்தால், உடனே அதிகாரிகள் அவரைக் கைதியாக்கி விசாரித்துத் தண்டிப்பர்.

பெற்றோர்கூடக் குழந்தை தமதே என்று நிரூபிக்க வேண்டியிருந்தது. சட்டம் அவ்வளவு கண்டிப்பாக அமுலிலிருந்தது. "இந்தக் குழந்தை ஏது? தாய் பெயர் என்ன? தகப்பன் பெயர் என்ன? உன் ஊர் ஏது? எங்கே வந்தாய்? தொழில்?" என்று கிண்டிக் கிண்டிக் கேள்வி கேட்பர் போலீஸ்காரர். கொம்ப்-ரா-ஷி-கோக் கூட்டம் என்று தெரிந்தால் தூக்குமேடை தான் கதி! 'கையிலே குழந்தையிருந்தால் கழுத்திலே சுருக்கு விழும். குழந்தை அபாயமான பொருள்' என்று அஞ்சி, தாம் வாங்கிய அல்லது திருடிய குழந்தைகளைக் காடு மலைகளில் அப்படி அப்படியே விட்டுவிட்டுக் கொம்ப்-ரா-ஷி-கர் தப்பி ஓடினர். இதனால், சர்க்காருக்கு ஏராளமான அனாதிக் குழந்தைகளும், அவலக்ஷணக் குழந்தைகளும் கிடைத்தன. குழி, குட்டை, குப்பைத் தொட்டி, கிணறு, காடு மலைகளில் இறந்துகிடந்த குழந்தைகள் மிகப்பல. துறைக்குத் துறை ஒற்றர் படகுகளைச் சோதித்தார்களாகையால், இப்படிக் குழந்தையை அநாதையாக விட்டுச் செல்லுகின்றனர் பாவிகள்! குழந்தையின் கதி யென்ன?

## 10. அறியாப் பாலகன்

ஒரு அன்பான வார்த்தையில்லை; 'ஜீவனுயிற்றே அதற்குப் பசி, தாகம் உண்டே' என்றுகூட கவனிக்கவில்லை. ஒரு பெரிய ஆள் போட்டுக்கொள்ளும் கந்தல் குடுத்துணியை அவன்மேல் போர்த்திவிட்டுப் பேசாமற் சென்றனர், கொம்ப்-ரா-ஷி-கர். பையனும் வாயைத் திறக்கவில்லை; அவர்களும் அவனை விரும்ப

வில்லை. அவனும் அவர்களை விரும்பவில்லை. அவன் யாரோ, அவர் யாரோ! சிறு குழந்தையாயிருப்பது முதல் அவன் அவர்களிடம் வளர்ந்தான்; அவர்கள் அவனை விகாரப்படுத்தித் தங்கள் பிழைப்பிற்காகப் பயன்படுத்திக்கொண்டார்கள்; அவர்களை அவன் அறியான்; தன்னையும் அறியான். மயானக்கரையி லிருந்து கையைக் கழுவிச் செல்வதுபோலவே, அவர் கள் இவனை ஒழித்துச் செல்கின்றனர்; பையனும் ஏதும் பேசாமல் அந்தப் பாழிடத்தினின்றும், படகையே பார்த்து நின்றான். போர்ட்லாந்து துறை முகம் இருபுறமும் பாறைச்சுவர்கள் மேவியது; அவற் றைத் தாண்டுமட்டும் படகு கொஞ்சம் மெதுவாகச் சென்றது; பிறகு வெகு விரைவாகச் சென்று மறைந்தது.

வரட்டுத் தனிமை! பையன் சுற்றிப் பார்த்தான்; நாம் இன்ன இடத்தில் இருக்கிறோம் என்றுகூட அவனுக்குத் தெரியாது—அறியாப் பாலகன்! முன்னே புயல் வீசி "ஹோ" என்று கோடிப் பேய் கள்போல் அலறும் கார்கடல்; பின்னே கரடுமுரடான அடுக்குப் பாறைகள்; மேலே மேகம் படர்ந்த வானம்; சுற்றும் வீறிட்டடிக்கும் பனிவாடை. மனிதர் அரவமேயில்லை; கொலையாளி முகம்போலப் பனி யிருள் படர்ந்தது; கீழே விளக்கில்லை; மேலே ஒரு நட்சத்திரங்கூட இல்லை. வெறுங் கால். கந்தல் ஆடை யுடன் பையன் அனாதையாக நிற்கிறான். அழவில்லை; அஞ்சவில்லை; சட்டென்று திரும்பினான்; விதி விட்ட படி சென்றான். செங்குத்தான பாறையில் தொத்தி ஏறினான்; பனியால் வழுக்கி வீழ்ந்தான். மீண்டும் கை

காலைப் பலமாக ஊன்றி ஏறினன் ; ஒரு பள்ளத்தாக்கு வந்தது ; பனியால் வழுக்கி அதில் வீழ்ந்தான் ; நல்ல வேளையாய் அங்கொரு செடி இருந்தது. அதைப் பற்றிக்கொண்டு மற்ருெரு பாறைக்குத் தாவினன். மறுபடி ஒரு செங்குத்தான பாறை; அதிலும், உயிரைப் பிடித்துக்கொண்டு ஏறினன். பிறகு ஒரு பீடபூமி; அதில் பனி உறைந்திருந்தது ; இரண்டு மூன்று தடவை அப் பனி வழுக்கிவிட்டது. அதையும் சமாளித்துக்கொண்டு பையன் பொறுமையுடன் மேற்சென்ருன். சுடுகாடு மாதிரி எங்கும் மௌனம் ; 'ஏதாயினும் குடியிருக்குமா, விளக்குத் தெரிகிறதா' என்று சுற்றிப் பார்த்தான்; ஒன்றுந் தெரியவில்லை. தார் பூசியதுபோல இயற்கையின் முகம் கன்னங் கரேலென்றிருந்தது; இடையிடையே பனிக் கும்பல்களே கேலி நகை புரிந்தன ! வாடை புலிபோல உறுமியது. பூமாதேவி அவன் அடிகளைத் தாங்குகிருள்; அவ்வளவுதான். அவனைத் தாங்க உலகில் வேறு யாரும் இல்லை; 'கால் நடக்குமட்டும் பூமி இடங்கொடுக்குமட்டும் செல்வோம்' என்று அப் பையன் இருட்டில் நடந்தான். போர்ட்லாந்து ஒரு உன்னதமான தீபகற்பம் ; அதில் செங்குத்தான பாறைகளும், பல பீட பூமிகளும் உண்டு; பையன் மூன்று பீட பூமிகளைக் கடந்தான். இருட்டில் கண் தெரியவில்லை ; தடவித் தடவிச் சென்ருன் ; திடீரென்று நின்ருன்; சுற்றிப் பார்த்தான். ஒரு பாறைமேல் மரம் மாதிரி தெரிந்தது ; காது கொடுத்தான் ; ஏதோ ஒரு சத்தம் கேட்டது. அங்கே ஆட்கள் இருக்கலாம் என்றெண்ணினன் பாறைமேல் ஏறினன்.

## 11. ஊசலாடும் மாமா!

"யாராவது ஒரு 'மாமா' இங்கே இருக்க மாட்டாரா?" என்று பையன் ஆவலாகச் சுற்றிப் பார்த்தான். பாறைமேலே சென்றான். மேலே கார் வான்; கீழே கார்கடல்; சுற்றிலும் காரிருள்; இவற் றிற்கிடையே ஒரு தனிப்பாறையில் ஒரு மரம்போலத் தெரிந்தது; அதென்ன கைகாட்டி மரம்போலிருக் கிறது? ஆம். "இதோ பார் மனிதனுக்கு மனிதன் செய்யும் கொடுமையை!" என்று அந்த மரம் கைகாட்டி நிற்கிறது. அதன் கையிலிருந்து ஒரு சங்கிலி தொங்குகிறது. அந்தச் சங்கிலியில் ஒரு கழுத்துத் தொங்குகிறது. அந்தக் கழுத்தினின்று ஒரு உடல் தொங்குகிறது. காற்று சங்கிலியை அசைக் கிறது; சங்கிலியுடன் அதில் மாட்டிய உருவமும் ஊச லாடுகிறது. அந்தப் பயங்கரமான ஊஞ்சற் பாட்டே பையன் கேட்ட சத்தம். 1822-ம் ஆண்டுவரையில் கள்ள வியாபாரிகளை ஆங்கிலச் சட்டம் இவ்வாறு தூக்கி விட்டது; தூக்கிவிட்ட பிணத்தைப் பிறர் கண்டு அஞ்சும்படி அப்படியே கீல் பூசிவைப்பது சர்க்கார் வழக்கம். அப்படிப்பட்ட கள்ள வியாபாரியே இந்தத் தூக்குமேடையில் தொங்கும் மனிதன். இப் பயங் கரக் காட்சி, கடலிலிருந்தும் காணவியலும். அக்காலம் இப்படிப் பல தூக்குமேடைகள் ஆங்காங்கு நின்றன. இந்தச் சட்டக் கொடுமையையும் மதிக்காமல் கள்ள வியாபாரம் நடந்தே வந்தது. இப்போது கொம்ப்-ரா-ஷி-கர் சென்றதுபோல எத்தனையோ கள்ளர் இத் தனித் துறைமுகம் வழியே சென்றிருக்கிறார்கள்.

அனைவரையும் இத் தூக்குமேடை கண்காணித்தே நிற்கிறது!

"ஆ! அங்கே ஒரு மாமா ஊசலாடுகிறாரே!" என்று பையன் விலகியிருந்து வியப்புடன் பார்த்தான்.

இப்படி எத்தனை மாமாக்கள் இச் சங்கிலியில் ஊசலாடி யிருப்பார்கள்! காலப் புழு செய்துள்ள வேலையைப் பார்த்தால், இந்தத் தூக்குமரம் எத்தனையோ ஆண்டுகளாக இந்தப் போர்ட்லார்ந்துப் பாறைமேல் இருக்கிறது என்றறியலாம். அதில் ஊசலாடும் மாமா பாதி எலும்பு, பாதி பிணச்சதையாயிருக்கிறார். கூடு இருக்கிறது; குருவியில்லை; உடலிருக்கிறது, உயிரில்லை; வயிறுள்ளது, குடலில்லை; தொண்டையுள்ளது, குரலில்லை; மண்டையுள்ளது, உள்ளே லொடலொட்டை! இந்த உடல் ஒரு காலத்தில் நடந்தது, உண்டது, நினைத்தது, பார்த்தது, கேட்டது, பேசியது; அதனுள்ளிருந்து உண்டு, உயிர்த்து, உரையாடி, கண்டு, கேட்டு, நடமாடியது எது? அந்தப் பொருளல்லவா உடலில் உயிராயிருப்பது? அந்த ஒரு பொருளல்லவா "நான், நீ, அவன், அவள், அது" என்ற பல்வேறு பாடுகளாக விரிந்துள்ளது. அந்தப் பொருளே ஆன்மா. ஆன்மாவே ஆள். உடல் அதன் சட்டையே. "மனிதா! உன் உடலை இதோ பார்; அது காகம், கழுகு, நாய், நரிகள் உண்ணும் பிணம்; அது பஞ்ச பூதக் கூடு; மண்ணே அதன் கதி; அதனுள் இருக்கும் உன்னை அறி; நீ ஆன்மா; யாக்கை வீழும்; ஆன்மா வாழும்!" என்று அந்தத் தூக்கு மேடையில்

ஆடிய எலும்புக்கூடு பயங்கரமாகப் பேசி நிற்கிறது. யாருக்கு? உலகிற்கு.



உலகறியாத இந்தப் பையனுக்கு? கூட்டுக்கிளியின் போக்குவரத்தை அவன் அறிவானா? இத் தூக்குமரத்தின் பின்னேயுள்ள சமுதாயக் கொடுமைகளையும், மாந்தர் பாபங்களையும், அரசியல் அநீதிகளையும் அவன் அறிவானா? பையன் தள்ளியிருந்து, பேச்சு மூச்சில்லாமல் இந்தக் காட்சியைக் கண்டு வியந்தான்; பயந்தானா? கொம்ப்-ரா-ஷி-களிடையே வளர்ந்த பிள்ளை எத்தனையோ பயங்கர வடிவங்களையும், செயல்களையும் பார்த்திருப்பான். பயங்கரத்தில் பழகிய பிள்ளைக்குக்கூட இந்தத் தூக்குமேடையை இந்த இரவிற்காண உள்ளே கொஞ்சம் நடுக்கந்தான். இருந்தாலும், "இந்த மாமா ஏன் இப்படி ஊசலாடுகிறார்? இவருக்குப் பசி, தாகம் இல்லையா? பேச்சு மூச்சில்லையா? குளிர் பனி இல்லையா? கிட்டப் போய்ப் பார்த்துவிடுவோம்" என்று அவன் மெல்ல ஒரு எட்டு முன்னே வைத்தான்; பிறகு ஒரு எட்டு; பிறகு பூனைபோல நடந்து தூக்குமரத்தருகே போனான்.

மாமாவை உற்றுப் பார்த்தான்; என்ன கோரம்! மூஞ்சி முகரையெல்லாம் கிலடித்து வைத்திருக்கிறது; மண்டையிலே கொஞ்சம் மயிர் இருக்கிறது; கண், காது, மூக்கு எல்லாம் துளை விழுந்துபோயின; பல் இளித்தபடியே இருக்கிறது. கைகள் கட்டுண்டன, கட்டப்பெற்றுள்ளன. தொடையும், குதிகாலும்

மரத்துடன் இடுப்பு முன்னால் வளைந்துள்ளது; கழுத்து சங்கிலியில் தொங்குகிறது. உடலிற் சுற்றிய முரட்டுத் துணி கந்தையானது. கால் செருப்பு கழன்று விழுந்துள்ளது. வெறுங்காலுடன் வருந்தும் பையன் அதைப் பார்த்தான். அவனுக்கு அது சேர வில்லை. இடுப்புக்கு மேலே எலும்புக்கூடு; கீழே கொஞ்சம் சதைப்பற்றுள்ளது; கீல் பூசியிருந்தாலும் பிணவாடை குப்பென்றடிக்கிறது! நீண்டகாலம் எலும்புரத்தையுண்டு சுற்றிலும் புதர்கள் அடர்ந்திருக் கின்றன.

"என்னடா இந்த மாமா இப்படி முன்னால் வளைந்து, கழுத்தைச் சங்கிலியில் மாட்டிக்கொண்டு, பல்லை இளித்து ஊசலாடுகிறார்" என்று பேச்சு மூச் சில்லாமற் பார்த்தான் பையன். காலில் ஏதோ குத்தி யது; குனிந்து பார்த்தான், முட்புதர்; தள்ளி நின்று மீண்டும் தூக்குமேடையில் தொங்கும் பொருளையே பார்த்தான். அதுவும் அவனையே பார்த்தது. "சை, மாமா இல்லை; இது ஏதோ ஒரு பிசாசு" என்றான் பையன். பனிவாடையாலும், பயத்தாலும் அவன் உணர்விழந்தான்; உடல் ஜில்லிட்டு மரத்துப் போனது; கால் அடியெடுத்துவைக்க முடியவில்லை; இந்தப் பேய் என்ன செய்யுமோ என்ற பயம் குடலைக் கலக்கியது. இக் குழந்தையை ஆற்றுவார் யார்? அவன் கலக்கத்தைக் கண்டு இரங்கும் அன்னை யார்? 'உறக் கம்' என்னும் தாயே இக் குழந்தையைத் தன் மடியி லிட்டுக் கவலை யொழித்தாள். கண் சுழன்றது; நிற்க முடியவில்லை; பையன் புல்லிற்படுத்து உறங்கினான்! குளிர், பசி, பயம், கவலை, தனிமை—எல்லாம் உறக்கத்

தில் செயலற்றன. தூக்குமேடையில் உயிரற்ற ஒன்று உறங்குகிறது; கீழே உயிருள்ள ஒரு ஆன்மா உறங்குகிறது. அது சவவுறக்கம், இது உயிர் உறக்கம். அது ஜடம், இது சித்து. இரண்டு உறக்கங்களிலும் சுகதுக்க ஸ்பரிசங்களில்லை—உறக்கம் வாழ்க! அதனுலேதான் உலகின் துக்கங்களை நாம் சிறிது மறக்கிறோம்! புயலுக்கு முன் அமைதி என்பார்களல்லவா? அதுபோல இயற்கையும் சீற்றமில்லாமல், இந்தக் குழந்தைக்கு இரங்கிக் கொஞ்சம் அமைதியாயிருந்தது.



நள்ளிரவு கழிந்தது; மணி மூன்றிருக்கும்; திடீரென்று சில்லுவண்டுமாதிரிச் சத்தம் கேட்டது! ஊளைக்காற்றெடுத்தது; புயல் வீறிட்டது; சங்கிலி விரைவாக ஆடிற்று; பிணத்தின் தலையும் இடுப்பும் முன்னும் பின்னும், இங்கும் அங்கும் 'படக் படக்' கென்று சத்தமிட்டாடின. யமலோகப் 'பெண்டுலம்' (*Pendulam*) மாதிரிப் பிணச்சங்கிலி இப்படியும் அப்படியும் ஆடிச் சத்தமிட்டுப் பையன் உறக்கத்தைக் கலைத்துவிட்டது! குறைத் தூக்கத்தில் எழுந்து பார்த்தான் பையன்; மாமாவின் ஆட்டம் பலமாயிருந்தது; நம்மீது கோபித்துக்கொண்டுதான் மாமா இப்படிப் பேய் ஆடுகிறுரென்று வெருண்டான். அச் சமயம் "விர்ர்"ரென்று இறக்கைகளின் சத்தம் கேட்டது. ஒரு நிமிஷத்தில் "கா, கா, கா், கா்ா்ா்" என்று அண்டங் காக்காய்கள் வட்டமிட்டுப் பிணத்தின் நிணத்தைக் கொத்தின. தூக்கு மேடைமேல் உட்

கார்ந்து எல்லாம் சேர்ந்து கூவின. அதுவே பிண விருந்திற்கு அழைப்பாகும்.

திடீரென்று ஒரு பாய்ச்சல்; காக்காய்கள் மொய்த்து "கா், கா், குர்ர்" என்று ஏகக் கூச்சலிட்டு பிணத்தைக் கொத்திப் பிடுங்கின. அவற்றுடன் குஸ்தி போடுவதுபோலப் பிணம் முன்னும் பின்னும் தாவியலைந்து படார் படாரென்று தூக்கு மரத்தில் மோதியது. பேய் மாமாவுக்கும் காக்காய்களுக்கும் சண்டை நடக்கிறது! காக்காய்கள் சற்று விலகும்; பிறகு கூட்டமாக வந்து பிணத்தைக் கொத்தும்; சில காக்காய்கள் தூக்கு மரத்தை வட்டமிட்டுக் கூவும். பார்த்தான் பையன். "நம்மையும் இப்படித்தான் காக்காய்கள் கொத்தும். அல்லது அந்த ஆத்திரங்கொண்ட பேய் நம்மை விழுங்கும்" என்று பயந்து நடுங்கினான்; திரும்பினான்; விரைவாகப் பாறையை விட்டு இறங்கினான்; காக்காயும் பேயும் தன்னைத் துரத்துவதுபோல் உணர்ந்தான். மூச்சைப் பிடித்துக்கொண்டு திரும்பிப் பாராமல் ஒரே ஓட்டமெடுத்தான். மூச்சுத் திணறும்போது ஒரு நிமிஷம் நிற்பான்; திரும்பிமட்டும் பாரான்; பேய் நினைப்பு வந்ததும் மீண்டும் ஓட்டமெடுப்பான். கால் சென்ற வழியெல்லாம் பையன் இவ்வாறு ஓடினான். அவனுக்கு, உலகம் முழுதும் ஒரே பயங்கரக் கனவாகத் தோன்றியது. பசி, குளிர் எதையும் அவன் பாராட்டவில்லை. இந்தப் பயங்கரப் பாறையை விட்டுத் தப்புவதற்கே அவன் வழி பார்த்தான். வாழ்க்கை ஒரு பேய்க் கோட்டமாக அவனுக்குத் தோன்றியது. அவன் சுமார் $1\frac{1}{2}$ மைல் ஓடினான்.

## 12. சேஸ் ஹில்

இந்த ஓட்டம் அவனுக்கு நலமானது. அதனால், இரத்த ஓட்டம் அதிகரித்தது; குளிர் குறைந்தது; தூக்குமேடை, பேய், காக்காய்—எல்லாம் மறைந்தன. "டட், எனக்கா பயம்!" என்று பையன் காலை அழுத்தி, மிதித்து ஒரு இடத்தில் நின்றான்; தைரியங் கொண்டான்; பிறகு ஓடாமல் மெல்ல நடந்து சென்றான்.

பயம் போனது; பசி வந்தது; இரவு முழுதும் பட்டினி; ஓடி ஓடிக் கால் ஓய்ந்துபோனது; பாறையில் நடந்து கால் புண்ணானது; ஏதாவது வயிற்றுக்குப் போட்டாகவேண்டுமே, சட்டைப் பையைத் தடவிப் பார்த்தான்; அது ஓட்டையாயிருந்தது. யார் அவனுக்கு இங்கே உணவு தருவர்? 'எங்காயினும் சாப்பாட்டுக் கடையிருக்கும், பார்க்கலாம்' என்று மேலே நடந்தான். இந்தப் பீடபூமியில் நெடுநாளாக மனிதர் வசிப்பதில்லை. பழைய பிரித்தானியர் காலத்தில் இங்கே சில அநாகரிகக் காட்டுமிராண்டிகள் வசித்தனர். அவர்கள் மீன் பிடித்தும், கவண் கல் எறிந்து பட்சிகளை எய்தும், ஈட்டியால் விலங்குகளைக் கொன்றும் அருந்தினர். இப்போது அந்தக் காட்டுமிராண்டிகளைக்கூடக் காணோம். அங்குமிங்கும் எலும்புகளும், மண்டையோடுகளுமே குவிந்து கிடந்தன; இது சுடுகாடா, கொலைக்களமா என்று தெரியவில்லை. பையன் முடிவில், சேஸ் ஹில் எனப்படும் போர்ட் லாந்து பூசந்திக்கு வந்து சேர்ந்தான். இன்னும் அவனுக்கு உறுதியான வழி தோன்றவில்லை.

இச் சமயம், கோடிப் பேய்கள்போலப் புயற்காற் றெழுந்தது! கடல் ஊழி வெள்ளம்போலக் குமுறிக் கொந்தளித்தது. உலகுடன் போர்புரிவதுபோல ஆகாசம் கல்மாரி வீசியது. புயல் வீரனின் வெஞ் சினத்தை உலுப்பிவிட்டதுபோலப் பனிக்கட்டிகள் தடதடவென்று பொழிந்தன. இடி, புயல், பனிக்கட்டி, மழை, பனி, இருள் 'ஹோ' என்ற ஓலம்....! நாய் நரிகள் கூட இச்சமயம் வெளியே தலைகாட்டா. இச் சிறு அநாதைப் பையன் ஒரு புகலிடம் தேடி ஓடு கிறான்.



அவன் இப்போது தன்னையறியாமல் நடக்கும் **செஸ் ஹில்** (*Chess Hill*) அபாயமானது. இக் காலம் செஸ் ஹில் வேறு, அக்காலம் செஸ் ஹில் வேறு. இப்போது அங்கே கல்லெடுக்கிறார்கள், ஸெமெண்டு செய்கிறார்கள், ஆடு வளர்க்கிறார்கள், இன்னும் பல தொழில்கள் செய்கிறார்கள். அங்கே புகைவண்டி ஓடுகிறது. அழகான பங்களாக்களும், ஓட்டல்களும், தோட்டங்களும் உள்ளன. அக்காலம் செஸ் ஹில் மனிதன் கைவைக்காதது ; அதில் ராக்ஷஸப் பல்மாதிரிப் பாறைகள் நீட்டிக்கொண் டிருக்கும். சில இடங்களில் சேறு அதிகம்; நொடிகள் அதிகம். பொடிப்பாறைகள் கண்ணுடித்தூள் மாதிரி குத்தும். இடையிடையே பள்ளங்களில் நீர் தேங்கி யிருக்கும். திடீரென்று ஒரு பாறை தகர்ந்து சரியும். அதில் நடக்கும் ஆள் அதோகதியாவான்! கடலோரத் தில் அச்சரிவு ஏற்பட்டால், ஆள் அலைகளுக்கு இரை

யாவான். கூர்மையான பாறைகள் மேவிய வளைகுடா வைப் பார்த்தால் ஒரு பெரிய கோரப்பல் ராக்ஷஸன் வாயைத் திறந்து நம்மையுண்ண அலை நாவினால் சப்புக் கொட்டி வருவதுபோலத் தோன்றும். இந்தச் செஸ் குன்றில், இப்படிப்பட்ட கல்மழையில் நடப்பது ஒரு ஹெர்குலிஸ் (பீமசேனன்) வேலையாகும்.

சிறு பையன் வழி தெரியாமல், நொடிகளில் இறங்கி, பாறைகளில் ஏறி, சகதியில் ஆழ்ந்து, பள்ள நீரில் மூழ்கி, கையினால் கல் மழையைத் தடுத்துக் கொண்டு, அபாயமான தனிப் பனியிருளில் கால் இரத்தங்கட்டிப் புண்ணாக நடந்தான்.



திடீரென்று, பாறையில் உறைந்த பனியில் காலடிகள் பதிந்திருப்பதை அவன் கண்டான். அவை ஆண் அடியினும் சிறியவை, குழந்தையடியி னும் பெரியவை. " யாரோ ஒரு அம்மாதான் இந்த வழியே போயிருக்கிறாள். கால் தடத்தைப் பிடித்துக் கொண்டே நாமும் போய் அந்த அம்மாளைக் கண்டு பிடிப்போம் " என்று பையன் தடம் பார்த்துப் பார்த்துக் கஷ்டப்பட்டுச் சென்றான்.

இடி-புயல்-பனி-இயற்கையின் வெய்யகோபம், இவற்றிற் சிக்கிய இந்த அனாதைக் குழந்தையின் கதியென்ன ? இக்காலத்தில் எத்தனையோ உயிர்கள் இறந்துபோயின. இக் குழந்தையும் கல்மழை தாங்கா மல், பசி, குளிர் தாங்காமல் இறந்தானா ? இரக்கமற்ற இயற்கை வாட்டும் இப் பையனுக்குத் தெய்வம் இறங் கியதா? அனாதரக்ஷகன் ஒருவன் உண்டா ? பார்ப்

போம். 'ஊசலாடும் மாமா' தான் பையனை வெருட்டி ஓட்டினார். இனி "அம்மா" செய்தி யென்ன ?

அதை அறிவதன் முன்பு, மற்றொரு சம்பவம் நம் முன்னே நிற்கிறது! இக் குழந்தையை இப்படித் தனியாக விட்டுக் கப்பலிற்சென்ற கல்நெஞ்சர் என்ன கதியாயினர் என்பதைக் காண்போம்.

## 13. ஏகக் குஷி !

புயலுக்கு மேலே பத்துத் தொண்டைகள் சேர்ந்து சந்தோஷ வெறிபிடித்துக் கூச்சலிடுகின்றன !

"விடுதலை, விடுதலை, விடுதலை! பயமில்லை! பயமில்லை, பயமில்லலை! பீடைவிட்டது! சனியன் ஒழிந்தது! ஹிப் ஹிப் ஹுரே!" இவ்விதமாக ஏகக் கூக்குரல், ஏகக் குஷி! ஒருவருக்கொருவர் கட்டித் தழுவுகின்றனர்!

இக் கொம்ப்-ரா-ஷி-க் கொடியருக்கு இவ்வளவு குஷி பிறந்ததேன்? (1) இங்கிலாந்தில் வேண்டிய பொருள் தட்டியாயிற்று. (2) கொள்ளைப் பொருளைக் கப்பலேற்றியாயிற்று. (3) அந்தப் பையனை அப்படித் தனியே விட்டாயிற்று. அவன் இறந்து போவான்; சட்டம் இவர்களை இனி ஏதும் செய்யாது. (4) ஒற்றரை ஏமாற்றித் தப்பிப்பிழைத்தாயிற்று.— இவற்றால் இவர் மனம் வெற்றி முழக்குகிறது. இனித் தமது தொழிலை ஸ்பெயின், பாஸ்கு, பிரான்ஸ் முதலிய நாடுகளில் தாராளமாக நடத்திக்கொண்டு சிரஞ்சீவியாயிருக்கலாம் என்னும் திண்ணத்துடன் இவர்கள் செல்லுகிறார்கள்.

'மதூதிஞு'த் தோணியில் மொத்தம் பத்துப் பேர் இருக்கிறார்கள்; கனத்த மூட்டைகள் அதில் குவிந்து கிடக்கின்றன. கப்பலின் மிதப்பளவிற்கு அதிகமாகவே அதில் பாரம் ஏறி அழுத்துகிறது. பத்துப்பேரில் மூவர் தோணியைச் சேர்ந்தவர். அவர்களில் ஒருவன் தோணித் தலைவன். பாஸ்கு நாட்டான் பலே திருடன்; திருடருக்கு உள் ஆள், கடற்கொள்ளைக்காரருக்கு வலது கைபோன்றவன். அவனுடன் இருக்கும் துடுப்புக்காரர் இருவரும் அவனுக்குத் தக்க தோழர் என்றால் வேறு வர்ணனை வேண்டா. திருட்டு, கொள்ளை, கள்ள வியாபாரம், கொம்ப்-ரா-ஷி போக்குவரத்து—இவற்றிற்கெல்லாம் **மதூதிஞு** தயாராக முன்னின்றுதவி செய்யும்.

தோணியில் ஏழு கொம்ப்-ரா-ஷி-கர் ஏராளமான மூட்டை முடிச்சுகளுடன் ஏறிச் செல்லுகின்றனர். இவர்களில் இருவர் பெண்கள். "கையினில் இருப்பதுவோ ஜபமாலை; கக்கத்தில் இடுக்குவதோ கன்னக்கோலே" என்பது இவருக்குத்தகும். இவர் இடுப்பில் ஜபமாலை தொங்குகிறது. இவர்களும் "ஆவ் மேரியா" என்ற ஜபம் செய்வதுண்டு. வாயில் ஜபம், மனத்தில் அவம்; ஒருத்தி பிரனீஸ் மலைக்கருகேயுள்ள **பாஸ்கு** தேசத்தாள்; மற்றொருத்தி அயர்லாந்தினள். இருவரும் கொச்சை பிரெஞ்சில் ஓயாமல் அரட்டையடிக்கிறார்கள். கொம்ப்-ரா-ஷி ஆடவர் ஐவருள், இருவர் பிரெஞ்சுக்காரர்; இன்னொருவன் ஜனீவாக்காரன். கிழவனான மற்றொருவன் ஜெர்மானியன். பழுத்த கொம்ப்-ரா-ஷி-கனாயினும், கொஞ்சம் அறிவாளி, மேரி பக்தன். கொம்ப்-ரா-ஷி-த் தலைவன்

முரட்டுப்பாவி, வறத்தடியன், பாஸ்கு நாட்டான். இவனே அந்தப் பையனை அப்படித் திண்டாடவிட்டுத் தனது கொடுமைக்கு முதலில் வெற்றி கூறினவன். இவர்களுக்கெல்லாம், பிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கிலம் ஆகிய மொழிகள் சுமாராக வருமாயினும் அக்கால வழக்கப்படி பிரெஞ்சைப் பொது மொழியாகக் கொண்டனர். இவர்களிடம் பலமான ஒற்றுமை யிருந்தது. அதிலும் பாஸ்கு மாகாணத்தைச் சேர்ந்தவரிடம் உயிர்க்கலப்புள்ள ஒற்றுமை மிகுதியாயிருந்தது.

போர்ட்லாந்துப் பாறையினின்று கொஞ்சதூரம் வரையில் தோணி ஒழுங்காகச் சென்றது; புயலும் அதிகமாயில்லை; மீகான் அலையிலக்கணம் அறிந்தவன். திசைக் கருவி, காற்றுக் கருவி இவற்றை அடிக்கடி பார்த்து சுக்கானைச் சரியாகத் திருப்பிக் கப்பலை ஒழுங்காக நடத்தினன். இருட்டானதும் விளக்கேற்றினர். உள்ளிருந்தவர் தீமூட்டிச் சூப்பு தயாரித்தனர். மொச்சைக் கொட்டையை வேக வைத்து, அதில் ஏராளமான மீன்களையும், ஆடு-மாடு-பன்றி-வாத்து-கோழி இறைச்சிகளையும் போட்டுப் பொங்க வைத்து, காரமாக மிளகுப் பொடிபோட்டு இறக்கினர். அதைத் தவிர, ரொட்டி, பிஸ்கோத்து, வற்றல்கள், சாராய வகைகள் எல்லாம் நிரம்ப இருக்கின்றன அல்லவா? எல்லாவற்றையும் சூப்புடன் ஒரு அள்ளு அள்ளினர். "ர்ட்ட சூப்பு நன்றாயிருக்குதடா தம்பி ஊற்று இன்னொரு கிண்ணம்" என்று கொம்ப்-ரா-ஷி-த் தலைவன் மூக்குப்பிடிக்கச் சாப்பிட்டான். சாப்பாடானதும், "டப், டப், புஸ்!" என்று சாராயப் பெட்டிகள் உடைகின்றன! எல்லாரும்

நன்றாகக் குடிக்கின்றனர்; பிறகு, படலம் படல மாகச் சுருட்டுப் புகை விடுகின்றனர். வயிற்றில் இவ்வளவும் ஏறியபிறகு பாட்டுக் கிளம்பாமல் இருக்குமா? தத்தாறிப் பாட்டுகள் எத்தனை தெரி யுமோ அத்தனையும் குஷியாகப் பாடித் தீர்த்தனர். ஏற்கெனவே எருமைக்கடா புகுந்த தொண்டைக்குச் சாராயவெறியும் ஏறினால் கேட்பானேன்........!

ஊரைக் கொள்ளையடிப்போம்
உண்டு நன்றாய்க் கொழுப்போம்
பாறை உருக்குலைப்போம்
"பாபம்" என்றால் உதைப்போம்!

என்று ஒரு மூலையில் பாட்டு கிளம்புகிறது. "அட சை, கடவுளையும் மறக்கக் கூடாதடா. பக்தியாய்ப் பாடுகிறேன், கேளடா" என்று இன்னொருவன் தொண்டையைத் திறந்தான்:

நல்ல நல்ல கொள்ளை தந்தால்
நாலு கும்பிடு போடுவேன்!
இல்லாட்டி—சாமி
இல்லாட்டி—தெய்வமே
இல்லாட்டி—பாறாங்கல்லை
எடுத்துன் மண்டையிற் போடுவேன்!

கடவுளுக்கு எப்படிப்பட்ட சன்மானம் பார்த்தீர்களா? எல்லாம் அதோ முகப்பில் இருக்கும் கன்னி மரி யாள் முன்பு அரங்கேற்றியாகின்றன!

# 14. அட, அபசகுனமே!

தோணியில் இரண்டு பேர் இந்தக் கூப்பாட்டில் கலந்துகொள்ளவேயில்லை. ஒருவன் அந்த நெட்டைக் கிழவன்; மற்றொருவன் மீகான், தோணித் தலைவன். கிழவன் வானையே பார்க்கிறான்; மீகான் கடலையே பார்க்கிறான். கிழவன் கொம்ப்-ரா-ஷி வேலையில் முற்றிப்போய், "ஐயோ, எத்தனை பாவங்களைச் செய்தேன்!" என்று இப்போது உள்ளே வருந்துகிறான்; உபதேசமும் செய்கிறான். அவனிடமே குழந்தை வியாபார தஸ்தாவேஜுகளெல்லாம் இருக்கின்றன. அவன் மேனி வயதால் ஆடுகிறது. அவன் மரியாள் முன் அடிக்கடி தொப்பியை எடுத்து நிற்கிறான்; பாபமன்னிப்புக் கேட்கிறான். சதா ஏதோ சிந்தையில் ஆழ்ந்திருக்கிறான். வானத்தைப் பார்க்கிறான்; "திருக்குமாரனைத் தந்த பரிசுத்தக் கன்னியே, வரும் ஆபத்தினின்று எங்களைக் காப்பாற்று!" என்று அடிக்கடி முணு முணுக்கிறான்; இங்குமங்கும் உலாவிக் கொண்டே ஏதேதோ சிந்திக்கிறான். நரைதிரை படர்ந்த அவன் முகத்தில் ஈயாடவில்லை. மேக ஓட்டத்தைப் பார்க்கிறான்: "ஹூம்! சரி, வேண்டியது தான், நடக்கட்டும்" என்கிறான். மற்றவர் ஆரவாரங்களில் இக் கிழவன் கலந்துகொள்ளாமல் தனித்திருக்கிறான்; பிறருடன் பேசாமல் தனக்குள்ளே பேசுகிறான்.

மாலுமிக்கு இக் கிழவன் செயல் விநோதமாகப் பட்டது. அவன் கொம்ப்-ரா-ஷி-த் தலைவன் முது

கைச் சுரண்டினான்....பிறகு அடி வயிற்றிலிருந்து பேசினான்:—

**மாலுமி :** மலை அண்ணா (தலைவன் பிரனீஸ் மலை நாட்டில் பிறந்தவன்.)

**தலைவன் :** ஏன் கடல் அண்ணா ?

**மாலு :** அந்தக் கிழவன் யார் ?

**தலை :** மனிசன்.

**மாலு :** ஊர் ?

**தலை :** எல்லா ஊருந்தான்.

**மாலு :** பாஷை ?

**தலை :** எல்லாந்தான் ; ஆனால், அவனுக்கென்று ஒரு ஏகாந்த பாஷையுண்டு.

**மாலு :** தெய்வம் ?

**தலை :** தெய்வம், தெய்வம், தெய்வந்தான் !

**மாலு :** எல்லாரும் அவனை எப்படிக் கூப்பிடுவார்கள் ?

**தலை :** பைத்தியம் என்று.

**மாலு :** நீ எப்படிக் கூப்பிடுவாய் ?

**தலை :** 'ஞானப் பைத்தியம்' என்று.

**மீகான் :** அவன் வேலை ?

**தலை :** வேலை, வேலை, ஹ, ஹஹ....எங்களுக்கு உபதேசிக்கும் பைத்திய வேலை !

**மீகா :** மலையண்ணா ?

**தலை :** ஏன் கடலண்ணா ?

**மீகா :** அவன் என்னமோ முணு முணுக் கிருனே!

**தலை :** பேச்சுக் கொடுத்துப்பாரேன்....



"புயல், இடி, பனிமழை....ஆ, ஆபத்து வரு கிறது!" என்று கிழவன் ஏதோ நெஞ்சொடு கிளத்து கிருன்; "அட அபசகுனமே!" என்று எல்லாரும் அலக்ஷியமாயிருக்கின்றனர். மீகானுக்குமட்டும் மனம் கேட்கவில்லை; "கடலை ஆழம்பார்க்கும் நாம், இவன் கருத்தையும் ஆழம் பார்க்கவேண்டும்" என்று புன்னகையுடன் கிழவனை நெருங்கிப் பேச்சுக்கொடுத் தான்: இச்சமயம் அலைகள் பொங்கி யெழுந்தன.

**மீகா :** அண்ணு?

**கிழவன் :** (தனக்குள்) இருட்டு கும்மென்றிருக் கிறது; இந்த விளக்கு மனிதச் சிறுமையைப் பார்த்துச் சிரிக்கிறது; இன்னும் அரைமணி நேரத்தில்........ஆ, ஆபத்து........

**மீகா :** அண்ணு?

**கிழ :** ஆ....என்னை **டாக்டர்** என்று கூப்பிடும்.

**மீகா :** சரி, டாக்டரண்ணு....கடலைப்பாரும்.

**கிழ :** வானைப்பாரும்.

**மீகா :** மேக மூட்டம் பலமாயிருக்கிறது.

**கிழ :** மூட்டத்திற்குள் ஓர் ஓட்டம் இருக்கிறது; அதைக்கண்டு என் மனம் ஆட்டங்கொடுக்கிறது. வானில் ஒரு மீன் இல்லை.

**மீகா :** கடலில் வேண்டிய மீன் உண்டு.

**கிழ :** தம்பீ, தோணி வேகத்தை அளந்தாயா? வேகக் கருவி யிருக்கிறதா?

**மீகா:** ஆம். தோணி வேகமாகவே செல்லுகிறது.

**கிழ :** திசைக் கருவியைப் பார்த்துச் சொல்லு.

**மீகா :** தெற்கேதான் படகு செல்லுகிறது.

**கிழ :** காற்றுக் கருவியிருக்கிறதா? கடலாழந் தெரியுமா? புயலளப்பாயா?

**மீகா :** நேற்று இன்று அல்ல, எனக்குக் கடலில் வெகுகால அனுபவம்; இந்தக் கருவிகளெல்லாம் அனுவசியம்; நான் ஸ்பானிஷ் ஆர்மாடாவைப் பார்த்த வனுக்கும்.

**கிழ :** 600 வீரர், 50 மாலுமிகள், 20 பீரங்கிகளுடன் ஆங்கிலக் கடலில் மூழ்கியதே அந்த ஆர்மாடாவா?

**மீகா :** ஆம்; அதிலிருந்து ஒரு குண்டுகூட எடுத்து வைத்திருக்கிறேன். ஆர்மாடாவுடன் சென்ற தோணிகளைப் போலத்தான் இந்தத் தோணியும் உள்ளது; கடல் நிதானம் எனக்கு நன்றாகத் தெரியும். **கிறிஸ்தாபர் கோலம்பஸ்** கருவிகளா வைத்திருந்தான்? இந்தமாதிரிப் படகிலேறி, தைரியத்தாலும், மதியூகத்தாலும் அலைகளை வென்று, மேலிந்தியத் தீவை அடைந்தான்.

**கிழ :** இருந்தாலும், சிலந்தி வலையில் ஈ புகுந்தது போன்றது, கடலில் தோணி தள்ளல். வடகிழக்கு வானைப் பார்த்தாயா? ஆபத்து வருகிறது....!

**மீகா:** நான் இருக்கையில் ஒரு ஆபத்தும் வராது.

**கிழ:** பார் பதினைந்து நிமிஷத்தில்; இந்த இடத்தில் இப்படிப்பட்ட இரவில், ஆலங்கட்டி மழையில் நீ கப்பல் விட்டதுண்டா?

**மீகா:** இல்லை. ஆலங்கட்டியா?

**கிழ:** பார், இன்னும் பதினைந்து நிமிஷத்தில்! தம்பீ, இந்தப் பாதை பாறை நிறைந்தது. மூன்று அபாயமான பாறைகளைத் தாண்டவேண்டும். அப்படித் தாண்டினாலும் புயலைச் சமாளிக்க வேண்டும். புயலுடன் ஆலங்கட்டியும் பெய்தால் அபாயந்தான். தோணியை மெல்லக் கவனமாக ஓட்டு. சற்று முன்னே சென்றதும் ஒரு மணி யிருக்கிறது. அந்த மணிச் சத்தம் கேட்டால் அபாயந்தான்! அதுவே சாவுமணி என்று வைத்துக்கொள்ளலாம்........

**மீகா:** டாக்டர், ஏனிப்படி உளறுகிறீர்; பாரும் என் திறமையை.

கிழ: பார் அபாயம்!

எல்லாரும் அட அபசகுனமே என்றனர்! டாக்டர் மேற்கொண்டு யாதும் பேசவில்லை. வீறுப்புக்கொண்ட மீகான், தோணியைக் கனவேகமாகத் தள்ளினான். கிழவன் "அபாயம், அபாயம்" என்னும் போதெல்லாம் "அட அபசகுனமே!" என்று முணு முணுத்த கொம்ப்-ரா-ஷி-கர், "சபாஷ், ஹுரா! தோணியை முடுக்கண்ணே வேகமாய்!" என்று கைகொட்டி எக்களித்தனர்.

# 15. பழைய பத்திரம்

நெட்டைக் கிழவன் யாருடனும் பேசவில்லை; நுரைத்தெழும் அலைகளை ஒருமுறை பார்த்தான்; சினந்தெழும் வானத்தை ஒருமுறை பார்த்தான். "ஹூம்; இதோ என் கடமையைச் செய்து, தயாரா கிறேன்" என்று கணப்புக்காயும் அறையுட் சென்று கூனிக்குறுகி யுட்கார்ந்தான். தனது நீண்ட அங்கிப் பையினின்று இறகு பேனாவையும், மைக்கூட்டையும், தோற்காயிதக் குறிப்பையும் எடுத்தான். (அக்காலம் ஆட்டு மாட்டுத் தோலைக் காயிதமாக உபயோகித்தனர்). பிறகு தனது கைப்பெட்டியைத் திறந்தான். அதி லிருந்து நாலாகமடித்த மிகப்பழைய பத்திரம் ஒன்றை யெடுத்து, விரித்தான். அதை எடுக்கும்போதே அவன் கை நடுங்கியது; முகத்தில் இரக்கமும், வருத்த மும் தோன்றின. மேற்சொன்ன பழைய பத்திரத் தைக் கிழவன் கூர்ந்துபார்த்துச் சற்று சிந்தித்தான்; சட்டென்று அதன் பின்புறத்தில் ஏதோ எழு தத் தொடங்கினன். தோணி அசைவால், இறகு பேனா வும் காயிதத்தில் ஊன்றாமல் அசைந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு, கிழவன் தனது கருத்தை எழுதி முடித்தான்.

அவன் பக்கத்தில் ஒரு பழைய சுரைக்குடுக்கை இருந்தது; அதில் பீர் ஊற்றிக் குடிப்பர். அதன் மேல் பிரம்பு முடைந்து, அதில் சிவப்பு நாணலால் **அரதிகானன்** (*Hardquononne*) என்று பெயர் எழுதப்பட்டிருந்தது. அப் பெயரை உற்றுப் பார்த்

தான் கிழவன். அந்தச் சுரைக்குடுக்கையை அங்கிருந்த ஒருவன் அருமையாக வைத்திருந்தான்.

கிழவன்: தம்பி! இது **அரதிகானன்** குடுக்கையா?

**தம்பி:** ஆம்.

**கிழ:** ஷாதாம் இருட்சிறையில் வருந்து கிறனே அவனதா?

**தம்:** ஆம்; அவன் எனது நண்பன்; அவன் நினைப்பிற்காக இதை வைத்திருக்கிறேன்.

கிழவன் இறகை எடுத்துப் பத்திரத்தில் மீண்டும் சில வரிகள் எழுதி, கணப்பெரியில் மையை உலர்த்தினன். பிறகு பத்திரத்தை மடித்து, நோட்டில் வைத்தான். பேனு மைக்கூட்டைப் பையிற் போட்டுக்கொண்டான். தனியே உட்கார்ந்தான். இச் சமயம் மாலுமி, "டாக்டர், மீன் குழம்பு சாப்பிடும்" என்றழைத்தான். "அதை மீன்களே சாப்பிடட்டும்" என்று சும்மா இருந்தான் கிழவன்.

தோணி, பாய்விரித்து, அலைக்கலை தாவி வெகு விரைவாகச் செல்லுகிறது! கொம்ப்-ரா-ஷி-கர் ஆடிப் பாடிக் கைக்கொட்டிக் கும்மாளமடிக்கின்றனர்! கிழவன் மட்டும் குனிந்தது நிமிராமல், ஏதேதோ சிந்திக்கிறன்.

இச் சமயந்தான், அந்த அனுதைப் பையன், தோணி மறையுமட்டும் பார்த்துவிட்டுப் பனியிருளில் வழிதடவிச் சென்றுன்; அவன் வடக்கே சென்றுன்; தோணி தெற்கே சென்றது. எல்லாம் காரிருளில் மறைந்தன. அங்கே இருட்பாறையில் பையன் தவிக்

கிறான்; இங்கே இருட்கடலில் பாதகர் தவிப்பதைப் பாருங்கள்!

## 16. இயற்கையின் சீற்றம்

யானைக் கூட்டம்போலக் கார்மேகங்கள் படர்ந்தன; உலகம் முழுதும் இருட்குகைபோல 'கும்' மென்றிருந்தது. அந்தக் குகையில், கோடி நாவுகளை நீட்டி உயிர்களை உண்ண ஆரவாரிக்கும் கரும் பூதங்கள்போலக் கடல் அலைகள் சீறி எழுந்து தாவுகின்றன. ஏதோ சதியாலோசனை நடப்பதுபோல மேகத் திரைக்குள் ஆகாயம் மறைந்தது; திடீரென்று யாரையோ தீக்கண்ணால் பார்த்து, வாள்வீசிப் பழி வாங்குவதுபோல நீண்ட கம்பி மின்னல் வீசி இடி முழங்கியது. இயற்கை "உஸ்" என்று பெருமூச்சு விட்டெழுந்தது. "புஸ்" என்று காலகோடி ஸர்ப்பம் போலப் புயல் சீறியது! கடல் கொந்தளித்தது. தோணி இங்குமங்கும் தள்ளாடிற்று. இவற்றைக்கூட உள்ளிருந்தவர் பாராட்டவில்லை. அப்பொழுதும், மாலுமி தோணியை வெகு வேகமாகத் தள்ளினான்.

கார்புயலுக்கும்—அச்சமில்லையே—ஊழிக்
காற்று வீசினும் அச்சமில்லையே
போர் கிளம்பினும் அச்சமில்லையே—திரை
புரண்டு மோதினும் அச்சமில்லையே!

என்று கொம்-ரா-ஷி-கர் புயலுக்கு மேலே ஊழியிடி போலப் பாட்டு முழக்கினர். "தைரியம், விடுதலை—ஹுரா, ஹுரா!" என்று கைகொட்டிக் கூச்சலிட்டனர்.

"சத்தம்! வந்தது ஆபத்து; அடித்தது மணி!" என்று ஒரு குரல் இவருக்குமேல் எழுந்து வீறிட்டது. கிழவன் கம்பீரமாக எழுந்து, "அதோ," என்று கையைக் காட்டினான். "டணார், டணார், டணார்!" என்று மணியோசை கேட்டது! மணி எங்கேயுள்ளது? போர்ட்லாந்துத் துறைமுகத்திற்கும் மான்ஷ் (*Manche=English Channel*) தீவுகளுக்கும் இடையே, ஒரு மிதப்புப் போட்டு, அதில் இரும்புத் தாங்கிகள் இணைத்து அவற்றில் குறுக்குச் சட்டம் போட்டு, அதில் ஒரு கண்டாமணியைத் தொங்க விட்டிருக்கின்றனர். அதன் உயரத்திற்கு அலைகள் எழுந்தால் மணியடிக்கும்; ஆபத்தான புயல் வீசுகிறது என்றறிவர் மாலுமிகள். மேலும், அந்த இடம் அபாயமானது. அங்கே பல படகுகள் முன்பு மூழ்கிப் போயின; ஆதலால், அந்த அபாய மணியை அரசாங்கம் கட்டியிருக்கிறது. இதேமாதிரி பாறைகள் இருக்குமிடங்களிலும் மணி கட்டுவது அக்கால வழக்கம்; உதாரணமாக, இஞ்சுகேப் மணி (*Inchcape-Bell*) யைச் சொல்லலாம். இக்காலம் அத்தகைய ஏற்பாடுகள் அவசியமில்லை.

"அபாயம்! அபாயம்!" என்று எச்சரிக்கை செய்தான் கிழவன். "சும்மா இரும், சாகுருவி!" என்று மீகான் எரிந்துவிழுந்தான். "தோழர்களே! தைரியமாயிருங்கள்! இந்தப் புயல் நம்மை என்ன செய்துவிடும்! இதோ தோணியை மேற்கே தள்ளி அந்த மணியருகேயே கொண்டுபோகிறேன் பாருங்கள். இதோ பாருங்கள் பயமில்லை, பயமில்லை!" என்று புயலுக்கெதிரே போர் முழக்கம் செய்தான். மற்ற

வரும் "ஏலேலோ! பயமில்லை" என்று ஆரவாரம் செய்தனர்............

"அப்படியா செய்தி! சாவுமணி கேட்டும் தைரியமா! இதோ பாருங்கள்!" என்று மலைபோலே அலைகள் குமுறி எழுந்தன! தோணி "குபுக்" என்று ஆழ்ந்தது; பிறகு அலை யுச்சியில் எழுந்தது! மறுபடி ஆழ்ந்தது! எழுந்தது; இப் பாவிகளின் அகங்காரச் செவிட்டில் பத்து அறை விடுவதுபோலப் புயல் வீறிட்டடித்தது! பாய்மரம் ஒடிந்து விழுந்தது! திசைக் கருவி போயிற்று! காந்தப் பெட்டி போயிற்று! மீண்டும் ஒரு அலை இருபதடிக்குமேல் தோணியைத் தூக்கி "குபுக்" கென்று கடலில் ஆழ்த்தியது! மார்தட்டிப் பேசிய மாலுமி ஹோகயா! கடல் அவனை விழுங்கிவிட்டது! "அண்ணனைத் தேடுவோம்" என்று துடுப்பை விசையாக ஊன்றி னர் படகோட்டிகள். "இன்னொரு அலை நுரைத் தெழுந்தது; தோணி அதன் உயரக் கிளம்பி திடீ ரென்று தாழ்ந்தது! சுக்கான் போய்விட்டது! விட்டானா கொம்ப்-ரா-ஷி-த் தலைவன்! "ஏ புயலே, என்னிடமா உன் ஜம்பம் பலிக்கும்?" என்று சபதம் கூறினான். "போடு நங்கூரம்; தேடு அண்ணனை" என்றான். தொப்பென்று நங்கூரத்தைப் போட் டார்கள்! திடீரென்று மற்றோர் புயல் அலை வீறிட் டெழுந்தது! கயிறு அறுந்தது; நங்கூரம் பாதாளத் திற்குப் போய்ச் சுகமாகப் பள்ளிகொண்டது! இன் னோர் அலை வந்தது! தோணி முகப்பிலிருந்த மரியாள் உருவை அடித்துச் சென்றது!

பாய்மரம், சுக்கான், திசைக் கருவி, மாலுமி, எல்லாம் இழந்து, விதிவழியே செல்லும் மனம் போலே தோணி, புயல் வழியே அங்குமிங்கும் குடிகாரன் மாதிரி தடுமாறியது! இப்போது மணிச் சத்தம் மறைந்தது. பயங்கரமான அலைகளில், வெறி நடனம் புரிந்துகொண்டே தோணி எங்கோ ஓரிடம் சென்றது...." விளக்கு, விளக்கு" என்றான் தலைவன். ஆம், ஒரு கலங்கரை விளக்குத் தெரிந்தது!

இக்காலக் கலங்கரை விளக்கு செமண்டு கோபுரத்தின்மேல், அஞ்சலளிக்கும் இரண்டு துணைக் கரங்கள்போல் கதிர்காந்திச் சுற்றி வரும் சுழல் விளக்குடன் அமைந்தது. அது மின்சாரத்தினால் ஒளிர்வது. ஆனால், அக்காலக் கலங்கரை விளக்குகள் உயரமான பாறைமீது எரியும் சொக்கப்பானை என்றே சொல்லவேண்டும். இந்த இடத்தில் முன்பு (*New White*) புது வெள்ளை என்ற பெரிய கப்பல் உடைந்து மூழ்கியது. அந்த இடத்தில் முதல் ஹென்றி (*Henry I*) இந்த விளக்கை நாட்டினான். ஒரு பாறைமேல் பெரிய சட்டி வைத்து அதில் மெழுகு, அரக்கு முதலிய எரியும் பொருட்களை நிரப்பித் திரியிணைத்து சொக்கப்பானை எரிகிறது! இந்த எரியை இரவு முழுதும் பாதுகாக்க அப் பாறையில் தக்க ஏற்பாடுண்டு. அந்த எரியில் விட்டிலைப்போலப் புகுந்து இறந்த பறவைகள் கணக்கில! "உஷார், இங்கே பாறை!" என்று மாலுமிகளுக்கு அவ் விளக்கு எச்சரிக்கை செய்தது! மாலுமியில்லாமல் செத்த பிணம்போலே புயல் ஏற்றிய வழியெல்லாம் சென்று தவிக்கும் இத் தோணிக்கு அதனால் என்ன

பயன்? குருடன் மாதிரிச் செல்லும் படகு இப் பாறையில் மோதிப் பக்குவிடப் போகிறது! இதோ பாறை வந்துவிட்டது! தோணியிலிருந்த அயர்லாந்து மாது வெகு விரைவாக ஜபமாலையை உருட்டுகிறாள். மற்றவர் உயிர் தத்தளிக்கிறது!

"பயமில்லை, பாறைதானே! நாம் மனிதர், கொம்ப்-ரா-ஷிகர்!" என்று மீசை முறுக்கி யெழுந்தான் தலைவன். "கைகொடுங்கள்! ஏலேலே! ஏல! ஹுரா!" என்று எல்லாரும் சேர்ந்து பாய்மரக் கம்பத்தைப் பெயர்த்துக் குறுக்கே போட்டனர். அது நல்ல மிதப் பாகும் "இதை எல்லாரும் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். தோணி பாறையில் மோதி உடைந்த தால் இந்த மிதவையைப் பிடித்துக் கரையேறலாம்!" என்று அபயம் கூறினான் தலைவன். எல்லாரும் உயி ரைப் பிடித்துக்கொள்வதுபோல் மிதவையைப் பிடித் துக் கொண்டிருந்தனர்!

இன்னொரு கடும்புயல் கிளம்பியது! கலங்கரை விளக்கை அது அவித்தது! இந்தத் துஷ்டரின் உயிர் விளக்கையும் அது அணைக்கப் போகிறது! ஆனால், இயற்கை இன்னும் இவர்களைத் தத்தளிக்க வைத்தே பிறகு மூழ்க்குவோம் என்றெண்ணியது. மற்றோர் அலை 20 அடிக்குமேல் கிளம்பியது; தோணி எங்கேயோ போய்ச் சேர்ந்தது! "ஹா, தப்பினோம்! ஹுரா!" என்றான் தலைவன்! ஆம், ஒரு கண்டம் தப்பியது; தப்பியென்ன? விளக்கு போயிற்று! கொம்ப்-ரா-ஷி-கர் மனம்போலவே எங்கும் காரிருள் சூழ்ந்தது. மற்றொரு பாறை தடைச்சுவர் போலே

எதிர்நின்றது; விளக்குப் பாறையைவிட இந்த இருட்டுப் பாறை அபாயமானது! ஒரு மோது மோதி ஞல் தோணி நூறு சுக்காகும்; ஆட்கள் அத்துடன் சரி! விளக்குடைந்த தீபசிகை மாதிரி, உயிர் மறைந்து போகும். இதோ பாறை! அச்சமயம் மீண்டுமொரு புயல்! அலை விம்மி மேலெழுந்தது! தோணி அதன் உச்சியில் நடனமாடியது! பிறகு! அதோ அங்கே போய் இறுகிறுவென்று சுழன்றது! நல்லவேளை வாய்ப் பாறையினின்றும் அது வெகுதூரம் போயிற்று! பூனை, தான் பிடித்த எலியைச் சிறிது விளை யாட்டுக் காட்டிப் பிறகு 'பசக்'கென்று பிடித்து விழுங்கும். அதுபோல இக் கார்கடலும் இப்பாவி களுடன், கொடுமையாக விளையாடியது! மற்ருெரு பாறையினின்றும் அலைகளால் தோணி தப்பியது!

"இப்போது புயல் சிறிது நின்றது; இந்தப் பயங் கர நாடகத்தின் இறுதிக் காட்சியைக் காண்பது போல" இயற்கையில் ஒரு மௌனம் பரவியது....

—"ஹா தண்ணீர் ஏறுகிறது" என்ருெரு கூக் குரல் கேட்டது!

—எங்கேயடா?

—கப்பலடியில் ஓட்டை, தண்ணீர் ஏறுகிறது!

—என்னடா சொல்லுகிருய் மடையா!

—இன்னும் அரை மணி நேரத்தில் நாம் பாதாள லோகத்தில் இருப்போம் என்று சொல்லுகி றேன்

—ஓட்டை எங்கே?—கண்டுபிடி.

—முடியாது—நீர்—கண் தெரியாது. இருள்.



இதற்குமேல் பேச்சில்லை—கிழவன் சுரைக் குடுக்கையைத் க்கிப் பிடித்துக்கொண்டே அனைவரும் ஆழ்ந்தபின் தானும் டலில் மூழ்கினன்.

—தண்ணீரை இறைப்போம்—எடு குழாயை.

—குழாயில்லை.

—வாளி!

—இல்லை.

—எடு ஆயுதம், பொத்தலைச் சரிபண்ணுவோம்.

—ஆயுதமில்லை.

—சுக்கானைத் திருப்பி வேறு திசையில் ஓட்டுவோம்.

—சுக்கானில்லை.

—அட அபசகுனமே! இல்லை, இல்லை, இல்லை! உந்தித் தள்ளடா மிதப்பை........

—பலமில்லை........

—ஏதாயினும் ஒரு கரை கிடைக்குமடா உந்து....

........ஏலேலோ........

—கரையில்லை—கடல்தான் உள்ளது

—என்ன செய்வோம்!

—சாவோம்!

## 17. பாபமூட்டை!

தோணியில் மெல்ல மெல்லத் தண்ணீர் ஏறுகிறது! ஆட்களுடன் கனமான சாமான்களும் இருப்பதால், தோணி விரைவாகக் கடலில் அமிழ்கிறது. "தூக்கியெறி மூட்டைகளை" என்றான் தலைவன்; "ஐயோ, என் சாராயப் பெட்டி! ஐயோ என் வெள்ளி, என் தங்கம், என் படுக்கை, என் உடுக்கை! ஐயோ என் வெஞ்சனம், என் மீன்சாக்கு, என் பன்றிக்கறி, என் மாட்டுக்கறி!'—என்று மாரடித்துக்கொள்ளுகின்றனர் அஞ்ஞானப் பேதையர். ஒவ்வொரு

மூட்டையாகத் தூக்கித் தூக்கிக் கடலில் எறிகிறான் தலைவன். கர்மமூட்டைகள் ஒழியும்போது, மனித னுடைய ஆசாபாசம் எப்படி மார் புடைத்தழுகிறது பாருங்கள்? இதோ ஆட்கள் கடலுக்கு இரையாகப் போகின்றனர். அப்போதும் மூட்டைகள்மீது அவர் ஆசை விடவில்லை. எல்லா மூட்டைகளும் அலை களுக்கு இரையாயின. பாவத்தொழிலால் வந்த பொரு ளெல்லாம் அலையிற் பறந்து சென்று விழுந்தன. எத்தனை குழந்தைகளின் கண்ணீரோ இந்த கப்ப லில் தண்ணீராக ஏறுகிறது. "ஐயையோ, அப்பப்பா! எல்லாம் போச்சே! என்ன செய்வோம்!" என்று ஏகக் கூக்குரலிடுகின்றனர் அக்கொடியர். அச்சமயம், "இன்னும் ஏதாவது மூட்டையிருக்கிறதா?" என்று அலறினான் தலைவன். இப்போதே அந்தக் கிழவன் எழுந்து கம்பீரமாக நின்று, "கனத்தமூட்டை இருக் கிறது," என்று ஆவேசமாகக் கூவினான்.

—என்ன மூட்டை?

—நமது பாபமூட்டை!

—அதை எந்தக் கடலில் எறிவது!

—கண்ணீர்க் கடலில்!

"இரும்பு நேர் நெஞ்சகக் கள்வனுகிலும், உன்னை இடைவிட்டு நின்றதுண்டோ?" என்னும் வேதவாக்கு இங்கே உண்மையானது.

சாவு முன்னே நிற்கும்போது எப்படிப்பட்ட கல் நெஞ்சனும், அகம்பாவியும் "ஐயோ தெய்வமே!" என் கிறான். இயற்கை தன்னைக் கொடுமையாகச் சோதிக் கும்போதே மனிதன் இறைவனைக் கூவுகிறான்;

தான் பிறருக்குச் செய்த கொடுமையை எண்ணுகிருன். இந்தக்கொடிய கொம்ப்-ரா-ஷி-கர் இதோ அலைவாயில் அமிழ்ந்து கொண்டிருக்கின்றனர். இதோ அவர் உடல், நீரில் புதையப்போகிறது. இப்போது அவர் மனத்தில் இரக்கம் எழுந்ததென்ருல் அதில் வியப்புண்டோ? அந்தராத்மா ஒவ்வொருவர் உள்ளத்திலும் மறைந்திருக்கிருன். நல்லோர் மனம் பளிங்கு போலிருக்கிறது; அவனைக் காண்கிறது; மனச்சாட்சியானது அவன் சொற்படி நடக்கிறது. அஞ்ஞான அந்தகார மனம், நீண்டகாலம் அவனை எதிர்க்கிறது. மனச்சாட்சியின் மென்னியைப் பிடித்தழுத்தி, நற்குணங்களையெல்லாம் கொள்ளையடித்துப் பிறவியைப் பாபக் காடாக்குகிறது, ஒருநாள் உணர்வு வருகிறது.



கொம்ப்-ரா-ஷி-கருக்கும் இதோ உணர்வு வந்தது. எல்லோரும் மண்டிபோட்டனர். "ஆ, கர்த்தரே, எங்களை மன்னியுங்கள்! பாவிகளுக்காக சிலுவையில் பலியான எங்கள் ஏசுநாதரே! எங்கள் கொடுமையை மன்னியுங்கள். எளியாரையும், பாவிகளையும் காப்பாற்றத்தானே நீர் பூலோகத்திற்கு இறங்கிவந்தீர்—ஏசுவைப்பெற்ற மேரியம்மா! உன்னைத்தொழுகின்ருேம்; ஜபம் செய்கிருேம்! எங்களுக்கு இரங்கு........" என்றெல்லாம் முகத்தை மூடிக்கொண்டு அழுதனர்.

"கேளுங்கள்........" என்று உரத்த குரலெடுத்தான் கிழவன்: புதை குழிபோல மௌனம் பரவியது; காற்றும் அலையும்கூட அடங்கிக் கேட்டது. வானம்

மட்டும் உறைபனிக் கண்ணீர் சொரிந்தது ; கிழவன் பேசினன்:—

"கருமமூட்டையைக் கடலில் எறிவோம். கடலல்ல புயலல்ல,—நம்மை இப்போது அழுத்துவது கொடிய பாபமூட்டை! ஐயோ, நாம் எத்தனை குழந்தைகளை, பச்சைக் குழந்தைகளை, உருக்குலைத்தோம்! எத்தனை சிசுக் கொலைபுரிந்தோம்! எத்தனை தாய்மாரின் இரத்தக் கண்ணீரை வடித்தோம்! அத்தனை பாபமும் இப்போது நமது மனத்தை நரகச் சுமையாக அழுத்துகின்றது ; அதிலும் நாம் இறுதியிற் செய்தோமே, அந்த பாபத்தைக் கருணைவள்ளலான நமது கர்த்தரும் மன்னிப்பரோ என்பது சந்தேகம்! அந்தப் பாலகனை, அப்படித் தனிப் பாறையில், அந்தக் கொலைக் களத்தில் பனியிருளில் சாக விடுத்தோமே! ஆ, இங்கே வீசும் புயல் அங்கும் வீசுகிறது! நாம் கடலில் வருந்திச் சாகிறோம்; அந்தக் குழந்தை திக்குத் திசையறியாமல், மலையில் வருந்திச் சாவான். தூக்கு மேடைக்கு அஞ்சி இப்படி அப் பையனை விட்டுக் கடலைச் சரணடைந்தோம்! இனி ஆபத்தில்லை என்று விடுத்து முழக்கினேம். அரச தண்டத்திற் கஞ்சி அலைகளை யடைந்தோம்! இதோ மனிதச் சட்டத்தைவிடக் கொடிய இயற்கை நம்மைத் தண்டித்துவிட்டது. அங்கே தூக்குமேடையில் ஏற அஞ்சிக் கள்ளத் தோணியில் ஏறி மகிழ்ந்தோம்! எக்களித்தோம்! நம்மைப் பந்துபோல ஏற்றி விளையாடிய அலைகள் இதோ நம்மைப் பற்றி விழுங்கிக்கொண்டிருக்கின்றன. நாம் செய்த பாபமே அங்கை விரித்து நமது உயிரை அள்ளிக் குடிப்பதுபோலிருக்கிறது இந்தத்

தோணியைப் பார்த்தால். தோழர்களே, இரக்கப் படுங்கள். அழுங்கள்! அழுங்கள்! நமது உயிரைக் கரைக்குமுன்பே இந்த அலைகளில் கண்ணீரைக் கரையுங்கள்.

" ஐயோ இப்போது என்ன செய்வோம்," என்று எல்லாரும் அழுதனர். இதோ சாவு நம்முன் ஆர்க்கலிக்கிறது. இப்போதாவது ஒரு புண்ணியம் செய்வோம். இதோ பாருங்கள்! அந்தப் பையனைப்பற்றிய பத்திரம் இருக்கிறது. இதில் அவன் விவரங்களை நான் எழுதிவைத்திருக்கிறேன். 'அந்தப் பையன் இன்ன பிரபுவின் மகன், அவனை இவ்விதம் வஞ்சித்து உருக்குலைத்தோம்; அந்தப் பாபத்தில் பங்கு கொண்டவர் இவர்; அந்தப் பையன் வரலாறு இது—' என்றெல்லாம் இப் பத்திரத்தின் பின்புறம் விரிவாக எழுதியிருக்கிறேன். அவையெல்லாம் உங்களுக்குத் தெரியுமாதலால், இந்த நெருக்கடியில் படிப்பது அநாவசியம். எல்லாரும் இதில் கையெழுத்துப்போடுங்கள் உடனே" என்று கிழவன் ஆவேசமாகப் பேசினான். " ஆஹா இதோ—" என்று எல்லாரும் அப் பத்திரத்தில் கையெழுத்திட்டனர். முதற் கையெழுத்து கிழவன் போட்டான். பிறகு மற்றவர் கையெழுத்திட்டனர்.

(1) டாக்டர் ஹெரார்து ஜீஸ்தமுந்து (Doctor Gerhardus Geestemunde)

(2) பார்பாரா பெர்மாய், திரிபுத் தீவு (Barbara Fermoy, Tyrryf Isle)

(3) கேயிஜ்தோரா, தலைவன் (Gaizdorra, Captain)

(4) ழியான்ழிராத் (Giangirate)

(5) நரபொன்னே என்னும் ழாக் காதூர்ஜ (Jacques Quatou·ze *alias* Narbonnais)

(6) லுக்பியர் கப்கரூப் (Lue Pierre Cap-garoupe)

(7) அஸான்ஸியான் (Asuncion) பாஸ்குப் பெண்

(8) —(கிரல்) ஐரிஷ் பெண்

(9) மீகான்—(அலை விழுங்கிவிட்டது)

(10) ஆவ்மாரியா (திருடன்)—

கிழவன் பத்திரத்தைக் கவனமாக மடித்தான். "லுக்பியர், உன்னிடமிருக்கும் ஹூர்கோனுன் சுரைக் குடுக்கையைத் தா இங்கே," என்றான். லுக்பியர் அதிலிருந்த பீரை மடமடவென்று குடித்துக் காலிபண்ணிச் சுரையைத் தந்தான். கிழவன் அதில் பத்திரத்தைப் பாதுகாப்புச் செய்துவைத்தான். சுரையை இறுகமூடி, அதைக் கீலில் தோய்த்து உறுதியாக்கிக் கையில் தூக்கிப் பிடித்துக்கொண்டான்.

இதற்குள் தண்ணீர் இடுப்பிற்குமேல் வந்துவிட்டது. இதோ மார்பு—அமிழ்கின்றது.

—தொழுவோம்!
—அழுவோம்!
—கடலில் விழுவோம்!
—மன்னிப்பு—மன்னிப்பு!
—பரலோகத்திலிருக்கும் பரம பிதாவே!
—உன் புண்ணிய நாமம் முழங்குக!

—உன் அருளரசு வருக!
—உன் விருப்பம் நிறைவேறுக!
—ஆ, ஏசு! ஆ, மேரியம்மா!

இதற்குமேல் பேச்சில்லை—கிழவன் சுரைக் குடுக்கையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டே அனைவரும் ஆழ்ந்தபின் தானும் கடலில் மூழ்கினான்.

அத்தனை பேரையும் அலைகடல் உண்டு வெறி நடனம் புரிந்தது—இதுகாறும் தோணி அலைந்த கடலில், இப்போது அதோ ஒரு சுரைக்குடுக்கை மிதக்கிறது. அந்தக் குடுக்கையை மறவாதீர்கள்; அதுதான், அந்த அனாதைப் பையனுக்கு அருந் துணை. எப்படி என்பதைப் பின்னால் அறிவோம்.

## 18. ஐயோ பாவம்!

கொம்ப்-ரா-ஷி-கரைப் புயற்கடல் விளையாட்டி, உருட்டி விழுங்கியது. அதே சமயந்தான் அந்த அனாதைப் பையன் செங்குன்றின் உறைபனியிற் பதிந்த கால் தடத்தைப்பற்றி, மெல்ல மெல்ல "யாராவதொரு அம்மா இருப்பாள்," என்று செல்லுகிறான். பையன் தாய் தந்தையரை அறியான். கொம்ப்-ரா-ஷி-க் கொடுமைகளையே அறிவான். இருப்பினும், குழந்தை என்றிருந்தால் "அம்மா" என்றொரு அபிமானம் இயல்பாகவே உதிக்கிறதல்லவா? அடிச்சுவடுகள் நெடுந்தொலை சென்று மறைந்தன. பிறகு ஒரே வெண் பனிதான் எங்கும் உறைந்து கிடந்தது.

பையன் முன்பின் தோன்றாது திகைத்து நின்றான். அப்போது, ஏதோ ஒரு சத்தம் கேட்டது. பிறகு மறைந்தது; பிறகு இரண்டு முறை "உஸ்,

உஸ்" என்று கேட்டது; மறைந்தது. பையன் அங்குமிங்கும் அச்சங்கொண்ட இளமான் போலப் பார்த்தான்; "ஒன்றுமில்லை" என்று திரும்பினான்; உடனே ஒரு அழுகைச் சத்தம் கேட்டது. அது ஆட்டுக் குட்டி கத்துவதுபோலிருந்தது. பிறகு "கீர் கீர்" என்ற சத்தம். "இதென்னடா இது?" என்று பையன் ஓசையைப்பற்றிச் சென்றான். அழுகைக்குரல் பலமானது.

"ஆ, அதோ" என்று பையன் ஓரிடத்தில் நின்றான்; பார்த்தான்; "ஆம் அம்மா" என்றான்!

அம்மாள் எந்நிலையில் இருந்தாள். அம்மா கண் மூடிவிட்டாள்; முகம் வெளுத்தது; உடலில் பனிமூடியிருந்தது; ஆடை அலங்கோலமாகக் கிடந்தது; உறைபனியை மெல்ல விலக்கினான் பையன். "குவா, குவா!" என்ற சத்தம் கேட்டது. என்ன அது? அம்மா மார்பில் ஒரு குழந்தை படுத்திருக்கிறது; உயிரற்ற முலையைச் சப்புகிறது! அழுகிறது!

"அம்மா! குழந்தை, குழந்தை" என்றெழுப்பினான் பையன். அம்மா உடல் விறைத்துப்போனது. அவள் உயிர் பரலோகம் போய்விட்டது. தான் ஆவலாகத் தேடிவந்த அம்மா பிணமாகக் கிடக்கிறாள். குழந்தையும் சிறிது நேரத்தில் இறந்துபோயிருக்கும்.

பையன் குழந்தையைப் பார்த்தான்—பெண் குழந்தை.

ஏழைகளின் தலைவிதி இப்படியிருக்கிறது. இவள் ஒரு ஏழைப் பெண், அனாதை, குழந்தைத் தாய். ஒரு ஒதுக்கிடந்தேடிச் செல்லும் வழியில், புய

லடித்து, உறைபனி பெய்து, கீழே விழுந்து இப்படி மாண்டுபோனாள். இளந் தாய்; கனகக் கும்பம் போன்ற அவள் மார்பில் ஒரு துளி பால் வடிந் துளது; தனது குழந்தைக்குத் தாயன்பு சுரந்த இறு தித் துளி அதுவே. பளிச்சிட்ட மின்னொளி பட்டுக் குழந்தைக்குக் கண்பார்வை போய்விட்டது. குழந் தைக்குச் சுமார் ஓராண்டிருக்கும்; என்றாலும், அது வறுமையால் வற்றிப்போய் ஆறு மாதக் குழந்தை மாதிரியிருக்கிறது.

குழந்தை அழுதழுது கண் வீங்கியிருந்தது; உதடு துடித்தது; அந்தோ! நேற்றுப் பிறந்த குருத்து—அதற்கும் துக்கம் அனுபவிக்க தலையில் எழுதியிருக்கிறது பாருங்கள்! அழகான குழந்தை! கண்ணை மின்னல் பறித்துச் சென்றது. யாருமில்லாத் தனிமையில், தாயின் பிண மார்பில் இந்தக் கண்ணில் லாக் குழந்தை அழுது சாகிறது. அதற்கு யார் துணை. சர்வசாக்ஷியான இறைவன் இதோ இன்னொரு அனாதைக் குழந்தையை அதற்கு துணையனுப்பி னான். அனாதைக்குத் துணை அனாதை—இருவருக்குந் துணை இறைவனே.

குழந்தை பனியால் விறைத்துப் போயிருந்தது. "ஐயோ பாபம்!" என்று பரிதபித்துப் பையன் குழந்தையைக் கையிலெடுத்து அதன் முகத்தைத் தன் கன்னத்தில் ஒற்றி "அழாதே தங்கச்சி!" என்று முத்தமிட்டான். இந்த முதல் முத்தம் இருவருக்கும் ஆறுதலளித்தது; இருவர் உள்ளத்தையும் அன்பினால் இணைத்தது. பையன் போட்டிருந்த ஒரு கந்தல்

கோட்டும் கல்லிலும், புதரிலும், பனியிலும் பட்டுக் கிழிந்துபோனது. அக் கிழிசலில் பாதி கிழித்துக் குழந்தைக்குப் போர்த்து "படுத்துக்கோ தங்கச்சி" என்று தோளில் போட்டுக்கொண்டான். குழந்தை அமைதியாக உறங்கியது.



பசி, களைப்பு, குளிர்; பையன் வாடிப்போனான். உயிருள்ள மனிதர் அவனைக் கொடுமையாகக் கைவிட்டோடினர்; 'ஊசலாடிய மாமா' பயமுறுத்தி வெருட்டினர்; தேடிச்சென்ற அம்மா பிணமாய்க் கிடந்தாள்; உலகில் அவனுக்குத் துணை இப் பெண் குழந்தையானது; அக் குழந்தைக்குத் துணை அவனேயானான். பனி தாங்காமல் ஒரு தாய்போலக் குழந்தையைக் கவனமாக மூடிக் கிழக்கே சென்றான் பையன். வழியெல்லாம் பனி உறைந்திருந்தது; அதை சுற்றிக்கொண்டே வழிபார்த்து நடந்தான். முன்போல விரைவாக நடக்கமுடியவில்லை; கையில் குழந்தையொன்றுள்ளது. பனி வழுக்கிக் கால் தவறி விழுந்தால், அந்த இடத்தில் இரண்டு உயிர்கள் மாளும். அவன் வயதிற்கும், தளர்விற்கும், நிலைமைக்கும் இந்தச் சுமை அதிகமே. காற்று அவனைப் பிடித்துத் தள்ளுகிறது. எப்படியோ எல்லா இடர்களையும் சகித்துக் குழந்தையைக் கவனித்து நடந்தான் பையன். நடந்து எங்கே செல்வது? பசியொன்று இருக்கிறதே; இக் குழந்தைக்குப் பால் வேண்டுமே! யார் இருவருக்கும் இரங்குவர்? இருப்பதா, இறப்பதா?

பையன் சுத்தமாகத் தளர்ந்துபோனான்; இனி நடக்கமுடியாது; "ஏதாயினும் ஒரு வீடு இருக்குமா" என்று சுற்றிப்பார்த்தான். நல்லவேளையாய், சற்று தூரத்தில் சில மாடிவீடுகள் தெரிந்தன; சர்ச்சு ஸ்தூபி தெரிந்தது; பையனுக்கு நம்பிக்கை வந்தது; புதிய பலம் வந்தது; பையன் குழந்தையைச் சுமக்க முடியாமற் சுமந்து சென்றான். வானளாவிய மாளிகைகள் தென்பட்டன; அவையனைத்தும் மூடியிருந்தன; எல்லாம் கற்கட்டடங்கள்; அவற்றுள்ளிருப்பவர் மனமும் கல்லோ? ஆம்!

பையன் ஒரு பெரிய வீட்டின் முன்னே சென்றான்; வாசற் கதவு மூடியிருந்தது; கதவைச் சத்தம் செய்ய அங்கே ஒரு இரும்புக்கம்பி யிருந்தது; அதை யெடுத்துக் கதவைத் தட்டினான்,—ஒருதரம், இரண்டு தரம். பதிலில்லை; மூன்றுதரம்—பதிலில்லை. வீடு உறங்குகிறது. செல்வர் வீடெல்லாம் அவ்வாறே மௌனம் வகித்தன. ஏழைகள் "வசிக்குமிடத்திற்குச் செல்வோம்" என்று பையன் குழந்தையுடன் தள்ளாடிச் சென்றான்.

இந்த இரண்டுயிர்களும் இப்படியே அலைந்து, அலைந்து பசியாலும், குளிராலும் வாடிச் சாகவேண்டியதுதானா? இன்றேல், இவர்களுக்குப் புகல் உண்டா!

மனிதர் யாரும் இவர்களைச் சேர்ந்தவில்லை. இயற்கையும் இவர்களுக்கு இரங்கவில்லை. இனி ஏழைபங்காளனான இறைவன் எப்படி வழிவிடுகிறான் என்று பார்ப்போம்.

# 19. உர்ஸாஸ்

உர்ஸாஸ், ஓமோ—இருவரும் இணைபிரியாத நண்பர். உர்ஸாஸ் மனிதன், ஓமோ ஓநாய். அவன் அதையே விரும்புவான்; அது அவனையே விரும்பும். இருவருக்கும் மெத்தப் பிடித்தம். இருவரும் ஒருவர் இயல்பில் இன்னொருவர் கடன் வாங்கிக்கொண் டனர். ஓமோ, பழகிய வீட்டு நாய்போன்று சாதுவா யிருக்கும். தனது மனித நண்பன் குறிப்பறிந்து நடக்கும்.

ஓமோ 5 அடி நீளம் உள்ள உரத்த ஓநாய். ஊளைச் சதையில்லாமல் அதன் உடல் வேட்டை நாய்போலே தசை யிறுகியிருக்கும். அதன் நடை பந்துபோன்ற லாகவமுடையது. மயிரடர்ந்த அதன் வாலே ஒரு அழகு. அது காட்டிலிருக்கும்போது ஒரு இரவில் 100 மைல் ஓடவல்லதாயிருந்தது; ஆற் ரோரப் புதர்களில் வசித்தது; நண்டுகளைப் பிடித் துண்டது.

உர்ஸாஸ் தனிமையிலேயே வாழ்ந்து, முதிர்ந்து, முடிவில் இந்த ஒரே நண்பனைக் கண்டுபிடித்துப் பழக் கினன். இருவருக்கும் உயிர் நட்பு ஏற்பட்டது. "நான் இறந்தபிறகு என்னைப்பற்றி அறிய விரும்பு வோர் ஓமோவைப் பாருங்கள்," என்பான் உர்ஸாஸ். ஆங்கிலச் சட்டம் ஓநாய்களின்மேல் கடுமையாயிருந் தது. ஓநாய்த் தலை கொண்டுவருவோருக்கு சர்க்கார் பணந்தந்தது. அவ்விதமாக நாட்டிலுள்ள ஓநாய்களை ஆங்கிலேயர் வேரோடொழிக்க முயன்றனர். வேல்ஸில் மட்டும் லட்சக்கணக்கான ஓநாய்கள் கொலையுண்டன.

ஆனால், நாலாவது எட்வர்ட் "நன்றாகப் பழகி, மனிதர் கூடவரும் ஓநாயை ஒன்றும் செய்யவேண்டாம்," என்று ஓநாய்க் கொலைச் சட்டத்தில் ஒரு பிரிவு சேர்த்தான். அப் பிரிவின் பரிவால், ஓமோ தப்பியது. மேலும், ஸ்டுவர்ட் மன்னர் காலத்தில், சீமாட்டிகளுக்கு ஓநாய்க் குட்டிகள்மேல் பிரியம் விழுந்ததால், சட்டத்தின் கடுமை தளர்ந்தது. சீமாட்டிகள் தயவில் சில ஓநாய்கள் உயிர்வாழ்ந்தன. ஓமோ யாரையும் கடிப்பதில்லை; ஜனங்களிடையே சந்தோஷமாக வாலையாட்டி நிற்கும்; ஓமோ ஊளையிடும். உர்ஸஸ் கரடித் தொண்டையுடன் சும்மா முணமுணப்பான். இருவரும் பட்டினி கிடக்கக் கூசுவதில்லை. இருவர் வயிறும் எக்கிப்போயிருக்கும். இருவரும் சேர்ந்தே சாப்பிடுவர்; சேர்ந்தே பட்டினியிருப்பர்; பனி, வெயிலைத் தாங்குவர்.

உர்ஸஸ் காட்டுத் தனிமையை விரும்புவான்; தனக்குத்தானே பேசுவான்; வேறெவருடனும் கலக்கமாட்டான். "மஹாத்மா ஸோக்ரதரும் தனிமையில் தனக்குத்தானே பேசுவார். லூதரும் அவ்வாறே. அப்படியே நானும்," என்பான் உர்ஸஸ். வினா, விடை—இரண்டும் அவனுள்ளத்திலிருந்தே வரும். சிலசமயம் தன்னைத்தானே பலமாகக் கண்டிப்பான், திட்டுவான், சினப்பான், உறுமிப் பல்லைக் கடிப்பான். சிலவேளை தன்னைத்தானே மெச்சி ஆமோதிப்பான்.



உர்ஸஸ் உலகம் ஒரு பெட்டி வண்டிதான்; அவ்வண்டியை இழுப்பது ஓமோ; பாதை கடினமா

யிருந்தால் இருவரும் சேர்ந்து இழுப்பர். கூட்டு வண்டி ஒரு சிறு வீடுபோலிருக்கும். அந்த வண் டியைக்கொண்டு அவன், இங்கிலாந்து, ஸ்காத்லாந்து இரண்டிலும் ஒரு கிராமம் விடாமல் வட்டமிட்டிருக் கிறன். அது உறுதியான நாலு சக்கர வண்டி. அதன் ஏர்க்காலில் ஓநாய் வசிக்கும். வண்டியின் முன்புறம் ஒரு கண்ணுடி வைத்த கதவு உண்டு; அதில் ஒரு முகப் புள்ளது; அதன்மேலிருந்தே உர்ஸ ூஸ் பிரசங்கம் செய்வான்; வண்டிக்குப் பின்புறம், தலை நுழையும் படியான சிறிய பலகணியுண்டு; அவசரமாக யாரா யினும் கூப்பிட்டால், அதன் வழியாகவே உர்ஸ ூஸ் எட்டிப்பார்ப்பான். வண்டியில் ஏற இறங்க, மூன்று படிவைத்த ஏணி ஒன்று அதில் பொருத்தியுள்ளது. அதை வேண்டும்போது இறக்கலாம், ஏற்றலாம். வண்டிக்குச் சாயமடித்திருக்கிறது. அரசருக்கேற்றபடி காக்காய்பிடிக்கும் சலுகையாளர் நடிப்பைப்போலவே காலத்திற் கேற்றபடி அந்த வண்டிச் சாயமும் அழிந்து அலங்கோலமானது. வண்டிக்குள்ளேதான் உர்ஸ ூஸ் குடும்பம் உள்ளது. குடும்பம் என்றால் பெண்சாதி பிள்ளைகளல்ல, அந்தப் பேச்சே அவனிடம் கிடையாது. பெண்ணின் மெல்லிய தோட்சுவையை அவன் அறியான். பிஞ்சிளங்குழந்தை யின் மழலை யின்பத்தை அவன் அறியான். வண்டிக் குள் அவனது சிற்றுலகம் அடங்கியிருந்தது. அதில் ஒரு நீளப்பெட்டியிருந்தது. அதில் அவன் புத்தகம், சட்டை துணி, லொட்டு லொஸ்குகளெல்லாம் அடக் கம். அவன் அதன்மேல் ஜமக்காளம் விரித்துப் புத்தகத்தைத் தலைக்கு வைத்துக்கொண்டு ஹாயாகப்

படுப்பான். "எனக்கு இரண்டு தோல்கள்—இது தான் உண்மைத் தோல்," என்று ஒரு பழைய கரடித் தோல் போர்த்துக் காட்டுவான். அதனுடன் கரடித் தொண்டையும் கூடினல் கேட்க வேண்டுமா! அசல் ஜாம்பவான்தான்! பெட்டிக்கடுத்து ஒரு இரட்டை இரும்பு அடுப் புள்ளது. ஒன்றில் சமையல் நடக்கும், மற்றொன்றில் மருந்து காயும். அவன் உணவு வெகு சொற்பம். பெரும்பாலும் உருளைக்கிழங்குதான். சமையலுக்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்களெல்லாம் அதோ ஒரு பரணில் அடுக்கப் பெற்றுள்ளன. மருந்துச் சரக்குகள் மற்றொரு பரணில் வரிசையாக அடுக்கப் பெற்றுள்ளன. ஒரு பக்கம் ஆணியடித்து ஒரு பழைய லாந்தர், ஒரு பிடில், புல்லாங்குழல், ஊது கொம்பு இவை மாட்டப் பெற்றுள்ளன. உள்ளே ஒரு அங்குலங்கூட வீணுகாமல் ஏதாயினும் ஒரு காரியத்திற்குப் பயன்படும். அதோ கொஞ்சம் காலி யிடம் இருக்கிறதே, அங்கே என்ன பாருங்கள்! ஏதேதோ எழுதியிருக்கிறது. உர்ஸுலஸ் தான் கண்டது கேட்டதெல்லாம் எழுதிவைப்பான். முதன்மை யாகப் பிரபுக்களைப்பற்றியும், ஒவ்வொரு ஊரிலு முள்ள செல்வர் விநோதங்களைப்பற்றியும், சட்ட திட்டங்களைப்பற்றியும் பல குறிப்புகள் எழுதிவைப் பான். அக் குறிப்புகள் மிகப் பல. உதாரணத்திற் காகச் சிலவற்றை இங்கே தருவோம்:

## 20. குறிப்புகள்

(1) பாரன், வைகௌண்ட், லார்ட், மார்கிஸ், டியூக் முதலிய பட்டம் பெற்றவர்களெல்லாம் பெத்த பிரபுக்கள். அவர் முத்துக்கிரீடம் வைத்துக்கொள்வர். வேல்ஸ் இளவரசர் அரசன் மகுடம்போலவே முத்துப் பதித்ததை அணிவார்.

(2) பிரபுக்கள் முன்னே தொப்பியெடுத்து, மூன்றுதரம் சலாம் போட்டு, "மாண்மைதங்கிய சமூகத்திற்கு அடியேன் விண்ணப்பம்...." என்று வணக்கமாகப் பேசவேண்டும்.

(3) *Upon my honour* (என் மரியாதையின் பேரில் ஆணையாக) என்று பிரபு ஒரு வார்த்தை சொன்னால் அதை நம்பியாகவேண்டும்.

(4) பிரபு ஒரு ஆளைக் கொல்லலாம்; கேள்வி இல்லை.

(5) பிரபுவிடம் ஆறு அன்னியர் இருக்கலாம்; மற்றவர்களிடம் நான்கு பேரே அதிகம்.

(6) பிரபு குற்றம் செய்தால் ஒரு மஹாப்பிரபு தான் விசாரிக்கவேண்டும். பிரபுவுக்கு உயர்ந்த தண்டனை 5 ஷில்லிங் அபராதமேயாகும்.

(7) அரசர் வனத்தில் இரண்டொரு மான்களைக் கொல்லப் பிரபுவுக்கு உரிமையுண்டு.

(8) பிரபுவின் மகள் 'லேடி'; மற்றவர் மகள் 'மிஸ்' ஆவாள்.

(9) பிரபு பேடாப் புறப்பட்டால், கூட ஒரு கூட்டம் வில்லைச் சேவகர் செல்வர். அவ்வளவு

சேவகரில்லாமல் புறப்பட்டால், பிரபுவின் அந்தஸ்திற்குக் குறைவாகும்.

(10) வரி கொடுக்காமல் பிரபு எட்டுப் பீப்பாய் சாராயம் வைத்துக்கொள்ளலாம்.

(11) பிரபு படை வரி, போர் வரி செலுத்த வேண்டியதில்லை. பிரபு நினைத்தமாத்திரத்தில் ஒரு படைதிரட்டி அரசனுக்குத் தரலாம்.

(12) பிரபு நம்பிக்கை மோசம் செய்தால் 'ஏன்' என்று கேட்கக்கூடாது. பிரபுவைக் கையால் சுட்டிக் காட்டக்கூடாது.

(13) பிரபுவுக்கு எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும் பரவாயில்லை. "பிரபு" என்ற மாத்திரத்திலேயே அவருக்குச் சட்டதிட்டமெல்லாம் தெரிந்ததாக அர்த்தம்.

(14) ஒரு பிரபு மனைவியின் பாவாடை வாலை ஒரு ஆண்பிள்ளை தூக்கிவரவேண்டும். அந்த மரியாதையுடனேதான் சீமாட்டி புறப்படுவாள்.

(15) 86 பிரபுக்கள் அரசனுடன் தினம் விருந்துண்பர். அவர் மேஜையில் நூறுவகைப் பணியாரங்கள் வைத்திருக்கும். இந்த விருந்துச் செலவெல்லாம் அரண்மனையைச் சுற்றியுள்ள ஜனங்கள் பொறுப்பாகும்.

(16) அந்தஸ்தில் தாழ்ந்தவர் யாராவது பிரபு மேல் கைவைத்தால், அவர் கையை நறுக்கி யெறியப் பிரபுவுக்கு உரிமையுண்டு.

(17) பிரபு ஏறக்குறைய அரசன். அரசன், ஏறக்குறைய கடவுள். உலகம் பிரபு மண்டலம் (Lordship) ஆங்கிலேயர் ஆண்டவனை (Milord) (பிரபுவே) என்று அழைப்பர்.

(18) பிரபுக்கள் வானளாவிய சலவைக்கல் மாளிகை கட்டி டாம்பீகமாக வசிப்பர். அந்த மாளிகையில் பலவர்ணக் கூடங்கள் உண்டு. ஒவ்வொரு வர்ணக் கூடத்திலும் இன்னார்தான் போக லாம் என்ற ஏற்பாடுண்டு. ஏழு வர்ணச் சலவைக் கூடம் ஒன்றுண்டு. அது பிரபுக்களின் வைப்பாட்டி களுக்கே தனியுரிமையாம். பிரபுக்கள் கோட்டையில் உல்லாச வனங்கள் வெகு அழகாயிருக்கும். பிரபுக்கள் வீட்டில் விலையுயர்ந்த அலங்காரச் சாமான்கள் இருக் கும்.

(19) காரன்வாலிஸ் பிரபு 14-வது நூற்றாண் டில் கட்டிய பழைய பெரிய அரண்மனையில் வசிக் கிறார்.

(20) சாலிஸ்பரி பிரபு, லண்டனில் ஏழு இடங் களில் வசிக்கிறார். அவர் முதல் மாளிகைக் கோபுரம் 262 அடி உயரம். அது, முதல் ஜேம்ஸ் காலத்தில் அரசாங்கப் பொக்கிஷத்தினின்றும் கட்டப்பெற்றது. பிரபு மனைவியின் கட்டிலே ஏராளமான பொன் விலைபெற்றது. அதற்கு மரம் பிரேஸிலில் காட்டி லிருந்து வந்தது.

"யாராவது இங்கே கெட்ட எண்ணத்துடன் வந் தால் அவமானப்பட்டுப் போவான்," என்று அந்தக் கட்டிலில் பொன்னால் எழுதியிருக்கும். அந்தக்

கட்டிடத்துக்கு "ஆயிரம் ஆண்கள்" (*Thousand men*) என்று பெயர்!

(21) வேமௌத் பிரபு வீட்டு அலங்காரங்கள் லூயி XIV மாளிகை அலங்காரம்போல் இருக்கும்.

(22) ஜேம்ஸ் II தர்பாரைச் சேர்ந்த 71 பிரபுக்களும், நாட்டு வருமானத்தில் 1/11 (பதினொன்றில் ஒரு பங்கு) ஸ்வாஹா பண்ணினர்! இந்தமாதிரி இன்னும் பல பிரபுக்களின் மாளிகை வாழ்வுக் குறிப்புகள் உர்ஸுலஸ் வண்டிக்குள் காணும். தனது சண்டப் பிரசண்டங்களில் அவன் அக் குறிப்புகளைப் பயன் படுத்தி அனைவரையும் சிரிக்கவைப்பான்.

## 21. உர்ஸுலஸ் சரக்கு

உர்ஸுலஸ் உலகை வெறுப்பான்; உலகோர் நடையைக்கண்டு சிரிப்பான். "நீ படைத்த உலகின் இலட்சணத்தைப் பார்; தேனுண்ணும் உதட்டில் தேனீ கொட்டுகிறது. ரோஜாவுக்கடியில் முள் அடர்ந்திருக்கிறது; பொதுப் பணத்தைக் கொண்டு பிரபுக்கள் இடம்பக் கூத்தாடுகிறார்கள்; ஏழைகள் அனாதைகளாக வருந்துகிறார்கள்; பார் உன் உலகின் அழிநாடகத்தை," என்று கடவுளை அவன் அடிக்கடி இடித்துரைப்பான். ஒருநாள் ஜேம்ஸ் II ஒரு கத்தோலிக சர்ச்சில் மேரியம்மாள் சந்நிதிக்கு விலையுயர்ந்த தங்க விளக்கை அளித்தான். பார்த்தான் உர்ஸுலஸ்; "வேண்டியதுதான்! தெருவிலே ஆயிரம் ஏழைக் குழந்தைகள் ஆடையில்லாமல், செருப்பில்லாமல் வெறுங்காலுடன் திண்டாடுகிறார்கள்—பிச்சைக்காரப் பசங்கள் சாகட்

டுமே! மேரியம்மா, நீ தங்க
கொள்—உனக்கு அது இல்லாட
உரக்கச் சொன்னான். ஆன
வெளியே காட்டாமல், அதிகா
உர்ஸஸ் நடந்துகொள்வான்.
அவனைத் தொந்தரவு செய்வதில
ஓநாயையும் சும்மாவிட்டனர்.
III ஆகிய இரண்டு மன்னர் ஆட
திருக்கிறான். இருவர் ஆட்சியி
தடையில்லாமல் பிரிட்டன் தீவி
தது. அவன் ஏராளமான ஜன
வாழ்வின் போக்கையும் பார்த்
முடிவாக அவன் மனித சமு
தான். தன் ஓநாயைவிட மனி
தான். மூட நம்பிக்கைகளைக்
அருவருத்தான். "அரசருக்
சண்டை, உடைவது ஏழைமக்க
தான் உங்கள் அரசியல் என்று
உலகில் முட்டிமோது கஷ்டப்படு
ஒழிந்துபோவதே நல்லதென்பா

உர்ஸஸ் வயிறு ஓநாய் வ
—அப்படி எக்கிப்போயிருக்கும
வறுமையேன்? பிழைக்கத்தெ
தெரியும். அவனுக்குத் தெரிய
யாது. முதலில் உர்ஸஸ்
வைத்தியன். அவனுக்குத்
கிடையாது; காடு மலைகளிலிரு

கள் கொண்டுவந்து மருந்துசெய்வான். நோயைச் சொல்லுமுன், "இந்தா மருந்து" என்று தருவான். "எனக்கு மூலிகையின் வேர், கிளை, இலை, பூ, காய், கனி, விதை முழுதும் தெரியும். நிறம், மணம், சுவை இவற்றிலிருந்து ஒவ்வொன்றின் குணமும், பயனும் அறிவேன். என் பச்சிலையைக் கண்டால் நோய் பறக்கும்," என்று அவன் தனக்குத்தானே பேசிக் கொள்வான். வண்டியை ஒரு கிராமத்தில் நிறுத்தித் தனது மருந்துகளை விலைகூறி விற்பான்.

'உர்ஸுலஸ் வண்டி' என்றால் ஜனங்கள் கூடுவர். ஏன்? உர்ஸுலஸ் விகடகவி—வெகு தமாஷாகப் பேசுவான். கரடித் தோலும், கரடித் தொண்டையும் பார்த்தாலே எல்லாரும் சிரிப்பர். உர்ஸுலஸ் ஆங்கிலம், லத்தீன் இரண்டும் நன்றாய் அறிவான். அவற்றில் பல நூல்களைப் படித்திருக்கிறான். ஓநாயைத் தவிர அவனுக்குச் சில புத்தக நண்பரும் உண்டு. அவையே அவனது தலையணையுமாம். வைத்திய நூல்களை அவன் நிரம்பப் படித்திருக்கிறான். கன்னு-பின்னு-மன்னு-பொன்னு என்று கொஞ்சம் கவியும் பாடுவான். அவன் பேச்சும் கவியும் பெரு நகை விளைவிக்கும். அவன் தனது அனுபவங்களை வேடிக்கையாகச் சொல்லி ஜனங்களைச் சிரிக்கவைத்து மூலிகை மருந்தை விற்பான்.

"தாத்தா கொஞ்சம் கிரீக்கு பேசும், ஜெர்மனி பேசும், ஹீப்ரு பேசும்! என்றால் 'ஆஹா' என்று மளமளவென்று வாய் அள்ளி கொட்டும். ஜெர்மன் பாஷை பேசினால், ஒரு ஜெர்மன் வார்த்தையிராது.

பேச்சுமட்டும் அசல் ஜெர்மனிக்காரன் குரல்மாதிரி இருக்கும்.

ஹஸ்தானி ஸாது ஸ்ம்ப்ரோக்ஷ
ப்ருஷ்டான நவ சங்குலே
தானிதானி சசாகஞ்ச
நந்தானி தாருணசய:

என்று சம்ஸ்கிருதத்தில் உளறிக் கொட்டினால் எப்படி இருக்கும்! அதுபோலே உர்ஸ—ஸ் பேசும் அன்னிய பாஷையும் இருக்கும். பேச்சிற்கிடையே,

"ஹல்லஹு—ல்லாஹா பல்லுல்லிஹா வஹாதத் தாஹு— ஹு— ஹு—........ஹ ஹ ஹா! பார்த்தீர்களா அசல் அரபி பாஷை" என்பான். அதற்கு வேடிக்கை யாக வியாக்யானம் பண்ண ஆரம்பித்தால் பொழுது போவதே தெரியாது! "கேளப்பா தலைவலிக்குச் சுக்கரைத்துப் போடப்பா, நாடப்பா, காடப்பா," என்று நட்டாமுட்டி வைத்தியர் அகஸ்தியர் ஞான வெட்டியார் பெயரால் பாடுவதுபோலே கிரேக்க ரோம வைத்தியர் ஜாப்தாவெல்லாம் ஒப்பித்து தன் மருந்தை ஏலம் போடுவான்.

இது மட்டுமா! உர்ஸ—ஸ், பிறர் பேசுவது போல அபிநயிப்பான். ஒரு சீமானுக்கும் சீமாட்டிக் கும் தர்க்கம் நடப்பதுபோல நடிப்பான். சீமாட்டிகள் முகம் நவரச பாவனை குலுங்குவதுபோல் அவன் நடித்துக்காட்டும்போது சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகும். அது மட்டுமா! உள்ளான், ஊர்க்குருவி, காக்காய், பருந்து, மைனா, புல்புல் முதலிய பட்சி

களைப்போலக் கத்துவான். நாய்கள் குலைத்துச் சண்டையிட்டுக் கொள்வதுபோலக் காட்டுவான்; நரிபோல ஊளையிடுவான்; குதிரைபோலக் கனைப் பான்; புலிபோல உறுமுவான்; சிம்மம்போல கர்ஜிப் பான்.

இவ்வளவுதான் சரக்கு என்று நினைக்காதீர்! உர்ஸுஸ் புல்லாங்குழல் வாசிப்பான்; பிடில் இழுப் பான்; தான் கவனம் செய்த பாட்டை அரங்கேற்றும் போது அவன் வாய் பாடும், கை பிடிலிழுக்கும்.

உர்ஸுஸ் தடபுடலாக ஞானோபதேசம் செய் வான்; ஒருதரம் ஆர்ச்பிஷப் முன்னிலையிலேயே உபதேசத்தைத் தொடங்கி "சபாஷ்" பட்டமும் பெற்றுவிட்டான். அவனுக்குக் கலைச்சுவையுண்டு. அனைத்தினும் நகைச்சுவை அதிகம். அவன் உலகை யெல்லாம் உயிர்க்கும் கவிதையாகவே காண்பான். உபமான உபமேயங்களைத் தனது பேச்சில் பொழி வான். இரண்டு குழந்தைகளுடன் ஒரு தாய் சென் ருல் இதோ "கூவிளங்கனி (*Dactyle*) போகுதடா" என்பான். இரண்டு குழந்தைகளுடன் ஒரு தந்தை சென்ருல் "அதோ கருவிளங்காய் (*Anapeste*)" என்பான். தாத்தாவுக்கும் பாட்டிக்கும் நடுவே ஒரு குழந்தை போனால் "அதோ கூவிளங்காய் (*Amphi-macre*)" என்பான். அவன்மட்டும் சிரிக்கமாட்டான். அவன் பேச்சைக் கேட்டால் எல்லாரும் சிரிப்பர்!

ஒரு கிராமத்திற்கு வந்ததும் "பூம்! பூம்!" என்று கொம்பூதுவான்; கூட்டம் கூடும்; உடனே வயிற்று வலியைப்பற்றி அபிநயங்களுடன் வேடிக்கையாகப்

பிரசங்கம் செய்வான்; தொந்திப் பிரபுக்கள்போல நடிப்பான். அஜீர்ணத்தால் வருந்துவோர் முகச் சாடைகளைக் காட்டுவான். பிறகு தனது மருந்துக் கச்சந்தியை அவிழ்ப்பான். அந்த மருந்து சாப்பிட்டால் வயிற்று வலிக்காரன் எப்படிச் சிரிப்பான் என்று காட்டுவான்........இப்படி நாடகமாடிய பிறகு மருந்து வாங்குவாரும் உண்டு. "வைத்தியம் உளறுகிறது!" என்று சொல்லுவாரும் உண்டு. ஏதோ கைக்கும் வாய்க்கும் எட்டும்; வந்த காசிற்கு அவன் கொஞ்சம் உருளைக்கிழங்கு வாங்கி வேகவைத்துச் சாப்பிடுவான்.

மற்றபடி உர்ஸுலஸ் உலக வெறுப்புக்கொண்டு துளிச்சிரிப்பின்றி முகத்தைத் தொங்கப்போட்டிருப்பான். நோயாளி வந்தால் "அட கஷ்டமே! வாழ்க்கை கண்ணீர்க் கணவாய்; இதில் இன்னும் உழலாமல் சீக்கிரம் தொலைந்து போடா!" என்பான். பிறகு "தொலை, இன்னும் உலகிலிருந்து கஷ்டப்படு!" என்று மருந்தைக் கொடுப்பான். யாராவது பசியென்று வந்தால் "தொலைத்துக்கொள், இந்தா நீ சாப்பிட்டுப் போ, வாழ்வுச் சிறையில் இன்னும் இருந்து கஷ்டப்படு," என்று தன் உணவைத்தந்து, சாப்பிடச் சொல்லி அனுப்புவான். எளியவருக்கு அவன் கைபோலுதவுவான். இவ்வளவுதானு! அவன் வேதாந்தத்தில் கிளம்பினல், ஆளைக் காட்டிலேதான் கண்டுபிடிக்கலாம்! ஆங்கில-லத்தீன் புலவன், பன் மொழிப் பேச்சாளன், வைத்தியன், விகடன் என்றெல்லாம் அவனை ஜனங்கள் சொல்லுவார்கள். அவ

ளைக் கேட்டாலோ பார், வண்டிக்குள்ளே என்று ஒரு பலகையைக் காட்டுவான். அதில் என்ன எழுதியிருக்கிறது........

### உர்ஸுலஸ்—வேதாந்தி

இப்போது உர்ஸுலஸ் வேமௌத்தில் முகாம் போட்டிருக்கிறன். ஓரியாக உருளைக்கிழங்கை அவித்துண்டு வாழும் இந்தக் கிழவனுக்கு ஒரு குடும்பப் பொறுப்பு ஏற்படுகிறது பாருங்கள்! உர்ஸுலஸ் தனது நினைப்பில்லாதவன்; தன் பசிபாராது பிறர் பசி தீர்ப்பவன். இந்தத் தியாக புத்திக்கு ஆண்டவன் வேலை தருகிறுர் பாருங்கள்! எப்படி? இதோ அந்த அநாதைப் பையனை பார்ப்போம்.

## 22. ஊள்! ஊள்! ஊள்!

இனிப் பையனைப்பார்ப்போம். பையன் இப்போது வந்த ஊர் வேமௌத் (Weymouth). ஜார்ஜ் III-ன் காலத்திற்குப் பிறகு வேமௌத் பெரிய பட்டணமாகிவிட்டது. அங்கே ஜார்ஜ் III-ன் பெயரால் சிலைகள், பெரிய ஹோட்டல்கள், மாளிகைகள் எல்லாம் விளங்குகின்றன. இவ்வூரில் பல இசைப்புலவர் இருக்கின்றனர்.

நமது கதை நிகழும் காலத்தில் வேமௌத் சிறிய ஊராயிருந்தது. ஒரு சர்ச்சைச் சுற்றி பல மலைகள் இருந்தன; நார்மன் பிரபுக்கள் எழுப்பிய பெரிய மாளிகைகள் இருந்தன.

பையன் ஒவ்வொரு வீட்டுக் கதவையும் தட்டித் தட்டிக் கையலுத்துக் கால் தளர்ந்து, தள்ளாடி தெருத் தெருவாகச் சென்றான். யாரும் அவனுக்கு இரங்கவில்லை. இச்சமயம் குழந்தை விழித்துக்கொண்டது. "படுத்துக்கோ, கிளியே" என்று அதை முத்தமிட்டுத் தோளில் சாய்த்துக்கொண்டான். குழந்தை தாயின் கையில் இருப்பதாகவே நினைத்து அமைதியாயிருந்தது. எதிரே ஒரு பாலம் வந்தது; பையன் அதைத் தாண்டி அப்புறம் சென்றான். அப்புறம் பெரிய பெரிய வீடுகள் இருந்தன. செய்ண்ட் தாமஸ் தெருவில் பையன் நுழைந்தான். அவனால் நடக்க முடியவில்லை. கதவைத் தட்டக்கூட முடியவில்லை; பேசவும் சீவனில்லை. இந்தத் தெருவும் உறங்கியது; உலகமே ஒரு மோனக் கனவில் மூழ்கியிருந்தது. தங்க ஒரு சாண் இடம் கிடைக்கவில்லை; பையன் இன்னும் இரண்டு மூன்று தெருக்களைத் தாண்டினான். முடிவில் ஒரு வீட்டை உரக்கத் தட்டி "அம்மா!" என்று ஈனக்குரலெடுத்தான். "டாண்! டாண்! டங்!" மூன்று மணியடித்தது. பிறகு எல்லாம் மௌனம். 1690-ம் ஆண்டில் பெரும் புயலடித்து ஏராளமான பேர் இறந்தனரல்லவா; அச்சமயம் எங்கு பார்த்தாலும் ஏழை நோயாளர் புகலிடம் தேடித் திரிந்தனர். இவர்கள் புகுந்துவிடுவார்கள் என்ற அச்சத்தாலேதான் இப்படி ஊரார் கதவை இறுகமூடி உறங்கினர்.

பனி கொல்லுகிறது; கால் கெஞ்சுகிறது; இனிச் சீவனில்லை; வழியில்லை; சாகவேண்டியதுதான் என்று பையன் கவலைகொண்டேங்கினான். காலை இழுத்து

இழுத்து மேலே நடந்தான். ஊர்க் கோடியிலுள்ள ஒரு மைதானத்திற்கு வந்தான். அது கடலோரம். ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு, இப் பையன் என்ன செய்வான். ஆ! துயரம்!

இனி இறைவனே அவனுக்கு இரங்கவேண்டும்.

இச்சமயம் ஒரு சத்தம் கேட்டது; "ஊள்! உள்! உள்!" ஆம் ஊழ்தான் கூவுகிறது. இழவூழ் கழிந் [illegible] இனி ஆகூழ் கூவுகிறது; அந்த ஊழ் சத்தத்தை [illegible]ச்சென்றான் பையன். ஒரு வண்டியருகே வந்தான். அதன் சக்கரத்தில் ஒரு ஓநாய் கட்டியிருந்தது. அதுவே அப்படி ஊளையிட்டது. வண்டி ஒருசிறு மனை போலிருந்தது. அதன் மேலே ஒரு புகைப் போக்கியிருந்தது; அதன் வழியே புகை சென்று கொண்டிருந்ததால், உள்ளே நெருப்பிருந்ததை அது அறிவித்தது. வண்டிக்குப் பின் புறம் ஒரு பலகணியிருந்தது. அதன் வழியே சிறிது வெளிச்சம் தெரிந்தது; பையன் வண்டிக்குப் பின்புறம் நின்றான். ஓநாய் பெரிய ஊளையிட்டது. ஊளை அதிகமானது. அச் சமயம் ஒரு தலை பலகணி வழியே வெளியே நீட்டியது.

" சும்மா இரு!" என்றொரு கரடித் தொண்டை ஓநாயை அதட்டியது. " ஊள் " நிற்கவில்லை.

—அங்கே யார்?

—நான்.

—நான் என்றால் யார்? எங்கே வந்தாய்?

—நான்தான் வந்திருக்கிறேன்.

—மணி என்ன ?

—குளிர் நடுக்குகிறது.

—அங்கே என்ன செய்கிறாய் ?

—பசிக்கிறது.

—எல்லாரும் வயிறு வாடாத பிரபுக்கள்போலச் சந்தோஷமா யிருக்கமுடியுமா ? போ, போ.

—ஆள் தலை மறைந்தது. பலகணி மூடியது. பையன் வெட்கிப்போனான் ; குழந்தையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, மீண்டும் தள்ளாடிக் கொண்டே சென்றான்.

## 23. புகல் கிடைத்தது

திடீரென்று வண்டிக் கதவு திறந்தது. ஒரு நெட்டைக் கிழவன் தோன்றினான் ; சிறு ஏணியை இறக்கினான்.

"அட பயலே, ஏன் போகிறாய் ? வாடா உள்ளே !" என்று கூவினான்.

பையன் திகைத்து நின்றான்.

—வா உள்ளே.

—பையன் இன்னும் திகைத்தான்.

—முட்டாள் வாடா என்கிறேன். பசியாம்—குளிராம்—கூப்பிட்டால் ஆந்தை மாதிரி விழிக்கிறான்—வாடா பயலே!

—பையன் பயந்துகொண்டே வந்தான்.

—ஏறு ஏணிமேலே.

பையன் மெல்ல முதற்படி ஏறினான். ஒநாய் பெரிய ஊளையிட்டது. பையன் பயந்தான். " சும்மா

இருக்க மாட்டாயா ஓமோ....!" என்று கிழவன் சத்தம் போட்டான். ஓமோ அடங்கியது. "ஏறுடா பயலே....ஏ லே ல," என்று பையனை ஏற்றிவிட்டான் கிழவன்.

—மேலேறு!

பையன் குழந்தையைப் பத்திரமாகக் கட்டிப் பிடித்துக்கொண்டு மூன்று படியேறி உள்ளே சென்றான். வண்டிக்குள் விளக்கில்லை; அடுப்பில் கணப்பிருந்தது. அதன் வெளிச்சமே வெளியே தெரிந்தது. அந்தக் கணப்பின் வெளிச்சத்தில் உள்ளேயிருந்த சாமான்கள் தெரிந்தன. அடுப்பில் ஏதோ உணவு வெந்தது. அடுப்பிற்கருகே ஒரு நீளப்பெட்டி யிருந்தது. ஏதேதோ ரசாயனச் சாமான்களும், பாத்திரங்களும் அறையில் இருந்தன. சுவரில் ஏதோ பெரிய எழுத்துக்கள் தெரிந்தன. அவற்றைப் படிப்போம்:

## உர்ஸூஸ்—வேதாந்தி

ஆம். நமதேழைப் பையனுக்கு புகல் கொடுத்தவன் உர்ஸூஸ் தான்! அதற்கே பகவான் அவன் வண்டியை இன்று வேமௌத்திற்கு கொண்டு சேர்த்தார் போலும்!

"உன் மூட்டையை இறக்கு" என்றான் உர்ஸூஸ்.

பையன் குழந்தையைக் கவனமாகப் பெட்டிமேல் வைத்தான்.

உன் கந்தல் மூட்டையென்ன அவ்வளவு உயர்த்தியோ—கவனமாகப் பெட்டிமேல் வைக்கிறாயே—

ஆ — — குழந்தையா! காலிப் பயலே—தெருவில்—இந்த வேளையில்—வந்தாயே! அனாதைப் பயலே—நீ யார்? சொல்—வேண்டாம் சொல்லாதே—முதலில் உனக்கு வேண்டியதை செய்கிறேன். போ அடுப்பண்டை— உனக்குக் குளிரதிகம் அல்லவா! பனியில் நனைந்து வந்திருக்கிறாயல்லவா! போ நெருப்பண்டை. குளிர் காய்! இதென்ன கந்தை! இப்படி வீடுகளுக்குப் போனால் கல்லெடுத்தடிப்பார்கள். இந்தக் கந்தையைக் கழற்றி எறி! களவாணிப் பய்லே. போட்டுக்கொள் இந்தப் பெரிய சட்டையை.

பையன் கந்தலைப் பறித்தெறிந்து, அங்கே மாட்டியிருந்த தனது பெரிய ஷர்ட்டையும், ஜாக் கெட்டையும் பையனுக்கு மாட்டினான் கிழவன்.

—"உடுப்பு ஜோரா யிருக்கிறது. இனி கணப்புக் காய்," என்று பையன் கை கால்களை நன்றாகச் சூடு பிறக்க கம்பளியால் தேய்த்தான். பையன் களைப்பு நீங்கினான்.

—"உனக்குப் பசிக்கிறதல்லவா!—சாப்பிடு இதை," என்று உருளைக்கிழங்கு கறியும், ரொட்டியும் ஒரு தட்டில் வைத்துக் கரண்டியுடன் தந்தான். "மிச்சம் வைக்காமல் சாப்பிட வேணும்; தெரியு மாடா பயலே," என்று அதட்டினான்.

பையன் கரகரவென்று ரொட்டியை ஆவலாகக் கடித்து விரைவாகச் சாப்பிட்டான்.

—"அட குண்டோதரா! இப்படியா அள்ளி அடைப்பது? நாகரிகம் தெரியவேண்டாமா? பிரபுக் கள் சாப்பிடுவதை எந்த ஜன்மத்திலாவது பார்த்திருக்கி

ருயா? நான் பார்த்திருக்கிறேன், அவர்கள் சாப்பிடு வதே தெரியாது. உதடசங்காமல் உள்ளே தள்ளுவர்; அதல்லவா நாகரிகம். சரி, மெதுவாகச் சாப்பிடு"—

கணப்பும், உணவும் பையனுக்கு சுவர்க்கானந் தம் அளித்தன.

## 24. தனிப் பேச்சு

உர்ஸுலஸ் தனது தனிப் பேச்சைத் தொடங்கி ஞன் :—

"இன்றைக்கு ஒன்றும் விற்கவில்லை. இந்த ஊரில் கண்டபேரெல்லாம் வைத்தியம் செய்கிறார்கள்! பாவம் கிழவன்! உனக்குப் பிழைப்பில்லை; நாலு பேருக்குக் காய்ச்சல், கழிச்சல் வந்தால்தானே வைத்தியனுக்குப் பிழைப்பு நடக்கும்! இந்த இழவு வேமௌத்தில் பேதி, காலரா, தலைவலி ஒரு சனிய னும் இல்லை. ஆகாசத்திற்குத்தான் கழிச்சல் எடுத் திருக்கிறது! சும்மா பனி, பனி, பனிக்கட்டி, மழை, புயல்! அப்பப்ப! என் தலைக்கு மேல் ஆகாசம் இடிந்து விழுகிறது! பேய்க்காற் றடிக்கிறது! காதே கேள்! கண்ணே பார்—இக் கொடுமையை! சாகப் போகிற கிழவன்; பழைய அடுப்பை வைத்துப் பொங்கித் தின்கிறேன். உலகிலுள்ள வறுமை இதோ என் வீட்டைத் தேடி வந்திருக்கிறது. இப்போது தான் சாப்பிடப் போனேன்! என் சாப்பாட்டிற்கு இதோ ஒரு குட்டியையும் சுமந்துகொண்டு இந்தப் பயல் வந்து புகுந்தான். பாரேன், பகாசுரன் மாதிரி ஒரு தட்டு உருளைக்கிழங்கையும் அள்ளி யடைத்து விட்டான்! தொலையட்டும்! நான் இந்தப் பாலை

யாவது குடித்துவைக்கிறேன். கையில் பைசாக் கிடையாது! மேலே புயல், கீழே பனி, சிறிய வண்டி, இருப்பது கொஞ்சம் உருளைக்கிழங்கு. அதற்கும் வந்தான் இந்தப் பயல்! காலிப் பயல், பஞ்சைப் பயல். அட பயலே, உனக்குச் சட்டம் கிட்டம் ஒன்றும் தெரியாதோ! முடிச்சவிழ்க்கிப் பயலே, இரவில் குட்டியுடன் திரிகிருயா? அது சட்ட விரோதமடா பயலே! வீடு வாசல் இருப்பவர்கள், சௌக்கியமாகக் கணப்பண்டை உறங்குவார்கள். உன்னைப்போன்ற ஊர்க்காலிகள் தெருவில் இந்நேரம் வந்தால் என்ன நடக்கும் தெரியுமா? போலீஸ்காரன் பிடித்துத் திருட்டுக் குற்றம் சாட்டிச் செம்மையாகச் சவுக்கடி கொடுப்பான். தப்பினுய் பயலே! நான் எங்கும் திரியவில்லை. இந்த வண்டி என் பங்களா! அதில் நான் வசிக்கிறேன். நீ வந்து சேர்ந்தாய். 'இரவில் என் வீட்டில் வந்து இந்தப் பயல் பிச்சை கேட்டான்' என்று போலீஸ்காரனிடம் சொன்னுல் போதும்--ஒரே கல்தா—போக வேண்டும் ஜெயிலுக்கு! உனது சுந்தலும் நடத்தையும் ராஜாவின் சட்டத்திற்கு ஒத்துக்கொள்ளாதடா பயலே—ஆனுல் பிழைத்துப் போ. பாவம் அலைந்து திரிந்து வந்திருக்கிருய்! பயலே உன்னுல் என் வீடெல்லாம் நனைந்துபோனது! இதை உலர்த்த எவ்வளவு கரி வேண்டும் தெரியுமா? கரி மூட்டை 11 அணுவாக்கும்! வாங்கித் தொலைக்கிறேன்.

" சரி, எனக்குக் குடும்பம் வலுத்தது. இந்த வண்டியில் இனி மூன்று பேர் இருக்கவேண்டும்—தாய்ச்சி வேலை வேறு எனக்கு வந்தது! தரித்திரதேவி

இரண்டு குழந்தைகளைப் பெற்று என் காலடியில் தள்ளிவிட்டாள்!

"முப்பது ஆண்டுகளாக இப்படித் தினந்தினம் பஞ்சைகள் வந்து என் வருவாயை வாயில் போட்டுக் கொண்டார்கள். இல்லாவிட்டால், இன்னும் விசால மான வண்டி கட்டியிருப்பேன். அசல் சர்ஜன் மாதிரி வைத்திய சாமான்கள் வாங்கியிருப்பேன். ஹென்றி VIII-ன் டாக்டராகிய லினகர் (Linacre) மாதிரி பெரிய வைத்தியனாயிருப்பேன். மனிதருக்கு மட்டுமல்ல; மிருகங்களுக்கும் வைத்தியம் பார்ப் பேன். நான் கணக்குப் புலியல்லவா! நான் மட்டும் நல்ல நிலைமையிலிருந்தால், மஹாராஜாவின் கணக்குப் புலவனான ஜான் கெப்ளர் (John Kepler) போலிருப் பேன். லண்டன் புத்தகசாலையில் உட்கார்ந்து புதிய புதிய ஆராய்ச்சிகள் செய்வேன். துரதிர்ஷ்டம், என்னை இந்த வண்டி மூலையில் அடைத்துவைத்திருக் கிறது. என் அறிவெல்லாம் அடுப்பங்கரையில் உருளைக் கிழங்கு வேகவைக்கிறது! பசி, சாப்பிடலாம் என்று கிழங்கு தயாரித்தேன்; அத்தனையும் இந்தத் திருட்டுப் பயல் விழுங்கிவிட்டான். தொலைந்து போகட்டும். பசியால் உடல் ஒழியட்டும்!

"ஆ—உலகமே துக்கக்காடு! வாழ்க்கை பிடிக்க வில்லை; இருப்பது துன்பம்; இறப்பதே இன்பம்! உலகம் திராக்ஷை தருகிறது; கோதுமை தருகிறது. அதில் குயில் பாடுகிறது. சிற்சில நாட்கள் ஏதோ இரண்டொரு கதிர் காண்கிறோம். அதையே இன்பம் இன்பம்' என்கிறோம். மற்றப்படி உலகம்

இருள், வறுமை, மடமை, துன்பம், கொடுமை; கொடுமை! வாழ்வென்னும் ஆடை சாத்தான் நெய்தது; அதில் சாமி கொஞ்சம் கறை போடுகிறார். அவ்வளவுதான். சரி, உன்பாடு தீர்ந்தது. உன் பசி அடங்கியது. இனி என் பசிக்கு இந்தப் பாலைச் சாப்பிடுகிறேன்!—"

பாலை எடுக்கப்போனான் உர்ஸுஸ். அவன் பார்வை பெட்டிமேல் உறங்கும் குழந்தையிடம் சென்றது.

உடனே தான் கொஞ்சம் வெந்நீர் குடித்தான். "குடிடா பயலே வெந்நீர்" என்று பையனுக்கும் கொடுத்தான். பாலை ஒரு பால்போட்டும் சீசாவில் அடைத்தான். குழந்தையை மெல்ல எடுத்து மடிமேல் வைத்துப் பாலைப் புகட்டினான். குழந்தை பால் குடித்துத் தீர்த்தது. மீதிப் பாலையும் அதற்கே வைத்து விட்டான். குழந்தையை, கரடித்தோலைப் போர்த்துச் சுகமாகப் படுக்கவைத்தான்; பையன் சாப்பிட்ட தட்டைக் கழுவித் துடைத்து வைத்தான். பிறகு பையனுடன் பேசினான்.

## 25. குழந்தை ஏது?

"—அட பயலே உன் வயிறு நிறைந்தது; இனி வாயைத்திற; என் கேள்விகளுக்கெல்லாம் சரியான பதில் சொல்லவேண்டும். ஜாக்கிரதை! உன் ஊர் எது?

—தெரியாது.

—அதெப்படி—தெரியாது? உம்.

—என்னை அன்று சாயங்காலம் போர்ட்லாந்துக் கடலோரம் விட்டுச் சென்றார்கள்.

—நீ போக்கிரிப் பயல்!—அதனாலேதான் அப்பா அம்மா அப்படி உன்னை விட்டுச் சென்றார் கள்.

—எனக்கு அப்பா அம்மா இல்லை.

—அட புளுகுணிப் பயலே, அப்பா அம்மா இல்லாதே நீ வந்தாயோ? இதோ உன் தங்கச்சி யிருக்கிறாளேடா?

—அவள் என் தங்கச்சியல்லள்.

—பின்னே இதார்?

—வழியில் கண்டெடுத்த குழந்தை.

—எப்படி? எங்கே? பொய் சொன்னால் விரட்டி யடிப்பேன்.

—செல் ஹில் பாறையில், பனியினால் விறைத்து இறந்துபோன ஒரு தாயார் மார்பில், இக் குழந்தை இருந்தது. எடுத்து வந்தேன்.

—எப்போது? எவ்வளவு தூரம் இருக்கும்?

—ஒரு மணிக்கு—2½ மைல் தூரத்தில்.

—ஆ, சாவு? எவ்வளவு இன்பம்! இன்னும் கருமம் அனுபவிக்க இந்தக் குழந்தையைக் கொண்டு வந்தாய்! சரி, இப்படிப் படு பயலே."

பெட்டிமேல் சட்டையை விரித்து புத்தகத்தைத் தலைக்கு வைத்துச் சிறு குழந்தையின் பக்கம் அந்தப் பையனைப் படுக்கவைத்தான் உர்ஸஸ். இருவருக் கும் கரடித்தோலைப் போர்த்தினான்.

உடனே தனது பழைய லாந்தரை ஏற்றினான்; கதவைத் திறந்தான். "இதோ, நான் வெளியே சென்று வருவேன். பயப்படாமல் படுத்துறங்கு," என்று சொன்னான். கொஞ்சதூரம் சென்றதும் "பையா! குழந்தை அழுதால் கொஞ்சம் பால் மிச்சமிருக்கிறது; கொடு!" என்றான். இச்சமயம் ஓமோ ஊளையிட்டது. "வா நண்பா!" என்று அதை அவிழ்த்து அழைத்துச் சென்றான்.

குழந்தைகள் வண்டியில் ஆழ்ந்து உறங்கின.

பையன் குழந்தையை மார்போடணைத்துக் கொண்டு உறங்கினான். ஆ, இரண்டு தூய தேவதைகள் போல இந்தப் பெண் குழந்தையும் பையனும் உறங்குகின்றனர். இவர்கள் உள்ளம் பளிங்குபோன்று மாசற்றது. உலகில் ஆண்-பெண் அன்பு இப்படித் தூய்மையாவ தெப்போது? மாசற்ற அன்பு வாழ்க!

## 26. நான் அப்பன்! நீ மாமன்!

துன்ப இரவு கழிந்தது. புயல் விட்டது; மூடு பனியை ஊடுருவிக் காலைச் செம்முகம் ஒளிர்ந்தது. விளக்குகள் ஒன்றின்பின் ஒன்று அணைவதுபோல, நட்சத்திரங்கள் காலையொளியிற் கலந்தன. இருளை அருணன் விழுங்கிப் பொன்னகை புரிந்தான். எதிரேயுள்ள கடல் அகண்ட சங்கீர்த்தனம் பாடி மெல்ல நடமாடியது.

வண்டிக்குள் கணகணவென்றிருந்தது; இரண்டு மாசற்ற மொட்டுகள்போலக் குழந்தைகள் கண்ணுறங்கின. உதாத்தம் அனுதாத்தம் போன்று இருவர் மூச்சும் எழுந்தது.

பையன் விழித்துக்கொண்டான். சுற்றிப் பார்த்தான்; இன்ன இடத்தில் இருக்கிறனென்று அவன் அறியான். வண்டியில் "உர்ஸுலஸ்-வேதாந்தி" என்றெழுதி யிருந்தது; அதையே பார்த்தான்; விளங்கவில்லை. அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஏதோ நினைப்பில் ஆழ்ந்தான்.

திடீரென்று வண்டிக் கதவு திறந்தது; உர்ஸுலஸ் உள்ளே நுழைந்தான். எங்கே போனன்? அவன் முணுமுணுப்பதைக் கேளுங்கள் தெரியும். "டயாஜனிஸ் (Diogenes) லாந்தருடன் ஒரு மனிதனைத் தேடினன்; நான் ஒரு பெண்ணைத் தேடினேன். டயாஜனிஸ் கேலியைத்தான் கண்டான்; நான் ஒரு பிணத்தைக் கண்டேன். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடிக்க எவ்வளவு சிரமப்பட்டாரோ, அவ்வளவு சிரமப்பட்டேன் இப் பெண்ணைக் கண்டுபிடிக்க. எனது சகோதரன் ஓமோ இல்லாவிட்டால் இன்னும் தேடிக்கொண்டுதா னிருப்பேன். ஆ, பெண் விறைத்துப்போனள். கொஞ்சம் உயிர் இருந்தாலும் சிகிச்சை செய்யலாம். கை காலைத் தொட்டுப் பார்த்தேன். சீவனில்லை. குழந்தையை விட்டு இப்படிச் சாவாளோ தாய்! இந்தச் சாவிற்கு யார் பொறுப்பாளி? நானு? இல்லை. குழந்தாய்! நீயா? இல்லை. இரவு தாயைக் கொன்றது. விதி, விதி! ஒழியட்டும்!

"அதுவும் சரிதான். இந்தத் துன்ப வாழ்வை விட்டு ஒரு ஜீவன் ஒழிந்தது. இன்றேல், இந்த வண்டியில் இன்னெருரு பெண்ணையும் வைத்து நான் குடித்தனம் செய்ய நேரிடும். சாவதே நல்லது!"

இவ்வாறு உர்ஸுஸ் பேசும்போது, ஓமோ குழந்தையின் பிஞ்சுக் கையை மெல்ல நக்கிக் கொடுத்தது.

உர்ஸுஸ் நீண்ட யோஜனையிலிருந்து ஓமோவைத் தட்டிக் கொடுத்து, "சரி, நல்லது. நான் அப்பன்! நீ மாமன் இந்தக் குழந்தைகளை நாம் வளர்ப்போம்," என்றான். பிறகு சாமான்களை ஒழுங்காக எடுத்து வைத்தான். பையன் இந்த விநோதமான கிழவனையே குறிப்பாகப் பார்த்தான்.

"—ஏண்டா பயலே சிரிக்கிறாய்?

—சிரிக்கவில்லையே.

—சீ! போக்கிரிப் பயலே, இதோ சிரிக்கிறாயே.

—இல்லை. அப்படித்தான் முகம் எப்போதும் இருக்கும்.

—எது முதல்?

—குழந்தை முதல் அப்படித்தான்.

—ஆ, இதென்ன பயங்கரமான பூச்சாண்டி மூஞ்சியடா உனக்கு, ஐயையோ!

உர்ஸுஸ் பையனையே குறிப்பாகப் பார்த்தான்.

—உன் பெயரென்ன?

—குவீன்ப்ளேன். (Gwynplaine)"

பிறகு, ஒரு வைத்திய புத்தகத்தை விரித்து "புக்கா பிஸ்ஸா யுஸ்க் அட் ஓரஸ்...." என்று உர்ஸுஸ் லத்தீனில் நீளப்படித்தான். "ஆ, இது அந்தப் பயல்கள் வேலை" என்று பெருமூச்சு விட்டான்!

இச்சமயம், "வியா வியா!" என்று பூபாளம் பாடிக்கொண்டு குழந்தை எழுந்தது. உர்ஸுலஸ் குழந்தையை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு பாலைப் புகட்டினான். குழந்தை கண் பூவிழுந்திருந்தது. அதில் மணியில்லை; "சரி சரி, பெட்டை, அதிலும் பொட்டை!" என்றான் உர்ஸுலஸ்.

உர்ஸுலஸ் பெண் குழந்தைக்கு தயா (Dia) என்று பேர் வைத்தான். குவின்ப்ளேன்-தயா இருவரையும் தனது செல்வ மக்களைப் போலவே அவன் வளர்த்தான். இருவரும் வந்த முகூர்த்தம் அவன் எல்லா வகையிலும் வளம் பெற்றான். குவின்ப்ளேனும், தயாவும் உர்ஸுலஸ் பாதுகாப்பில் வளரட்டும். அவர்கள் சரியான வளர்ச்சி பெற்று நமது கண்முன் வருவார்கள். குவின்ப்ளேன், மாந்தர் உள்ளத்தை எப்படி வசீகரித்தான் என்பதை நாம் பின்னால் அறிவோம்.

அதன் முன், ஆங்கில அரசியலை நடத்தும் மஹாப்பிரபுக்கள் வாழ்வைச் சிறிது காண்போம்.

## 27. க்ளான் சார்லி பிரபு (Lord Clan Charlie)

1649-ம் ஆண்டு லண்டன் ஒயிட்ஹாலில் சார்லெஸ் I தலைவெட்டப் பட்டான்; முடியரசை வாள் கொண்டு தகர்த்த ஆலிவர் கிராம்வெல், குடியரசை நிலைநாட்டினான். 1653 முதல் 1658 வரையில், கிராம்வெலின் குடியரசு செழித்தோங்கியது. கிராம்வெல் அசகாய சூரன், விடுதலை வெறிகொண்டவன், அஞ்சா நெஞ்சன், கருணையும் கொடுமையும் மிக்கவன். அவன்

பொதுஜன உதவியைக்கொண்டே அரசியற் போரை வென்று குடியரசுக் கொடியை நாட்டினான். சுயேச் சாதிகாரத்தையும் முடியாட்சியையும் விரும்பும் பிரபுக்கள் அவனை வெறுத்தனர். அவன் பக்கம் நின்றுதவிய பிரபுக்கள் மிகச் சிலரே யாவர். அவருள் முதன்மை பெற்றவர் க்ளான் சார்லி பிரபு (Clan Charlie) ஆவர்.

கிளான் சார்லி அஞ்சா நெஞ்சு படைத்தவர். பிடிவாதமான குடியரசுவாதி. ஏழைகளிடம் இளகிட மனமுடையவர். சுயேச்சாதிகாரத்தின் வன்மையான பகைவர். 1658-ல் துரோகிகள் சூழ்ச்சியால், கிராம் வெலின் ஆவியும் ஆட்சியும் முடிந்தன. சார்லெஸ் II மீண்டும் முடியரசை நிலைநாட்டினான். முடியரசுவாதிகள், தமது அரசனுக்குப் பகட்டான வரவேற்பளித்தனர், வெற்றி ஊர்வலங்கள் நடத்தினர். அரச வாழ்த்து முரசங்கள் இடிபோ லதிர்ந்தன. நேற் றிருந்த குடியரசு, இன்று கோனரசானது. பிரபுக் களுக்கெல்லாம் கொண்டாட்டமானது. அவர்க ளெல்லோரும் வரிசையாகச் சென்று, அரியணை அமர்ந்த மன்னனை வணங்கி, இராஜவிசுவாசப் பிரமாணம் செய்தனர்.



இந்த அமளியில் கலந்துகொள்ளாமல் விலகி யிருந்த சுதந்திர வீரர்களில் க்ளான் சார்லி ஒருவர். முடியரசு விழாவின் தடபுடல்களைக் காணக்கூடச் சகியாமல், அவர் ஜினிவா ஏரிக்கரையில் ஒரு வீடு கட்டி, எளிய வாழ்வு வாழ்ந்தார். அவரைப் பிரபுக்

செய்தார். பிழைக்கத் தெரிந்த பிரபுக்கள் அவரைச் 'சுத்த வரட்டுப் பைத்தியம்' என்றனர்.

## 28. பிரபுத்வம் தலைதூக்கியது

1660-ம் ஆண்டு இங்கிலாந்தின் புகழ் உயர்ந்தது. கிராம்வெல் ஆட்சியும் புரட்சியும் ஓய்ந்தன. சார்லெஸ் II-ன் பெயர் ஓங்கியது. உட்போர் அடங்கியது. அமைதி நிலவியது. பிரான்ஸ், ஜெர்மனி, ஸ்பெயின், போர்ச்சுகல் முதலிய நாடுகளிலெல்லாம் ஆங்கிலேயருக்குச் செல்வாக்கு அதிகரித்தது. ஜன்ம வைரிகளான இங்கிலாந்தும், பிரான்ஸூம் கிராம்வெல் காலத்திலேயே சமாதானம் செய்துகொண்டன. அப்போது பிரெஞ்சு மந்திரியாயிருந்த மாஜாரன் (Mazarin) கிராம்வெலுக்கு நண்பனானதால், இந்தச் சமாதானம் எளிதானது. இங்கிலாந்திற்குக் காலனிகள் பெருகியது இக்காலத்திலேதான். ஆங்கில வியாபாரக் கப்பல்கள் இக் காலம் ஆசிய, ஆபிரிக்க நாடுகளுக்குச் சென்றன. அத்லாண்டிக் கடல், பஸிபிக் கடல், நடுக் கடல்—இவை ஆங்கிலக் கப்பல்களுக்கு ராஜமார்க்கங்களாயின.

"பண்டை ரோமன் குடியரசை எப்படி உலகம் மதித்ததோ, அதேமாதிரி நான் ஆங்கிலக் குடியரசை உலகம் மதிக்கச் செய்வேன்!" என்று கிராம்வெல் சபதம் கூறினான். அது ஒருவாறு நிறைவேறியது. கிராம்வெல் காலத்தில் குடிகளுக்குத் தாராளமான பேச்சுச் சுதந்திரம் இருந்தது. யாரும் தங்கள் குறைகளை நேராகக் குடியரசிற்குத் தெரிவித்து நிவர்த்தி பெறலாம். பிரபுக்களின் அதிகாரச் செருக்கும்,

இடம்பக் கொடுமையும், பகற் கொள்ளையும் அடங்கியிருந்தன. குடியரசுபோய் சார்லெஸ் II மன்னன் ஆட்சி வந்ததும், எல்லாம் பழைய நிலைக்கே திரும்பின. நாட்டு வளமை பெருகியது. இங்கிலாந்திற்குப் புகழ் பெருகியது, எல்லாம் சரி. ஆனால், பிரபுத்துவம் படமெடுத்தாடியது. முகஸ்துதி பேசும் வஞ்சக் காரியவாதிகளும், இடம்பாசாரிகளும், முகமினுக்கி வலைபோடும் கட்டழகிகளும், அரசியல் சூதாட்டத்தில் பகடையுருட்டி, ஏழைகளை நசுக்கப் புகுந்தனர். அரசன் தன்னை, ஜனங்களுக்கல்ல, ஆண்டவனுக்கே பிரதிநிதியாக நினைத்துக்கொண்டான். அரசனைத் தட்டிப் பேசினால் ஆபத்துதான். "சுதந்திரம்" என்றால் தூக்குமேடை! குடியரசைப் போற்றிய வீரர், செல்வர் அனைவரும் தூக்குமேடையில் தொங்கினர். நாடெங்கும் ஒற்றர். "குடியரசு" என்று மூச்சுவிட்டால் போச்சு, உடனே கொடிய ராஜ துரோகக் குற்றம்சாட்டி, ஆளைச் சந்தியில் இழுத்துத் தூக்கிடுவர். அவன் கழுத்தில் சுருக்கிட்டுத் தொங்குவதைப் பார்க்க ஏராளமான ஜனங்கள் கூடுவர்; அரச வாழ்த்துப் பாடுவர்.

சார்லெஸ் கொஞ்சம் இதம்பதமாகத்தான் ஆட்களைத் தூக்குப்போட்டான்; இன்னொரு கிராம்வெல் முளைப்பானோ என்று அவன் நெஞ்சில் அச்சமிருந்தது.

ஆனால், அவன் மகன் ஜேம்ஸ் II பழைய ஏட்டைத் திருப்பிவிட்டான்; சுதந்திரத்தின் பேரையே பொசுக்கி எறிந்து சுயேச்சாதிகாரத்தை வளர்க்கத்

தொடங்கினான்; ஒற்றருக்கும், இராணுவத்திற்கும், பிரபுக்களுக்கும் அதிகச் சலுகை காட்டினான்; நீதி இலாகாவை ஜேப்ரே (Jeffrey) என்பவரிடம் தந்தான்; வாளின் அதிகாரத்தை (Kirke) கிர்க் என்னும் கொடியனிடம் அளித்தான். "மஹாராஜா, தாங்களே தெய்வம்! தாங்களே தேசம்! மஹாராஜா சித்தமே சட்டம்" என்று தூபம்போடும் பிரபுக்களுக்கெல்லாம் ஏராளமான மாளிகைச் செல்வமும், செல்வாக்கும் அளித்தான்.

"அரசனை எதிர்ப்பது பாவம்; குடியரசாவது குட்டிச்சுவராவது! எல்லாம் சில சுயநலமிகள் செய்யும் அக்கிரமம்! அரசனுக்கு அடங்கி ஒடுங்கி நடப்பதே மக்கள் கடமை" என்று நாடெங்கும் உபதேசம் நடந்தது. குடியரசு கேலிக்கிடமானது.

இந்த அகம்பாவக் கூத்துகளையெல்லாம் க்ளான் சார்லி எப்படிச் சகிப்பான்? அவற்றின் முகத்திலேயே விழிக்காமல் அவன் அஞ்ஞாதவாசம் செய்தான்.

## 29. பிரபு டீர்மோர்

ஜேம்ஸ் II ஒரு தடபுடல் ராஜா. "மஹாராஜா தான் எங்கள் தெய்வம்; என்ன கருணை, என்ன ஈகை, என்ன வீரம், என்ன ஞானம், என்ன காம்பீர்யம்! இந்த அற்புதமான செங்கோன்மையை விட்டுக் குடியரசாம், ஜனநாயகமாம், வெறும் ஊர்க்காலிகளின் பேத்தல்! மஹாராஜா நீடூழி வாழ்க! மஹாராஜா அரியணை மலைபோல் நிலைக!" என்று துதித்துக் குல்லாப் போடும் குலாமிகளை ஜேம்ஸ் II தன் பக்கத்

தில் வைத்துக்கொண்டான். குலாமிகளுக்கெல்லாம், அவரவர் சரணுகதிக்குத் தக்கபடி பிரபுப் பட்டங் களும், சுகபோக வாழ்வும் அளித்தான்.

இவ்வாறு சுக்கிரதசை அடித்த இளம் பிரபுக் களில் முதன்மையானவர் டிர்ரிமோர். இவர் யார் என்று முதலில் தெரிந்துகொள்ளுங்கள்.

கிராம்வெல் காலத்தில் அதிகச் செல்வாக்குப் பெற்ற க்ளான் சார்லியின் உள்ளத்தை ஒரு கட்டழகி வசீகரித்தாள். கட்டழகி, சார்லியின் வைப்பாட்டி யானுள். இருவர் காதலிலும் அரும்பிய செல்வ மலரே டிர்ரிமோர்! முடியரசு பிடிக்காமல் சார்லி ஜினிவா வுக்குப் போனுனல்லவா? அச் சமயம்தான் டிர்ரி மோர் பிறந்தான். ஆகையால் தந்தை மகனைப் பார்க்க கூட முடியாமற் போயிற்று. தாயாகிய கட்டழகி என்ன செய்தாள் தெரியுமா? "அந்த ஜினிவா ஆந்தை (சார்லி) அங்கேயே ஒழியட்டும். எனது இளமையை வீணுக்கமாட்டேன்" என்று, இன்னொரு காதலனை வலைபோட்டுப் பிடித்துக்கொண்டாள். யார் அக் காவலன்? சாக்ஷாத் சார்லெஸ் II தான்! அரச னுக்கு எத்தனையோ வைப்பாட்டிகள்; ஆனுலும், தனக்கு விரோதியான க்ளான் சார்லியின் காதலியே தனது தாசியாக அமைந்ததில் அவன் தனிப்பெருமை கொண்டான். அந்தக் குடியரசு பித்தனை வஞ்சம் தீர்த்ததாகக் கருதினுன்.

தாயார் அரசன் காதலியானுல் மகனுக்கு வேட்டைதானே! அதிலும் டிர்ரிமோர் பரம ராஜ பக்தன், குலாம் போடுவதில் பக்காப் பேர்வழி யென்

ருல் கேட்பானேன்? பெண் மாயம் அரசியல் சக்க ரத்தை எப்படி உருட்டுகிறது பாருங்கள்! தனது காமவெறிக்குப் பெண்மையைப் பலிகொடுத்த பேதையருக் கெல்லாம் பொதுஜனங்கள் தரும் பணத்தை அள்ளிவிட்டனர் சுயேச்சாதிகாரப் புலிகள்! டிர்ரிமோர், செல்லப் பிள்ளையாக அரசன் சலுகையில் வளர்ந்தான். அரசனைச் சுற்றி எப்போதும் 70 பேர் உருவிய வாளுடன் எமபடர்கள் போல நிற்பர். அவர்களெல்லாம் அரசன் சலுகையைப் பெற்று அவ னுக்காக எதுவும் செய்யத் துணிவர். அவர்களில் டிர்ரிமோர் ஒருவனுகி அரசன் உடலைக் காத்தான். அரசனுக்கு உணவு பார்த்துப் பரிமாறுவோர் 40 பேர். அவர்களுக்கு ராஜபோகந்தான்! அவர்களில் முதன்மை பெற்றுன் டிர்ரிமோர்.

ஜேம்ஸ் II காலத்தில் பிரபு லீலைகளும் அரசக் கூத்துகளும் ஆயிரம் மடங்கு அதிகரித்தன. தனது இச்சைக்கு அடிமையான இளம் பிரபுக்களிடம் ஜேம் ஸிற்கு வெகு பிரியம். அரசனே தெய்வம் என்று வணங்கவேண்டும்; அவனையே சதா புகழ்ந்து பேச வேண்டும் அவன் மனமறிந்து குறிப்பறிந்து எதை யும் செய்யவேண்டும். இன்னுரை வெட்டு, குத்து, கொள்ளையடி என்றால் நிர்த்தாக்ஷிண்யமாகச் செய்து முடிக்கவேண்டும். அரசன் சுகபோக லீலைகளுக்கும் சூழ்ச்சிகளுக்கும் உடனிருந்து உதவவேண்டும். ஆள் பார்வைக்கும், பேச்சிற்கும் இனிமையாயிருக்க வேண்டும். அப்படிப்பட்ட வாலிபக் கனவான்களை ஜேம்ஸ் எப்போதும் தன்னுடன் இருக்கச் செய்தான்.

டிர்ரிமோர் ஜோர் பேர்வழி; ஆனால் மயக்கும் வித்தைகளில் தாயாரிடம் சிக்ஷை பெற்றவன். முகமன் கூறிக் காரியம் சாதிப்பதில் முதல் தாம்பூலம் பெற்றவன். அவன் ஜேம்ஸின் செல்லப்பிள்ளைகளில் முதன்மை பெற்றது வியப்பில்லை.

ஜேம்ஸ் II தன்னைப் பெரிய வீரனாகவும் சேனாதிபனாகவும் மதித்துக்கொள்வான். மஹாராஜா குதிரைமேல் ஏறி ஒரு மைல் போய் வந்தால் போதும். "இந்தப் பூலோகத்திலே இவ்வளவு வேகமான குதிரை வீரனே கிடையாது. மஹாராஜா வீரனா? வீராதி-வீராதி வீரன்!" என்பர் குலாம் பிரபுக்கள். மஹாராஜா அகிற் புகைபோலச் சுருள்விரிந்த டோப்பாவை அணிந்து, கம்பீரமாக வருவார். "கோடி சூர்யப் பிரகாசம் தோற்றுப்போகும்" என்று அவர் அழகை மெச்சுவர் குலாமிகள். இந்தக் கூட்டத்தில் டிர்ரிமோர் சகடயோகப் பேர்வழியானான். மஹாராஜாவுக்குப் பள்ளியறை ஜோடிப்பு ஒரு பெரிய அமர்க்களம். அதற்கு 12 கனவான்கள் உண்டு. அவர்கள் மஹாராஜா பக்கத்திலேயே படுக்கவேண்டும். பள்ளியறை ரகசியங்களிலெல்லாம் அரசன் விருப்பத்தை நிறைவேற்றவேண்டும். இந்தப் பள்ளியறைக் கனவான்களுக்குச் சம்பளமும் இனமும் ஏராளம். மஹாராஜாவின் இரவை இந்திரபோகமாக்க வேண்டியது அவர் கடமை. இப் படுக்கையறைக் கனவான்களில் டிர்ரிமோர் தலைமை பெற்றான். டிர்ரி, ஜேம்ஸின் பக்கத்திலேயே படுப்பான். இரவில் இந்த உத்யோகம். டிர்ரிமோர் பகலில், மஹாராஜாவின் சொந்தக் குதிரைகளை மேற்பார்ப்பான். மஹாராஜா

குதிரைகளுக்குச் சரியாகக் காணட் வைக்கின்றனு என்று கவனிப்பான்.

அரசர் குதிரைகளைத் தேய்த்துச் சுத்தம் செய்வோர் ஐவர். ஜேணம் பூட்டி அலங்காரம் செய்வோர் ஐவர். அலங்கார வண்டியில் பூட்டி ஓட்டுவோர் ஐவர். வண்டிச் சேவகர் ஐவர். பின்னால் ஓடோடி வந்து சேவகம் செய்வோர் பனிரண்டு ஊழியர். மஹாராஜாவிற்கு நாற்காலி தூக்கி வருவோர் நால்வர்; உடன்செல்லும் குதிரை வீரரும், காலாட்களும் பலர். இவரை மேற்பார்ப்பது டிர்ரிமோர் பிரபுதான். இச் சேவகரெல்லாரும் டிர்ரியை மண்டி போட்டுச் சலாம் பண்ணவேண்டும். ஜேம்ஸ் II-ன் வாசற்காப்போன் துப்பா (Duppa) என்பவன். சொந்தக் கணக்குப் பிள்ளை பேகர் (Baker) என்பவன். பார்லிமெண்டுக் கணக்கன் ப்ரௌன் (Brown) என்பவன். இவர்களெல்லாம் டிர்ரி பிரபுவுக்கு வணக்கம் செலுத்துபவர். அரசர் விருந்துகளிலும், வரவேற்புகளிலும் முன்னணியில் இருப்பவன் டிர்ரியே. சர்ச்சில் மன்னருக்கும் பிரபுக்களுக்கும் தனியாக பிரார்த்தனைகள் நடக்கும். அச்சமயம் மன்னருக்குப் பின்னால் டிர்ரி செல்வான். பாலஸ்தீனுக்குச் சென்று வந்த யாத்திரீகருக்கு மன்னர் தங்க நாணயங்களை அளிப்பார். அப்போது அரசர் பக்கத்தில் இருந்து பரிசில் பெறுவோரைக் குறிப்பவன் டிர்ரியே. வியாழக் கிழமைகளில் பனிரண்டு ஏழைகளுக்கு அரசன் பணம் கொடுப்பான். தன் வயது எவ்வளவோ அவ்வளவு காசும், தான் ஆளத் தொடங்கி எத்தனை ஆண்டுகளோ அத்தனை ஷில்லிங்கும் தருவான்.

இந்தத் தருமத்திற்கு தக்க ஏழைகளைக் குறிப்பவன் டிர்ரியே.



டிர்ரி பிரெஞ்சுப் பாட்டு பாடுவான்; கின்னரம் மீட்டுவான். அவன் பாட்டு அரசனுக்குப் பிடிக்கும். ஸ்தாயி வரிசையில் பிடித்தால் அவன் தொண்டையும் கையும், ஆகாசத்தில் துள்ளியேறுவதுபோலிருக்கும். அவன் அழுத்தும் அழுத்தில் வாத்தியத் தந்தி கூட அறுந்துபோகும்.

மஹாராஜாவுக்குத் தலைவலி, உடம்புவலியானால் தானதருமங்கள் நடக்கும். அணியணியாக மருத்துவர் வருவர். எல்லாம் டிர்ரியின் உத்தரவுப்படிதான் நடக்கும். அரசன் உடற்பாதுகாப்பிற்கு ஒரு ஸ்காட்ஷ் படையுண்டு; அதன் துணைத்தலைவன் டிர்ரியே.

டிர்ரி போர்க்களத்திலும் தனது வீரத்தைக் காட்டியிருக்கிறான். அவன் தைரியவான், பலசாலி, அழகன், கம்பீரமான தோற்றமுள்ளவன், ஆளுக்குத் தக்கபடி தளுக்காக நடப்பவன். இவ்வளவு யோக்யதைகொண்ட டிர்ரி அரசனது நெருங்கிய நண்பனானதில் வியப்பில்லை. அரசனுக்குச் சட்டை தொப்பி மாட்டும் உரிமைகூட அவன் பெற்றான். பிரபுக்கள் சபையில் (House of Lord-) அவன் தக்க இடம் பெற்றான். 'குடியரசுப் பித்தம் பிடித்த கினானை சார்லியை மகன்மூலம் பழி வாங்கிவிட்டோம்' என்று ஜேம்ஸ் மனமகிழ்ந்தான். இவ்வளவிற்கும் டிர்ரி, கினான் சார்லியின் வைப்பாட்டி மகன், சொந்த மகனல்லன்.

க்ளான் சார்லிக்கு இங்கிலாந்தில் ஏராளமான நிலபுலன்களும், மாளிகைச் செல்வங்களும் உண்டு. அத்தனை செல்வமும் பிற்காலம் யாருக்குத் தருவது? ஒரு சந்ததி வேண்டுமே என்ற ஆசை சார்லிக்கு உதித்தது. சார்லிக்கு 59 வயதாயிற்று. ஆங்கில சுதந்திரப் போரில் கிராம்வெல் பக்கம் தொண்டு செய்த ஒரு பிரபு, தன்னைப்போலவே ஜினிவாவில் வசித்தான். அவர் பெயர் ப்ராட்ஷா. அவருக்கு ஒரு மகள் இருந்தாள். அந்த மகளையே சார்லி மணம் புரிந்தான். அடுத்த வருஷமே சார்லிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அது பாலசூரியன்போல வெகு அழகாயிருந்தது. நமது குலம் விளங்க, பேர்விளங்க, மனைவிளங்க, நமது செல்வத்திரளை ஆள ஒரு சந்ததி வந்ததென்று சார்லி அளவற்ற மகிழ்ச்சி கொண்டான். ஆனால், குழந்தை பிறந்தவேளை தாய் இறந்தாள். அடுத்த ஆண்டு, 60 வயதில் தந்தை சார்லியும் இறந்தான். குழந்தை அனாதையானது.

இச் செய்தி ஜேம்ஸ் II-க்குத் தெரிந்தது. தன் கையில் அகப்பட்டுத் தூக்குமேடை யேற்ற முடியாத பகைவனை எமன் ஒழித்துவிட்டான் என்று மகிழ்ந்தான். ஆனால், அவனுக்கொரு அழகான குழந்தை பிறந்தது கேட்டு மனங்கொதித்தான். தாய் தகப்பனில்லாத அந்தக் குழந்தையை எப்படியோ சூழ்ச்சி செய்து மறைத்துவிட்டான். அச் சூழ்ச்சியைப் பிறகு அறிவோம்.

"நமது விரோதியான க்ளான் சார்லி பிரபு ஜினிவாத் தனிமையில் இறந்துபோனான். அவனுக்குச்

சரியான சந்ததி நமது அன்பிற்குரிய **டேவிட் டிர்ரிமோர்** என்பதை உலகறியும். ஆதலால் சார்லிக்குரிய பிரபுப் பட்டத்தை டிர்ரிமோருக்கே சூட்டுகிறோம். இன்று முதல் பிரபு டேவிட் டிர்ரிமோர், காலஞ் சென்ற க்ளான் சார்லியின், கோட்டை மாளிகைகள், கிராமங்கள், பிதுரார்ஜித சொத்து சுகங்கள், அதிகாரங்கள் முதலிய . அனைத்திற்கும் உரியவராகிறார். ஜோஸேனை க்ளான் சார்லி மகன் மணப்பான்" என்று அரசன் விளம்பரம் செய்துவிட்டான். **டேவிட் டிர்ரிமோர்,** "ஜம்" என்று க்ளான் சார்லியின் பெரிய மாளிகையில் பிரபுவாகச் சென்று ஆடம்பரமாக அமர்ந்தார். ஆனால் ஜேம்ஸ் ஒரு நிபந்தனை விதித்தான். அதாவது, அப்போது கைக்குழந்தையாயிருந்த **ஜோஸேன்** என்ற ஒரு செல்வ மகளை வயது வந்ததும் டிர்ரி பிரபு அவசியம் மணம்புரியவேண்டும் என்பது. 'ஆஹா' என்று டிர்ரிமோர் அதற்கிசைந்தான்.

பிரபுக்களின் அன்பெல்லாம் என்ன சாசுவதம்? ஜேம்ஸ் II அரியணையிழந்து, பிரான்ஸிற்கு ஓடலாயிற்று. "போய் வாருங்கள்" என்றுகூடச் சொல்லாமல் டிர்ரிமோர் புதிதாக வந்த வில்லியம் III-ஐ சலாம் போட்டு வரவேற்றான். டிர்ரிமோர் அழகன், வீரன், ரசிகன், சபை நிறைந்தவன், அதிகாரிகளைக் குல்லாபோடத் தெரிந்தவன், தேசாதிகாரி யாரானாலும் அவர்களுக்கு உண்மையான பணி செய்பவன். ஆதலால் அவனை வில்லியமும் விரும்பினான். அரசர் சலுகை, க்ளான் சார்லியின் மாளிகைக்

செல்வம், அதிகாரம் எல்லாம் கிடைத்துவிட்டன. இனி ஜோஸேனும், அவளுடைய செல்வமும் அவனுக்குக் கிடைக்கவேண்டும். இந்த ஜோஸேன் யார்? கேளுங்கள்.

## 30. ஜோஸேன்

ஜேம்ஸ் II-ன் சொந்த மகள் அன்னாள் (*Anne*). வில்லியம் III, 1702-ல் இறந்துபோனான். அவனுக்குப் பின் பட்டத்திற்கு வந்தவள் அன்னாள். ஜேம்ஸ் II-ன் காதலைக் கொள்ளைகொண்ட வைப்பாட்டி மகளே ஜோஸேன். ஆங்கில ஆட்சிச் சக்கரத்தை மன்மத பாணம் வெகுவாக ஆட்டிவைத்தது. அழகு, தெம்பு, முகமன்—இம் மூன்றும் இருந்தால் போதும்—அரசன் புன்னகையால் அஷ்டைசுவரியமும் பெற்றோங்கலாம். தனது வைப்பாட்டி மகளான ஜோஸேன் பிறந்ததும் பெரிய மாளிகைச் செல்வந் தந்து, அவளை ராஜாத்தி (*Duchesse*) ஆக்கினான் ஜேம்ஸ். அத்துடன் அக் குழந்தைக்குக் கணவனையும் நிர்மாணித்தான். க்ளான் சார்லியின் சொந்தப் பிள்ளையை மறைத்து அவனுடைய ஏராளமான மாளிகைச் செல்வத்தையும், கிராமங்களையும் வைப்பாட்டி மகனை டிர்ரிமோருக்குச் சாசனம் எழுதிவைத்தான். இங்கே ஒரு வைப்பாட்டி மகள், அங்கே ஒரு வைப்பாட்டி மகன்—இருவருக்கும் சுக்கிர தசை அடித்தது. அன்னாள் அரியணை யேறியபோது ஜோஸேன் இருபது வயதுக் குமரியானாள். அப்போது டிர்ரிமோருக்கு வயது நாற்பத்தொன்று. 1705-ம் ஆண்டு, 23-வது வயதில், ஜோஸேனும் டிர்ரிமோ

ரும், நெருங்கி உறவாடினர், கொஞ்சிக் குலாவினர்; ஆனால், விவாகம் செய்துகொள்ளவில்லை. அதற்கு அவர்கள் அவசரப்படவும் இல்லை. ஏன்? ஒரு கணவனுக்குக் கட்டுப்பட்டால் தனது சுதந்திரம் போய் விடுமென்று நினைத்தாள் ஜோஸேன். கணவனைவிடக் காதலரிடமே அவளுக்குப் பிரியம். மனைவியாயிருப்பதைவிட நித்யகல்யாணியாயிருப்பதே அவளின்பம். டிர்ரிமோருக்கும் அவ்வாறே காதற் சுதந்திரம் கொண்டாட விருப்பம். ஒருவரை யொருவர் தப்ப மாட்டார்கள் என்று இருவருக்கும் தெரியும். ஆதலால் அவர்கள் கலியாணநாளைத் தள்ளிப்போட்டுக் கொண்டே வந்தனர். அக்கால வாலிபர் இவ்வாறு கடிமணம் புரிந்துகொள்ளத் தாமதிப்பது வழக்கமாயிருந்தது. (67 வயதில், பக்கிங்காம் சீமாட்டி காதல் புரிந்தாள்.) ஜேம்ஸிற்குப் பிறந்த ஜோஸேன் தன்னை ஒரு ராஜகுமாரியாகவே மதித்தாள். டிர்ரிமோர் வீரத் திருவழகன். அவனை அவள் விரும்பினாள், நெருங்கிப் பழகினாள். என்றாலும் அந்தரங்கத்தில் "இவன் ஒரு பிரபுதானே; நாம் ராஜாத்தியல்லவா" என்று செருக்குற்றாள். ராஜாத்தி என்றால் தனது இஷ்டப்படி நடக்கலாம், யாரும் ஏனென்று கேட்கக் கூடாது. ஆள் ஜோராயிருந்தால் அவளுக்குப் போதும். டிர்ரிமோர் பிரபுவின் ஜோருக்கு எல்லையேயில்லை. அத்துடன் அவன் வாள்வீசுவான், குஸ்தி செய்வான், சூதாடுவான், வைப்பாட்டிகளுடன் குஷியாயிருப்பான். அவன் சூதாடித் தோற்கும் போது "சபாஷ்" என்பாள் ஜோஸேன். ஜோஸேன் நல்ல உயரம், பழுத்துக் கொழுத்த தடிச்சி; நல்ல

அழகி; நல்ல சிகப்பி; கமலக்கண்ணி; மலைபோன்ற மார்பினள்; அபரிமிதமான நாகுக்குக்காரி. பாரிஸ் சாயங்களுக்கு அவளால் ஏராளமான வியாபாரமாகும். அவள் கூந்தல் கார்மேகம்போலே சுருள் சுருளாகப் பரந்து விரிந்திருக்கும். ஜோஸேன் மெத்தப் படித்தவள்; மண்டைக்கருவம் பிடித்தவள். அவள் யாரையும் மதிக்கமாட்டாள். ஆண்பிள்ளைகள் அவள் காலடியில் வணங்கவேண்டும். "பு, இவன் ஆண்பிள்ளைதானே" என்று அலட்சியமாக நினைப்பாள். தன்னை ஒரு தேவதையாக மதிப்பாள். 'கணவன்' என்றால் சினப்பாள்; 'காதலன்' என்றால் உகப்பாள். 'நான் வாடாக் கன்னிகை' என்று மதிப்பாகச் சொல்லிக் கொள்வாள். தற்புகழ்ச்சியிலும், வம்பாடுவதிலும் அவளுக்கிணை கிடையாது. தளுக்கு, பிலுக்கு, மினுக்கு, குலுக்கு முதலிய மாயவித்தைகளெல்லாம் அவளிடம் பிச்சை வாங்கவேண்டும். அவள் மோகத்தில் அகப்பட்ட ஆட்கள், சுழலில் அகப்பட்ட துரும்பு போலாவர். அவளுக்கு அசாத்திய நெஞ்சுரம் உண்டு. அதிகார தோரணையிலேதான் எல்லாரிடமும் அவள் பேசுவாள். அவள் சுகபோகங்களின் ஆழத்தைக் கண்டவள். தனது மோகத்திற்கு ஆட்களைப் பலி வைத்தவள்; எனினும் பூத்த மலர்போன்ற கன்னிகை என்று தன்னைப் புகழ்ந்துகொள்வாள். அச்சம், நாணம், மடமை, பயிர்ப்பு என்பார்களே, அவையெல்லாம் இந்தக் கன்னிகையைக் கண்டால் காதவழி ஓடும். அவள் தலைநிமிர்ந்து செருக்குடனே நடப்பாள். ஆணுடை தரித்துக் குதிரைமேலேறி இஷ்டப்படி வெளியே சென்றுவருவாள். "ஹெர்குலிஸ் இறந்து

போருனே!" என்று வருந்துவார். அப்படிப்பட்ட பலசாலி தனக்கு வேண்டும் என்பாள். அவள் போக்குவரத்திற்காக மாளிகையில் இரகசிய வழி யுண்டு.



இக் குணங்களெல்லாம் அக்காலச் சீமாட்டி களின் இயல்பாயின. எலிஜபெத்—மேரி ஸ்டுவர்ட் காலத்திலிருந்து இப்பெண்-செருக்கு அதிகமாயிற்று. நடத்தையோ வழவழவழா! அன்பும் அறமும் கூடிய இல்லறம் இழிவுற்றது. கட்டற்ற காமக்களியாட்டங் களும், கண்ணற்ற சுகபோகங்களும், மட்டற்ற அழ குச் செருக்கும், குடியும் கூத்தும் போலி மினுக் கும் செல்வச் சுதந்திரமாகக் கருதப்பெற்றன. ஆசை நாயகரும், ஆசை நாயகியரும் வலுத்தனர்.

"யதாராஜா ததா: ப்ரஜா:" என்பது பழ மொழியல்லவா? எலிஜபெத் ஆள் அழகல்ல; தன்னை அழகு செய்து கொள்வதில் அவ ளுக்கு அபரிமிதமான ஆசை. காலை எழுந்ததும் முதல் வேலை உடல் அலங்காரந்தான். அவள் சுமார் 3,000 வகையான ஆடை யாபரணங்கள் வைத்தணிவாள். அலங்காரம் பண்ணிக் கொள்வ தற்கு முன் அவளை எவரும் பார்க்கக் கூடாது; பார்த்தால் அது ஒரு பெரிய குற்றமாகும்; தண்டனை கிடைக்கும். அவளுக்கு வாலிபர்மேல் அடங்காமோகம்! அவளால் பிழைத்த வாலிபர் மிகப் பலர். இப்போலியழகை வர்ணித்து இச்சகம் பேசு வோர் எத்தனை! அதில் மயங்கி விழுந்து கேளிக்

சபோல் மடிந்தோர் எத்தனை! அதனால் எத்தனை கொலைகள் நடந்தன! ஆன்போலீன் மலைபோன்ற மார்பினள், கையில் ஆறு விரல்களைக் கொண்டவள்; அவள் பல் வெளியே நீட்டிக்கொண்டிருக்கும். எனினும் அவளது போலியழகில் மனத்தைப் பறிகொடுத்தான் ஹென்றி VIII. இன்னொரு போலியழகி அவன் மனதைக் கவர்ந்ததும், ஆன்பொலீனை வெட்டிக் கொன்றான். இந்தச் சிங்கார விநோதங்களாலும், காமக் கொலைகளாலும் அரசாங்கம் பட்டபாட்டைச் சரித்திரமே சொல்லும். பகலில் பெண்ணாயிருப்பவள், இரவில் உயிரை உறிஞ்சும் பச்சை மோகினியாகிறாள். கற்பென்பது மருந்திற்கும் கிடையாதென்றால், பெண்மையின் பெருமை என்ன! இவர்களால் எத்தனை ஏழைகள் கண்ணீர் விடுகிறார்கள்! நாட்டுச் செல்வம் எப்படிப் பாழாகிறது? இடம்பக் களியாட்டம்! போலிக் கூத்து!

சமய நம்பிக்கையிற்கூட உள்ளொன்று புறமொன்று! ஜோஸேன் அந்தரங்கத்தில் தந்தை ஜேம்ஸைப்போலக் கத்தோலிய மதத்தையே நம்பினாள்; அக்காலம் அம்மதம் அரசியலுக்கு விரோதம். எலிஜபெத் ஆங்கிளிகன் மதத்தைத் தழுவினதால் அவ்வளவு சீர்பெற்றாள். கத்தோலிக்கர் என்றால் சொத்து சுகமெல்லாம் போய்விடும். ஆதலால் ஜோஸேன் வெளியே புரோதஸ்தாந்து மதத்தினளாகவே காட்டிக் கொண்டாள். அக்காலச் சீமாட்டிகள் லத்தினுக்குத் தனிப்பெருமை யளித்ததால், ஜோஸேனும் லத்தீன் பேசினாள். என்ன ஒய்யாரம், செல்வச் செருக்கு;

போலி நகை, சாய மினுக்கு—எல்லாம் மாயவலை! பதினெட்டாம் நூற்றுண்டில் பெண்ணினம் பெண்மையிழந்து நடைதவறியது! பதினெட்டாம் நூற்றுண்டுப் பெண்மை உரிய கணவனை வெளியே நிறுத்தி, கள்ளக் காதலனுடன் உள்ளே தாழ்ப்பா ளிட்டு முயங்கியது! ஆதாமை வெளியே நிறுத்தி ஏவாள் சாத்தானுடன் கூடியிருந்தால் எப்படியிருக்கும்! ஒருவனுக்கு மனைவியாக வாழ்வது அடிமைத் தனமாம். பல காதலரைக் கூடுவது சுதந்திரமாம்! இந்த நம்பிக்கையாலேதான் ஜோஸேன் டிர்ரிமோரைக் கணவனாக ஏற்காமல், காதலனாகவே வைத்திருந்தாள். டிர்ரிமோரும் அவ்வாறே! அவனும் ஒரு இல்லாளுடன் வாழ்வதைவிடக் காதல் வேட்டையிலேயே மோகங்கொண்டான்.

## 31. பிரபுக்கள் சேஷ்டை

இந்தப் பிரபுக்களின் இரக்கமற்ற சேஷ்டைகள் மிகப் பலவாம். 'நரிக்குக் கொண்டாட்டம்; நண்டுக்குப் 'பிராணவஸ்தை' என்பார்களல்லவா! அது போல், இவர் களியாடல்களால் ஏழை யெளியவர் பட்ட துன்பம் கொஞ்சமல்ல.

"இந்தப் பிரபுக்கள் சமையலறைகளைப் பார்த்தாலோ—சிவசிவா! பயங்கரக் காட்சி! இங்கே மாட்டின் கழுத்தறுந்து இரத்தம் வடியும்; அங்கே இரண்டு மூன்று ஆட்டை உரித்துத் துண்டம் போடுவார். கதறக் கதறக் கோழி வாத்து முதலிய புட்களை அறுத்துச் சுட்டு வேகவைப்பர்; பன்றிக்கறியைப்




பர்கில் ஃபெத்ரோ

பிசைந்து பக்குவஞ் செய்வர். பெரிய பெரிய கடல் மீன்களை அறுத்துச் சமைப்பர். ஏராளமான முட்டைகளை உடைத்துச் சமைப்பர். இத்தனை உயிர்க்கொலைகளும் பிரபுக்கள் இரத்தத்தில் கலக்கின்றன! அத்தனை உயிர்களின் கண்ணீரும் அவர் வாழ்விற் கலக்கின்றன! இந்தமாதிரிக் கொலையுணவுகளால் அவரியல்பும் கொடுமையாகிறது ; கொடுமை செய்கிறது. அந்தக் கொலைப் பழியால் மனிதன் மனிதனைப் போர் செய்து கொன்று குவிக்கிறான்! மஸ்தான சாப்பாடு, மாளிகைச் சுகம், நவரத்ன அலங்காரங்கள் இவற்றுடன் மனம் திருப்தியடைகிறதா! மனப்பசி தனிப்பசியல்லவா? அப்பசி தணியச் சீமான்களும் சீமாட்டிகளும் புரியும் சேஷ்டைகள் கணக்கிலடங்கா.

"போதே போகவில்லை!" என்பாள் ஜோஸேன். "புறப்படு" என்று அவளை இட்டுக்கொண்டு வேடிக்கை விநோதங்கள் காட்டப் புறப்படுவான் டிர்ரிமோர்! அவன் அழகும் அதிகாரமும் லண்டனெங்கும் பலிக்கும். அவன் அரசியின் தங்கையான ஜோஸேனின் வருங்காலக் கணவன், இராணிக்கு வேண்டியவன், க்ளான் சார்லியின் சொத்துக்குரிய கோடீச்வரனல்லவா? லண்டன் பிரபுக்கள் அவனுக்குத் தக்க மரியாதை செய்வர். எங்கே சென்றாலும் அவன் மனமகிழும்படி வேடிக்கை விநோதங்கள் ஏற்பாடு செய்வர். லண்டனில் பல கழகங்கள் உண்டு. அனைத்தும் டிர்ரிமோர் பிரபுவை ஆவலாக வரவேற்கும். அவனைத் தலைவனாக ஏற்று உபசரிக்கும். அவனது நடையுடை பாவனைகளை மற்றோரும் அபி

நயிப்பர். லண்டன் சமுதாயத்தின் உன்னத வாழ்க்கை (*High Life*) ஒரு பெரிய **அலங்காரக் கூத்து.** அதன் சூத்திரதார் டிர்ரிமோர் பிரபுவே. அவன் பல நாகரிகச் சங்கத்திற்குத் தலைவனுனன்.

"லேடிகினி" என்றொரு மன்றம் உண்டு. அதிலேதான் வாலிபக் கனவான்களும், செல்வ யுவதிகளும் நாகரிகம் பயில்வர். அவர்கள் அங்கே கூடி விருந்துண்பர், குடிப்பர், சிரிப்பர், கூத்தாடுவர், பணயம்வைத்துச் சூதாடுவர். அங்கே 50 கினிக்குக் குறைந்த பணயம் கிடையாது. சூதாட்ட மேஜையில் எப்போதும் 20,000 கினி தவழ்ந்துகொண்டிருக்கும். ஒவ்வொரு சூதர் பக்கத்திலும் சூடான தேயிலைப் பானம் இருக்கும். இவர்கள் முகமூடி போட்டுக் கொள்வர்.

பீஃப் ஸ்டீக் க்ளப், ஸூரிலீ கிளப் (*Surely Club*) ஸ்ப்ளிட் பார்திங் கிளப் (*Split Farthing Club*) ஸீல்ட் நாட் (*Sealed Knot*) கிளப், ராயலிஸ்ட் கிளப், மில்தன் ஏற்படுத்திய ரோடா கிளப் ஆகிய பல கழகங்கள் லண்டனில் உண்டு. அவற்றிலெல்லாம் . டிர்ரிமோர் பிரபு தலைமை வகித்தார். இது தவிர அவலக்ஷணக் கழகம் ஒன்றுண்டு. (*The Ugly Club*) அதில் நன்றாகப் பொழுதுபோகும். ஊரிலுள்ள அவலக்ஷணங்களெல்லாம் அங்கே கூடும். அவலக்ஷணப் பிரபுக்களும் சீமாட்டிகளும் அதன் அபிமானிகளாவர். அவலக்ஷணப் பெரியார் சிலைகளும், படங்களும் அக் கழகத்தை அலங்கரிக்கும். இந்தக் கழகத்திற்கும் டிர்ரிமோர்

அடிக்கடி செல்வான். லண்டனில் பல புரட்சிச் சங்கங்களும் உண்டு. அவற்றையெல்லாம் சார்லெஸ் II அழித்துவிட்டான். அவற்றில் கன்றுத் தலைக் கழகம் (*Calf's Head Club*) என்றொன்று. 30-1-1649-ல் சார்லெஸ் I-ன் தலையை சீவினார்களல்லவா? அன்று இச் சங்கத்தார் "கிராம்வெல் நீடூழி வாழ்க!" என்று கன்றின் மண்டையோட்டில் சாராயம் ஊற்றிக் குடித்தார்கள். அதனால் இக் கழகத்திற்கு அப் பெயர் வந்தது. அதன் அங்கத்தினர் அனைவரும் சுதந்திர வெறிகொண்ட குடியரசுவாதிகள். அச் சங்கத்தை நிர்மூலமாக்கி அதனிடத்தில் ஒரு ராஜபக்த சங்கம் நாட்டியது முடியரசு. அங்கே பிரபுக்களும் சீமாட்டிகளும் உல்லாசமாகக் காலம் கழிப்பர். அச் சங்கத்தில் முதன்மை வகிப்பவனும் டிர்ரிமோர் பிரபுவே. அதையொட்டி 'ஷீரோம்ப்' கிளப் ஒன்றுண்டு. அதில் பிரபுக்களின் சேஷ்டைகள் பல நடக்கும். அவற்றில் ஒன்றைச் சொல்லுவோம். பிரபுக்கள் 'வா' என்றால் சாதாரண ஜனங்கள் கைகட்டித் தலைவணங்க அவர் சமூகத்தில் வந்து நிற்க வேண்டும். சங்கத்தைச் சேர்ந்த பிரபு ஒரு அழகான பெண்ணை வரச்செய்வார். எல்லாப் பிரபுக்களும் அவளைச் சூழ்ந்துகொள்வர். காலைத் தூக்கு, கையைத் தூக்கு, தலைகீழே நில், அப்படி நட, இப்படி நட, கூத்தாடு....என்றெல்லாம் அவளைப் பாடாய்ப்படுத்துவர். தலைகீழே நின்று கையையூன்றி நடக்கச் செய்வர். அந்த ஏழைப் பெண் படும் அவஸ்தையைக் கண்டு எல்லாப் பிரபுக்களும் சிரிப்பர்! அவள் மறுத்தால், சினந்தால் உதை விழும்! அவமானப்பட நேரிடும்;

எல்லாரும் அவள்மேலே தாவுவர். இதொரு முக்கிய மான பிரபு சேஷ்டையாகும்.



மெர்ரி டான்ஸ் கிளப் (*Merry Dance Club*) என்றொன்றுண்டு. இங்கே இருபாலாரும் கூடிக் குடித்துப் பாடி ஆடுவர். இதில் ஒரு கறுப்புப் பெண்ணைப் புகுத்தி அவளுடன் ஒரு வெள்ளையனைக் கைகோத்து விநோத நடனங்கள் புரியச் செய்து எல்லோரும் எக்களிப்பர்! நரகத் தீக் கழகம் (*Hell-fire Club*) என்றொரு கழகமுண்டு. அதில் ஆளை நரகக்குழியில் தள்ள என்னென்ன ஆபாசங்கள் உண்டோ, எத்தனை அழிலீலைகள் உண்டோ அத்தனையும் குஷியாக நடக்கும். மண்டையடி (*Club of Coups de tete*) என்றொரு கழகம் உண்டு. அங்கே என்ன மூட்டை தூக்கும் தடியன் ஒருவனை உள்ளே விட்டு, நெஞ்சிலும் மண்டையிலும் குத்துவர். பொறுமையாகக் குத்து வாங்கினால், சாராயம் தந்து அனுப்புவர். ஒரு நாள் இக் குத்துத் தாங்காமல் ஒரு அப்பாவி மாரடைத்து இறந்துபோனான். கனவான்கள் கொன்றால் கேள்வியேது? "இந்தப் பயல் மிதமிஞ்சிச் சாராயம் குடித்து மாரடைத்து இறந்தான்" என்று டாக்டர்கள் சொல்லிவிட்டனர்.

வேடிக்கைக் கழகம் (*Fun Club*) என்று ஒன்றுண்டு. அதைச் சேர்ந்த தடிக் கனவான்கள் திடீரென்று ஒரு எளிய வீட்டில் நுழைவர்; கண்ணாடியை உடைப்பர், அழகான படங்களின் முகத்தில் கிறுக்குவர், நாய்க்கு விஷம் வைப்பர், பட்சிக் கூண்டில் பூனையைவிட்டு மூடுவர்.

யாரையாவது பாடையில் வைத்துக் கறுப்புத் துணி போட்டுத் தூக்கிவந்து, "அடி உன் புருஷன் மாண்டுபோனான்" என்று பெண்களை அழவைப்பர். அவர்கள் மாரடித்தழும்போது, பாடையிலுள்ளவன் "ஹஹஹி" என்றெழுந்து பாட்டுப் பாடிக் கூத்தாடுவான். எல்லாரும் சிரிப்பர். அல்லது உறவினர் இறந்துபோனதாகப் பொய்க் கடிதம் தந்து, வீட்டாரை, அழவைத்துச் சிரிப்பர். ஜேம்ஸ் II காலத்தில், இரவில், ஏழைக் குடியில் தீ வைத்தான் ஒரு மஹாப் பிரபு; குடிசை சாம்பலானது. ஏழைகள் வயிற்றிலடித்தலறினர். தீ வைத்தவனை, "தமாஷுக்கு ராஜாடா நீ" என்று புகழ்ந்தனர் லண்டன் பிரபுக்கள். மிகப் பெரிய கனவான்கள், எல்லாரும் உறங்கும் நிசியில் ஏழைகள் வசிக்கும் தெருக்களில் நுழைவர். பறவைக் கூடுகளின் கதவைத் திறந்துவிடுவர்; பட்சிகள் பறந்தோடச்செய்வர்; குழாய்களைச் சிதைப்பர்; நீர்த் தொட்டிகளைத் திறந்துவிடுவர்; கொடித் துணிகளைக் கழற்றி யெறிவர்; பயிர்களைச் சூறையிடுவர்; தெரு விளக்குகளை அணைப்பர்; ஜன்னல் கண்ணாடிகளை உடைப்பர்; முட்டுக்கால்களை வெட்டித் தள்ளுவர்; ஏழைகள் வயிற்றிலடித் தலறுவர். "எவ்வளவு தமாஷ் ஹிப் ஹிப் ஹுரே!" என்று பிரபுக்கள் சிரிப்பர். ஏதாயினும் வைதால், தாழ்வாகப் பேசினால், ஆள் தப்ப முடியாது. இந்த மஹாப்பிரபுக்கள்மீது பிராது செய்யவும் இயலாது. அவர்களை யார் கேட்பது? தெய்வம்தான் கேட்கவேண்டும். ஏழைகள் இப்படிச் செய்தால், ஆயுட் கைதியாகி இருட்சிறையில் வாட

வேண்டும். இளம் பிரபுக்களை யாரென்ன செய்ய முடியும்? "சும்மா ஒரு வேடிக்கை" என்பார் சேட்டால்.

மாஹோக் கிளப் (*Mahock Club*) என் றொன்றுண்டு. பிறரைக் கொடுமை செய்வதே இச் சங்கத்தார் கொள்கை. இதிற் பல கொடிய விளையாட்டு கள் உண்டு. ஒரு விளையாட்டை மட்டும் இங்கே குறிப் போம். ஒரு பரம ஏழையை இழுத்துவருவர்; அவ னைச் சுற்றி எட்டுக் கனவான்கள் நீண்ட கூறிய வாளை நீட்டிக்கொண்டு நிற்பர். அந்த ஏழை எந்தக் கனவா னுக்கு முதுகைக் காட்டுகிறானோ, அந்தக் கனவான், வாளால் அவனைக் குத்துவான். ஏழை உயிர் துடித்து இங்கு மங்கும் திரும்பித் தவிப்பான். எட்டுப் புறமும் உள்ள கனவான்கள் அவனைக் குத்தி வதைசெய்வர். ஏழை ரத்தம் பெருக அலறித் துடிப்பான். அவ னைக் குற்றுயிராக்கி, முடிவில் தடியடி கொடுத்தனுப்பு வர். இதற்கு "வேர்வை விளையாட்டு" என்பர். வேர்வை என்பது இரத்த வேர்வைதான். ஆள் மிகவும் அழுது "பிரபுக்களே, காப்பாற்றுங்கள்" என்று காலில் விழுந்தால் ரொட்டி சாராயத்திற்கு ஏதாயினும் தந்தனுப்புவர்.

வீதியில் போகிற ஒரு ஏழையை "வரவேண்டும், வரவேண்டும் ஹ ஹ ஹ!" என்று சிரித்தழைப்பர். ஆள் உள்ளே வந்ததும், அவனை வளைத்துக்கொண்டு, மூக்கிலும், கண்ணிலும் கையால் குத்துவர். இரத்தம் வடிந்தால் கொஞ்சம் பணம் தந்து "பிழைத்துப் போ" என்று கல்தாக்கொடுப்பர். ஆள் இறந்தாலும்

யார்கேட்பது? ஒரு பிரபு ஒரு ஆளைக் கொன்றால் சட்டம் ஒன்றும் செய்யாதல்லவா? எட்டுப் பிரபுக்கள் ஒரு ஆளைக் கொன்றால் அவர்களை யார் என்ன செய்ய முடியும்? "தெய்வமே! நீதான் இக் கொடுமைகளைக் கேட்கவேண்டும்" என்று ஏழைகள் மண்ணை வாரித் தூற்றுவர். அதற்கெல்லாம் நமது மஹா பிரபுக்கள் பயந்தவர்களா என்ன! எல்லாம் திமிர், செருக்கு, வீறாப்பு!



இப்படி ஆயிரம் சேட்டைகள் உண்டு. டர்ரிமோர் பிரபு அவற்றிலெல்லாம் தாராளமாக முன்னின்று, பங்குகொள்வான். இந்தக் கொடிய தமாஷாக்களெல்லாம் ஜோஸேனுக்கு மெத்தப் பிடிக்கும். திடீரென்று டர்ரிமோர் எளியர் வீட்டில் தீ வைப்பான்; குளிர் நடுக்கும்போது வீட்டிலுள்ளவர் மேல் பச்சைத் தண்ணீர் விட்டடிப்பான். அவர்கள் படும் அவஸ்தையைக் கண்டு நகைபொங்குவான். "ஐயோ பிரபுவே, நீரே கதி" என்று காலில் விழுந்தால் "பிழைத்துப் போ பிச்சைக்காரப் பயலே" என்று எரிந்த வீட்டைக் கட்டித்தருவான். "**பெண் பழக்கும் கழகம்**" என்று ஒன்றுண்டு. அதில் பிரபுக்கள் தமது இஷ்டப்படி பெண்களுடன் ஆடிப் பாடிக் கூடிக் களிப்பர். அதிலே தான் டர்ரிமோருக்கு மோகம் அதிகம். அந்தக் கழகத்திலுள்ள இரண்டு அழகிய மாதருடன் கை கோத்து ஆடுவதில் அவனுக்கு ஆனந்தம்.



ஆட்களை இந்தப் பாடுபடுத்தும்போது, பிராணிகளை இவர்கள் என்ன பாடுபடுத்தமாட்டார்கள்?

டிர்ரிமோருக்குக் கோழிச் சண்டையில் வெகு பிரியம். கோழி வளர்த்து, அதன் சிறகைச் சின்னாபின்னமாக்கி, காலில் கத்தி கட்டிச் சண்டைக்கு விடுவான். சாரு மட்டும் கோழிகளைச் சண்டையிடச் செய்வான். இவ் வாயில்லா வுயிர்கள் இறந்தால் என்ன? வயிற்றுச் சுடுகாடு இருக்கிறது புதைக்க! இப்படியே முட்டுக் கடாய் விடுவதுண்டு. டிர்ரிமோர் குஸ்தி, குத்துச் சண்டைகளை வெகு உற்சாகமாகக் காண்பான். இவற்றிற்கெல்லாம் அவனை அவசியம் தலைமை வகிக்க அழைப்பர். "தீட்டு, குத்து, உடை மூஞ்சியை, முறி கையை!" என்று பயில்வான்களை அவன் தூண்டுவான். அவன் செய்த தீர்மானத்தையே எல்லாரும் ஒப்புவர். ஹெர்குலிஸ் போன்ற பயில் வான்களை அவன் ஆடையும் உணவும் கொடுத்து ஆதரிப்பான். அவர் ஒழுக்கத்தைக் கவனிப்பான். தான் ஆதரிக்கும் பயில்வான்களே குஸ்திப் போட்டி களில் வெற்றிபெறப் பெருமுயற்சி செய்வான். எதிரி யின் பல்லையுடைத்தல், மூக்கைப் பெயர்த்தல், கண்ணைக் குத்தல், கையை ஒடித்தல், காலை முறித்தல் —முதலிய கொடுமைகளுக்கேற்ற பிடிகளைப் பயிற்று வான். குஸ்தி, சிலம்பம், ஸர்க்கஸ், விகடம், தெருக் கூத்து, ஃபார்ஸ் அனைத்திற்கும் மகிழ்ச்சியுடன் செல்வான். பொதுஜனங்கள் அவனை **டாம்-ஜிம்-ஜாக்** (*Tom-Jim-Jack*) என்று அழைப்பர். டாம்-ஜிம்-ஜாக் வந்தால் பயில்வான்களுக்கும், கூத்தருக்கும், விகடருக்கும் கொண்டாட்டந்தான்! இந்த விநோதங் களுக்கெல்லாம் அவனுடன் ஜோஸேன் தவறாமற் செல்வாள். பொழுது போகவேண்டுமல்லவா?

## 32. இராணியம்மாள்

இந்த இருவருக்கும் மேலே விளங்கினாள் இங்கிலாந்தை ஆளும் இராணி அன்னாள்.—கொழுத்துப் பருத்து, வெளுத்த ஸ்தூல சரீரம், மாம்பழக்கதுப்பு மாதிரிக் கன்னம், நெருங்கிய நெற்றி, அகன்ற மலர் விழி, இன்பந்தேடும் உதடுகள், உப்பிய கழுத்து, மலை போன்ற மார்பு—இவற்றுடன் கம்பீரமாகத்தோன்றினாள் இராணியம்மாள். அவள் உல்லாசப் பிரியை; தனக்குப் பிரியமான பேருக்குத் தாராளமாகத் தருவாள்; சிலசமயம் கொச்சையாக வம்படிப்பாள்; சிலசமயம் எதுவும் பேசமாட்டாள்; சிலசமயம் களித்திருப்பாள்; சிலசமயம் கடுத்திருப்பாள்; தடபுடலாக அமுல் செலுத்துவாள்; சிறிய காரணத்தைக்கொண்டு பெரிய ரகளை செய்வாள்; தனது எண்ணத்தை லேசில் வெளியே சொல்லமாட்டாள். எல்லாவற்றையும் மனத்தில் வைத்திருந்து திடீரென்று காரியத்தைச் சாதிப்பாள். அவளுக்கு வேடிக்கை விநோதங்களில் வெகு பிரியம். அவள் சங்கீத ரசிகை; நல்ல நாடகம், பாட்டுக் கச்சேரி இவற்றிற்குச் செல்வாள். அவள் அழகு மட்டந்தான். எனினும் போலியழகு செய்வதில் அவள் சலிப்பதில்லை. அவளுடன் எப்போதும் முகச்சாயமும் உதட்டுச் சாயமும், சீப்பு கண்ணாடி வகையறாக்களும் தனது உருவம் எழுதிய ஒரு சிறு பெட்டியில் இருக்கும். அடிக்கடி உதட்டுச் சாயம்தடவி, முகத்தை ஒய்யாரமாக வைத்துக்கொண்டே அவள் சிரிப்பாள். அவள் நாலு குதிரை பூட்டிய ஒரு அலங்காரமான

மூடு வண்டியில் வெளியே செல்வாள். அப்போது அவளுடன் எட்டு உடற்காப்பாளர் குதிரை யேறி வண்டியைச் சூழ்ந்துவருவர். லூயி XIV-ஐப் போலவே அவளும் குதிரைகளை வெகு விரைவாக ஓட்டச் சொல்லுவாள்.

ஆன்னாள் கணவனுக்குக் கையைக் கொடுத்தாள்; காதலனுக்கு மனத்தைக் கொடுத்தாள்—கணவன் டென்மார்க்கியனான ஜார்ஜ்; காதலன் போலிங்ப்ரோக் (Bolingbroke). அவள் தனது கணவனைக் கடற்படைத் தலைவனாக்கினாள்; காதலனைப் பெரிய பிரபுவாக்கி, அரசியல் நிர்வாகத்திற்குப் பயன்படுத்திக் கொண்டாள். எலிஜபெத், கௌண்ட் எஸ்ஸெக்ஸைக் காதலித்தாள்; முடிவில், அவளே அவன் தலையைச் சீவ நேர்ந்தது. ஆன்னாள், போலிங்ப்ரோக்கை இணைபிரியாது நேசித்தாள். போலிங்ப்ரோக் பெரிய எழுத்தாளன்; இனிய பேச்சாளன். இருவரும் பிரெஞ்சில் இரகசியம் பேசுவர். ஆன்னாள் கணவனுடன் சிறிது டேனிய பாஷை பேசுவாள். அவள் கலைவாணரையும் கவிவாணரையும் தக்கபடி ஆதரித்தாள்.

போப், ட்ரைடன் (Dryden), கோல்பேர்ட் (Colbert) முதலியவர் இக்காலத்திற் செழித்தனர். ஆன்னாள் ஆட்சி புகழோங்கியது. ஏன்? பாராள் சபையின் விருப்பத்திற்கு அரசியலை விடுத்ததால். அவள் நாட்டு வருவாயிலிருந்து இலட்சக்கணக்காகப் பெற்றாள். அவள்காலப் பிரபுக்கள் படைவலியை அதிகப்படுத்தினர். எலிஜபெத் காலத்தில் 13 போர்க் கப்பல்களே இருந்தன. ஜேம்ஸ் I காலத்தில் 36,

(1705) அன்னாள் காலத்தில் 150 போர்க் கப்பல்கள் இருந்தன. அத்தனைக்கும் தலைவன் தனது கணவனே. அவள் காலத்தில் இங்கிலாந்தும் ஸ்காத்லாந்தும் ஒன்றாயின. அவள் ஆட்சியில் சீரும் செல்வமும் பெருகின.

அன்னாள், ஜோஸேனைத் தனது தங்கையாகவே மதித்தாள். ஜோஸேன் அழகி, அழகான கணவன் அவளைக் காதலித்தான்—இரண்டிலும் அன்னாளுக்குப் பொறாமை அதிகம்! தன்னைவிடத் தங்கை அழகாயிருப்பதைக் காண அவளுக்குச் சகிக்கவில்லை. "நாம் சீமையாளும் ராணி, இவள் வைப்பாட்டி மகள்தானே" என்று நினைத்தபோதிலும், தங்கையின் அழகு அக்காளை உறுத்தியது. அதிலும் தங்கைக்கு டிர்ரிமோர் போன்ற அழகன் வாய்ந்தது அக்காளுக்குப் பிடிக்கவில்லை. ஜோஸேனை எப்படியாவது மட்டந்தட்ட வேண்டுமென்று அக்காள் இரகசியமாகச் சூழ்ச்சி செய்தாள்; பொறாமையைப் புன்னகையால் மறைத்துத் தக்க சமயம் பார்த்திருந்தாள். இந்தச் சூழ்ச்சிக்கு உள்ளாள் பர்கில்ஃபெத்ரோ. யாரிவன்?

## 33. பர்கில்ஃபெத்ரோ (Barkilphedro)

சந்தேகம் ஒன்று யார் மனத்திலும் புகுந்துவிடுகிறதல்லவா? அதிலும் அதிகார மமதைகொண்ட பிரபுக்கள் மனத்தில் சந்தேகம் எளிதிற் புகும். அரசியற் சதுரங்கத்தில் ஈடுபட்டவருக்கே போட்டி, பொறாமை இயல்புதானே. காதலாகிக் கசிந்தனைத் துருகும் பிரபுக்களும் சீமாட்டிகளுங்கூட அந்தரங்

கத்தில் ஒருவரை யொருவர் நம்பமாட்டார்கள். ஒரு வர் குட்டை மற்ருெருவர் அறிய ஒற்றரை ஏவுவர்.

ஜோஸேனும் டிர்ரிமோரும் காதலர்தாம்; இருப்பினும் ஒருவர் மர்மங்களை இன்னெருவர் அறிய ஒரு ஒற்றனைக் கைக்குள் போட்டுக்கொண்ட னர். அதேமாதிரி, ஜோஸேன்-டிர்ரிமோர் ஆகிய இருவர் குட்டையும் அறியவும், தனது எண்ணத்தை நிறைவேற்றவும் இராணியம்மாள் ஒரு ஒற்றனை ஏவி ஞள். இந்த மூன்று பேருக்கும் உகந்த உளவாளி பர்கில்ஃபேத்ரோ! இவன் பலே பேர்வழி. பழைய பெருச்சாளி; முகத்தில் நகையும் அகத்தில் பகையும் கொண்டு அவன் பக்கா வேலை செய்வான்.

பர்கில் நன்ருகப் படித்தவன்; மதக் கல்வி கற்றவன். அவன் கத்தோலியர், புரோதஸ்தாந்தியர் ஆகிய இருவருக்கும் ஏற்றபடி பேசுவான். ஜேம்ஸ் II யார்க் கோமாஞ யிருக்கையில், பர்கில் அவன் சேவகத்திற் புகுந்தான். அரசன் அன்பைப் பெற்ருன். ஜேம்ஸ் II அரியணை நீத்தபிறகு, அவன்பாடு திண் டாட்டமாயிற்று. எழுத்தாளஞயிருந்து பார்த்தான். எழுத்துலகில் தலைதூக்க முடியவில்லை. அரண்மனைச் சமையல்வேலையில் அமர்ந்தான். அங்கே சமையல்செய் யும் குண்டர் அவனைக் கரண்டியால் அடித்து விரட்டி விட்டனர். பிறகு தலைவைத்துப் படுக்க இடமில்லா மல் பர்கில் அலைந்தான். ஜோஸேன் பிறப்பு வளப்ப மெல்லாம் அவனுக்கு நன்ருகத் தெரியும். முடிவில் தனது முயற்சியை அங்கே செலுத்திஞன். எப்படியோ கெஞ்சிக் கதறி அவள் மனத்தை இளக்கி

ளுன். அவள் அவனை டிர்ரிமோர் சேவகத்திற்குச் சிபார்சு செய்தாள். அதன்பிறகு அவனுக்குச் சாப் பாடு துணிக்குக் கவலையில்லை. அவனுடைய வயது, வறுமை, அறிவு, ஆற்றல்களைப் பார்த்து ஜோஸேன், தனது மாளிகையிலேயே அவன் இருக்க ஒரு மூலை தந்தாள்; அவனோடு ஏகவசனத்தில் பேசினுள். பர் கில், இடம் கொடுத்தால் மடம்பிடுங்கும் பேர் வழி. குல்லாவேலையில் எல்லாரையும் மிஞ்சின வன். நாளுக்குநாள் ஜோஸேன் மனமிளகும்படி நடந்துகொண்டான்; அவள் அந்தரங்கங்களை யெல்லாம் மெல்ல அறிந்தான். ஜோஸேனும் அவனை முழுதும் நம்பினுள். ராஜாத்தி முன்னே எல்லாரும் முதுகு வணங்கி ஒரு சலாம் போட்டால், பர்கில் தரைமட்டும் வணங்கிப் பத்து சலாம் போடுவான். எப்படியாவது அவள் மூலம் ஒரு வேலை பெற்று, இராணியம்மாளை அணுகவேண்டுமென்பதே அவன் முயற்சி. அப்போது ஒரு வேலை காலியாயிருப்பதை அறிந்தான்; தக்க சமயம் பார்த்து மிக்க வணக்கத் துடன் ஜோஸேன் முன் இவ்வாறு விண்ணப்பந் தொடங்கினுன்:

—தாஸன், ஏழை, சமூகத்தை நம்பியிருக் கிறேன்.

—உனக்கு என்னவேண்டும்?

—தங்கள் கிருபை எளியேன்மேல் இருக்க வேண்டும்.

—சரி; வேண்டியதென்ன கேள்?

—ஒரு வேலை.

—உனக்கா? வேலையா?

—ஆம், இறைவியே....

—உதவாக்கரை, நீ என்ன வேலை பார்ப்பாய்?

—எனக்கேற்ற வேலை உள்ளது.

—என்ன? சொல் விவரமாய்.

—கடல் குப்பி திறக்கும் வேலை.

—ஹ ஹ—அப்படி ஒரு வேலை உண்டா? கேலியா?

—அம்மா, தங்கள் தகப்பனார் ஜேம்ஸ் மன்னர்; அக்காள் ராணி அன்னாள்! அத்திம்பேர், கடற்படைத் தலைவரான கம்பர்லாந்து பிரபு.

—நீ சொல்லித்தான் தெரியவேண்டுமோ?

—தங்களுக்குத் தெரியாதொன்றைச் சொல்லுகிறேன். கடலில் மூன்றுவகைப் பொருள்கள் உண்டு—(1) அமிழ்ந்தவை (2) மிதப்பவை (3) அலை எற்றிக் கரையில் ஒதுக்கியவை. இம்மூன்று பொருள்களும் கடற்படைத் தலைவன் மூலம் அரசாங்கத்திற்குச் சேரும்.

—கடலில் எதாவது அமிழும், மிதக்கும், ஒதுக்கும். இதிலென்ன அதிசயம்?

—இந்த மூன்றிற்கும் மூன்று உத்தியோகஸ்தர் உண்டு.

—ஒரு கப்பல் புயலால் கவிழ்கிறதென்று வைத்துக்கொள்வோம். அதன் தலைவன், கப்பல் பெயர், அதில் இருந்தவர் பெயர், சாமான் ஜாப்தா, மூழ்கிய இடம் முதலிய பல விஷயங்களை எழுதி ஒரு சுரக்

குடுக்கையில் அடைத்து, பந்தோபஸ்தாகக் கடலில் விட்டுவிடுவான். அக்குடுக்கை மூழ்கிப்போனால், அமிழ்ந்த சாமான்களை எடுக்கும் அதிகாரியைச் சேரும்; மிதந்தால் மிதந்த சாமான்களைச் சேர்க்கும் அதிகாரியை அடையும். கரையில் ஒதுங்கினால் ஒதுக்கப்பொருள் அதிகாரியைச் சேரும்.

—நீ ஒதுக்கப்பொருள் அதிகாரியாயிருக்க விரும்புகிறாயாக்கும்!

—ஆமாம், தங்கள் கிருபையால் அது காலியா யிருக்கிறது. அது அரசாங்கத்திற்கு உபயோகமான வேலை. அந்த வேலைக்காரர் கடல் இலாகாத் தலைவர் மாளிகையிலேயே இருந்து காரியம் பார்ப்பார்.

—சம்பளம்?

—வருஷம் 100 கினி—ஏதோ ஏழை பிழைக்கப் போதும்.

—எப்படிப் போதும்? 100 கினி புகைச்சுருட்டுக்குக்கூடக் காணாதே.

—அது தங்களுக்கு. நீங்கள் ஒரு நிமிஷம் செலவிடும் பணம் எங்களுக்கு ஒரு வருஷ ஜீவனமாகும்.

—சரி, அந்த உத்யோகம் உனக்குக் கிடைக்கும்.

—வந்தனம், வந்தனம்!

ஜோசேன் வேலை செய்துவைத்தான். பர்கில் கடலதிகாரி மாளிகையில் இடம்பெற்றான்.



"வளர்த்த கடா மார்பிலே பாய்ந்தது" என்பார்களல்லவா? அது, பர்கிலுக்கே பொருந்தும். அவன்

நன்றிகெட்ட பதர், பொறாமைப் புல்லன், வஞ்சக நரி, தனக்கு நன்மை செய்த ஜோஸேனிடமே தன் சூழ்ச்சியைக் காட்டத்தொடங்கினான். மெல்ல மெல்ல இராணியை அணுகினான். இங்கே போட்ட கூழைக் கும்பிடுகளை அங்கேயும் திருப்பினான்.

பர்கில்ஃபெத்ரோ கட்டுக்குட்டென்று, நீர் யானை மாதிரி தொந்திபோட்ட கிழவன். அவன் மூளை வெகு சூக்ஷ்மம்; காதுகள் நாற்புற நடப்பைக் கவனித்துக்கொண்டேயிருக்கும். அவன் மூக்கு கழுகின் அலகுபோலக் கூர்ந்து வளைந்திருக்கும். கண்கள் ஆட்களைக்கூர்ந்து பார்க்கும். பொறுமை, அடக்கம், காரியவுறுதி, மட்டு, மரியாதை, பணிவு, கற்பு, இன்சொல் இவையெல்லாம் அவனிடம் உண்டு. என்றாலும் தான் ஏன் இப்படிக் கஷ்டப்படவேண்டும்? இந்த வைப்பாட்டி மகன் ஜோஸேன் ஏன் இப்படிச் சுகபோகங்களில் புரளவேண்டும் என்று நினைத்து நினைத்து அவன் பொறாமை கொள்வான். எப்படியாவது அவளது அழகுச் செருக்கைத் தலைகுனிய வைக்க வேண்டுமென்பது அவன் தீர்மானம். அதே தீர்மானம் ராணி அன்னாள் மனத்திலும் வேரூன்றியிருப்பதை அவன் அறிந்துகொண்டான். மெல்ல மெல்ல வணக்கமாக அவன் இராணியை அணுகினான். இராணியும் அவன் திறமையை அறிந்து தனக்கு உளவாளியாக வைத்துக் கொண்டாள். இனிக் கேட்கவேண்டுமா? பர்கில் இங்கே பூனைமாதிரி யிருப்பான்? அங்கே கோள் சொல்லிப் புலிமாதிரிப் பாய்வான். இராணியுடன்

பலர் இரகசியம் பேசுவர். அவர்களில் ஒருவன் **பார்கில்ஃபெத்ரோ.** "தாங்களே எனது தெய்வம்" என்று மகிழ்ந்து புகழ்ந்து, முகஸ்துதியை வேண்டு மட்டும் அளந்துவிட்டு, ராணியின் உச்சி குளிர வைப் பான் பர்கில். இராணி சொல்வதற்கெல்லாம் தவரு மல் "சபாஷ், ஆமா, நியாயந்தான், பைபிளுக்கு அடுத் தபடி, தங்கள் வாக்கே சத்தியம்," என்று பின்பாட்டுப் பாடுவான். பர்கில் வந்தபிறகு இராணி தன் புகழைச் சொல்ல வேறொருவரையும் தேடவில்லை. இராணி யின் சலுகை கிடைத்துவிட்டால் அரண்மனை ரகசி யம் முழுதுமே கண்ணுக்கு மெய்யாகப் பார்க்கலாம். எங்கேவேண்டுமானாலும் போகலாம். நாளடைவில் பர் கில் அரசிக்கு இன்றியமையாதவனானன். அரசி மனந் தளர்ந்தால், பர்கில் நகைச்சுவை ததும்பப் பேசுவான்; ஜோஸேன் காதல் ரகசியங்களை வர்ணிப்பான். இராணி தளர்வு நீங்கிச் சிரிப்பாள். இங்கே ராணியின் முழுத் தயவையும் பெற்ற பர்கில், அங்கே ஜோஸேனிட மும் தந்திரமாகவே நடந்துகொண்டான். "உன்னைப் போல அழகியும், பதிவிரதையும் உலகிலே இல்லை," என்று அவளை அவன் புகழ்வான். டிர்ரிமோர், விஷயங்களைச் சுவைப்படப் பேசுவான். ஜோஸேன் தனது மனதிலிருப்பதையெல்லாம் கரவாமல் பர்கி லிடம் கொட்டித் தீர்ப்பாள். அவள் இரகசியமாகத் தனது மாளிகையறைக்கு வரும் வழியுண்டு. அது டிர்ரியைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அதன் கதவுச்சாவி ஒன்றை பர்கில்ஃபெத்ரோவிடம் தந்து "நீ எப்போது வேண்டுமானாலும் கதவைத் திறந்து கொண்டு என் அறைக்கு வரலாம்," என்றாள். இவ்

வளவு சலுகை டிர்ரிமோருக்கே அவள் தந்தாள். இனிக் கேட்கவேண்டுமா, படுக்கை யறைமட்டும் போய் டிர்ரி, ஜோஸேன், இராணி—மூவர் ரகசியங்களையும் பர்கில் அறிந்தான். அவன் பக்கா ஒற்றன், இச்சகம் பேசி ஆளைக் கல்லாப்போடுவதில் இணையற்றவன். ஜோஸேன் சிலவேளை லண்டன் ஹங்கர்வில் (Hun-kerville) மாளிகையில் டிர்ரிமோருடன் இருப்பாள்; சிலவேளை டிர்ரியை அழைத்து வந்து, விண்ட்சரில் (Windsor) உள்ள தனது கோர்லியன் லாட்ஜில் இருப்பாள். இரண்டு வீடுகளிலுள்ள அறைகள், பெட்டிகள் அனைத்தையும் பர்கில் திறந்து பார்த்துப் பல விஷயங்களை அறிவான். ஜோஸேன் மாளிகை இராணி அரண்மனையை ஒட்டியிருந்தது. ஒரு தோட்டத்தில் நுழைந்து அவள் அடிக்கடி இராணி யிடம் செல்வாள். அவ்வழியே பர்கிலும் செல்வான். ஜோஸேன் செருக்கும், மிடுக்கும், பிரபுக்கள் கொடு மையும், சேட்டையும் நினைத்து நினைத்து பர்கிலின் நெஞ்சம் கொதித்தது.

“என்ன பகட்டு, செருக்கு, இடம்பக்கூத்து! என்ன உல்லாசம், ஒய்யாரம், அழகுமினுக்கு! இவ ளுக்கு எவ்வளவு கொழுப்பு! விபசாரி மகள்! அரசனை மயக்கி இங்கே இடம்பெற்ற தேவடியாள் மகள்! இவள் ராஜாத்தியாம், அழகுத்தெய்வமாம், இவளுக்கு எல்லாரும் வணங்கவேண்டுமாம்! இவள் எல்லோரை யும் ஏகவசனத்தில் அலட்சியமாகப் பேசவேண்டு மாம்! நான் எவ்வளவோ படித்தேன், உலகைப் பார்த்தேன், பலதிறமை வாய்ந்தேன்—நான் வயது

காலத்தில் பிண்டத்திற்கில்லாமல் அலைந்தேன் இருக்க இடமில்லாமல் தவித்தேன். என்னைப் போன்ற ஏழைகள் இப்படி வருந்துகிறார்கள். இவள் ஒருத்தி வசிக்க எவ்வளவு பெரிய அரண்மனை, எத்தனை ஏற்பாடுகள்! இவளுக்கு எத்தனைச் சேவகர்! வெளியே ஆயிரக்கணக்கான ஏழைகள் ஒரு ரொட்டித்துண்டில்லாமல் பசியால் தவிக்கிறார்கள். இங்கே என்ன விருந்துகள், களியாட்டங்கள்! ஆயிரம் ஏழைகளின் உணவை ஒரு பிரபு விருந்தாக உண்கிறான்! ஆயிரம் ஏழைகள் வசிக்கத்தக்க இடத்தை ஒரு பிரபு அடைத்துக்கொண்டிருக்கிறான்! இவர் கொடுமைகள் சொல்லமுடியா. இந்த ஜேஸைனுக்கு ஒரு அப்பாசு டிர்ரிமோர் அகப்பட்டான். அவனும் வைப்பாட்டி மகன். இருவரும் செய்யும் இடம்பக்கூத்துகள் பொறுக்கமுடியவில்லையே! இவர் காதல் நாடகங்களை நினைத்தால் நெஞ்சு பொறுக்கவில்லை. இவர் பூசும் முகச்சாயவிலையில் பத்து ஏழைகள் வயிறுபிழைக்கலாமே! அந்தோ! இவர் பாவாடை வாலைத் தூக்க ஆண் அடிமைகள் கைகட்டிக் காத்திருக்கிறார்கள். அந்தோ! அந்த வால் எட்டு ஏழைகளின் ஆடைக்காகுமே! ஒரு வேலையும் செய்யாமல் இவர்கள் அமுல் செலுத்தவேண்டுமாம். என்னைப்போன்ற ஏழைகள் சிலர் அடித்தொண்டு செய்து பிழைக்கவேண்டுமாம்! கொஞ்சம் வணங்கினால் முதுகில் மூட்டையேற்றுகிறார்கள்! மாடு மாதிரி வேலை செய்யச்சொல்லிப் பிச்சை போடுவதுபோல் ஏதோ கை உதறுகிறார்கள். அதுதான் இவர் தரும் சன்மானம். இவர்கள் மட்டும்

பொன்னும் மணியும் முத்தும் பூண்டு சதை குலுங் காது சுகபோகங்களில் புரள வேண்டுமாம். நாங்கள் நெற்றி வேர்வை நிலத்திற் சொட்டச் சொட்டப் பாடு பட்டும் பட்டினி கிடக்கவேண்டுமாம். இவர் செல் வச் செருக்கு மாந்தரை ஏழையாக்குகிறது! அடிமை யாக்குகிறது; நாய்க்குப்போடும் ரொட்டித்துண்டைப் போட்டு நம்மை இவர்கள் விலைக்கு வாங்குகிறார்கள். புளிச்சேப்பம் விடும் பிரபுக்களுக்குப் பொழுது விடிந் தால் விருந்துதான். இவர்களிடம் நாம் கை கட்டி வணங்கவேண்டுமாம். இவர்கள் தரும் ஆடை, உணவுகளை எதிர்பார்த்து நாய் மாதிரி நாம் பிழைக்க வேண்டுமாம்.

ஜோஸேன் —இவள் யார்? இவளுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? மனிதனைப் பிடித்த காமவெறியின் குட்டிதானே இவள். இவளும் அதே வெறிகொண்டுதானே கட்டின்றித் திரிகிறாள்? இவள் தயவை எதிர்பார்த்து, என்னைப்போன்ற ஏழை கள் பிழைக்கும்படி விதி எழுதியதே! அதைத்தான் நோகவேண்டும். முட்டாள்கள் இவள்மேற் கவி பாடித் துதிக்கின்றனர்! இவள் புன்னகையில் விழுந்து எத்தனை பேர் மடிகின்றனர்! ஆ! இவள் இடம்பக் கூத்தாடும் பணம் யாருடையது? பொதுஜனங்கள் தரும் பணத்தையல்லவா இப் பிரபுக்கள் இப்படி 'தாம் தூம்' என்று செலவிடுகின்றனர்?

"வா வா செல்வச் செருக்கே, உன்னை மட்டம் தட்டுகிறேன்" என்று பர்கில் பெத்ரோ உள்ளே கொதித்துக் கொண்டிருந்தான். 'ஜோஸேன் அழகுச்

செருக்கையும் பணச் செருக்கையும் அடக்க வழி என்ன?' என்று எப்போதும் யோசித்துக் கொண்டே யிருந்தான். இராணியும் சேர்ந்ததால் அவன் கை வலுத்தது. சரியான சமயமும் சந்தர்ப்பமும் வாய்க்கும், தனது வயிற்றெரிச்சல் தீரும் என்று பர்கில் உறுதி பூண்டிருந்தான். இராணியும் ஜோஸேனும் பேசும் போது இவனும் இருப்பான்; அவர் மகிழும்படி இடையிடையே வணக்கமாகச் சில வார்த்தைகளைச் சொல்வான். இப் பெண்கள் தனியே பேசும்போது ஒளிந்து கேட்டுத் திடீரென்று அவர் முன் தோன்றுவான். தோட்டத்தில் இருவரும் பேசுவர். பர்கில் திடீரென்று தோன்றி மிகவும் வணக்கத்துடன் அவர் சம்பாஷணைக்கு உற்சாகமளிக்கும் ஒரு வார்த்தையைச் சொல்லுவான். பர்கில் அறியாத ரகசியம் கிடையாது என்று இருவரும் நினைக்கும்படி விஷயங்களை இனிமையாகச் சொல்லுவான். அன்னுளுக்கு 41 வயது; அவள் அழகெல்லாம் பூச்சு வேலைதான்; ஜோஸேனுக்கு 23 வயது. அவளுக்கு இயற்கையழகுடன் மினுக்கழகும் உண்டு. எனினும், பர்கில் 'அதெல்லாம் வெறும் பகட்டு; தங்கள் வனப்பும் அழகும் இணையற்றன' என்று இராணியைப் புகழ்வான். டிர்ரிமோரின் வனப்பையும், அலங்காரத் தோற்றத்தையும், ஜோர் நடையையும் பெண்களெல்லாம் புகழ்வர். அன்னுளுக்கு இப் புகழ்ச்சி பிடிக்காது. அதையறிந்து பர்கில் "எல்லாம் சுத்த வெளிப் பகட்டு" என்று இராணியை ஆமோதிப்பான்.

ஒரு நாள் பர்கில் பெத்ரோ மனமகிழ்ந்து கனி

கூத்தாடினன். "நமது காரியம் ஜயம்!" என்று ராணியிடம் ஓடினன். கடற்கரையிலிருந்து ஏதோ ஒன்று அவனுக்குக் கிடைத்தது. இராணியிடம் அதைக் காட்டினன்.

அவள் அன்று முதல் வின்ஸர் அரண்மனையில், தனது தனி அறையில், பர்கில் ஃபெத்ரோவுடனும், இரண்டொரு காரியஸ்தருடனும் கலந்து, ஏதேதோ யோசித்தவண்ணம் இருந்தாள். அந்த ரகசியம் அம்பலத்திற்கு வருமுன்பு ஜோஸேன்-டிர்ரிமோரைத் தொடர்வாம்.

## 34. குஸ்தி.

உண்ண உடுக்க இருக்கக் கவலையில்லை; "பொழுது போகவில்லையே" என்னும் கவலையே சீமாட்டிகளுக்கு மிகுதி. அவர் அதற்காக, முன் சொன்ன பல கழகங்களுக்குச் சென்று விநோதங் காண்பர். ஜோஸேன் அடிக்கடி இக்காட்சிகளுக்குச் செல்வாள்; பெரும்பாலும் டிர்ரிமோருடனே தனது அலங்கார வண்டியிற் செல்வாள்.

லாம்பெத்தில் (*Lambeth*) காண்ட்ரபரி ஆர்ச் பிஷப்பின் அரண்மனை ஒன்றுள்ளது. அதில் ஒரு பெரிய புத்தகசாலையும் உண்டு. லாம்பெத்தில் அடிக் கடி குஸ்திப் பந்தயம் நடக்கும். ஒருநாள் இரண்டு புகழ்பெற்ற பயில்வான்கள் குஸ்தி செய்யப்போவதாக அழைப்பு வந்தது. ஒருவர் ஃபெலெம் (*Phelem*), ஐரிஷ்காரர். மற்றவர் ஹெம்ஸ்கைல் (*Helmsgail*) ஸ்காடிஷர். பயில்வான்களின் அபிமானியாகிய டிர்ரிமோர் இந்தக் குஸ்திப் பந்தயம் பார்க்கக் கிளம்பி

ளுன். குதிரைவீரன் போல உடுப்புகளை யணிந்து, அவனுடன் ஜோஸேன் புறப்பட்டாள். கோதாவைச் சுற்றியுள்ள மேடையில் ஒரு சிறப்பான இடத்தில் இருவரும் அமர்ந்தனர். குஸ்தியைப் பார்க்கப் பல பயில்வான்கள் வந்திருந்தனர். அவர்கள் குஸ்தி, சிலம்பம், குத்துச்சண்டை, காலேச் சண்டை, பாரத் தூக்கல், கல் தாங்கல் முதலிய பல பீம வேலைகளிற் பெயர்பெற்றவர்.

இரண்டு பயில்வான்களும் சல்லடங்கட்டி, கோதாவில் நின்று தோள் கொட்டிப் பஞ்சாக் கொடுத்தனர். ஹெம்ஸ்கைல் 19-வயது காளை, இரும்புக் கையன், மண்டையை உடைப்பான், விழியைப் பெயர்ப்பான்! அவனும் ஒரு பந்தயத்தில் அடிபட்ட அடையாளம் நெற்றியில் இன்னும் உள்ளது.

அவன் எதிராளி ஃபேலெம் ஆறடி உயரம்; பிடிப்பிடியாகச் சதையிறுகிய திடசரீரி. அவன் ஒரு குத்துவிட்டால் இரத்தம் பீறும். இருவருக்கும் சிஷ்யர்கள் உண்டு; அவர்களும் பயில்வான்கள்.

கொஞ்ச நேரம் இருவரும் பிடி கொடுப்பதும், விலகிக் கோதாவைச் சுற்றி வருவதுமாயிருந்தனர். பிறகு, ஹெம்ஸ்கைல் ஃபெலெம் மீது புலிபோற் பாய்ந்தான். குஸ்தி மும்முரமானது. இருவரும் கட்டிப் புரண்டனர், குத்தினர், தசைகளைப் பிசைந் தனர், எழுந்தனர், விழுந்தனர், சாரி திரிந்தனர். ஹெம்ஸ்கைல் மற்றவனைக் குத்தி வீழ்த்தினுன். ஜனங்கள் ஆரவாரித்தனர். எழுந்தான் ஃபெலெம்;

சம்மட்டிபோலக் கைகளை ஓங்கிக் குத்துவைத்தான். அவன் மண்டையில் போட்டான்; இவன் மூக்கில் குத்தினான். ஃபெலெம் முகம் இரத்த மொழுகியது. ஜெம்ஸ்கைல் அவனைத் தூக்கியடித்து முதுகில் மண் காட்டிப் பந்தயத்தை வென்று பணமுடிப்புப் பெற்றான். எல்லாரும் அவனைப் புகழ்ந்து ஆரவாரித்தனர். அத்துடன் குஸ்தி முடிந்தது. ஜோஸேன், டிர்ரிமோர் கையைப் பிடித்துக்கொண்டே வெளியே வந்தாள்.

—பலமான அடி—நல்ல குஸ்தி!

—இருந்தாலும் இன்னும் மனத்திற்கு உற்சாகம் பிறக்கவில்லை—தமாஷாக ஏதாயினும் வேண்டும்.

—அதற்கு இளிச்சவாயனிடம் போகவேண்டும்.

—இளிச்சவாயனா? யாரது?

—வந்திருக்கிறான் லண்டனுக்கு இளிச்சவாயன். பார்த்தவுடனே கலகலவென்று சிரிப்பாய்........

வா, போவோம்........

## 35. க்வின்ப்ளேன்

'இளிச்சவாயன் வருகிறான்' என்றால் 'நான் முந்தி, நீ முந்தி' என்று ஜனங்கள் அதிசயமாகக் கூட்டம் கூடுவர். இளிச்சவாயன் யார்? கொம்ப்-ரா-சி-யர் இண்டாடவிட்டு, போர்ட்லாந்துப் பாறையில் அவஸ்தைப்பட்டு, முடிவில் உர்ஸஸ் ஆதரவைப்பெற்ற கமது க்வின்ப்ளேனே—இளிச்சவாயன். பாருங்கள் அவன் முகத்தை! அதைப் பார்த்தவுடனே கலகல

வென்று சிரிப்பு வருகிறது. எப்படிப்பட்ட கோபக் காரனும், உம்மணாமூஞ்சியும் அந்த முகத்தைப் பார்த் தால் "பக்"கென்று சிரிப்பான்; மனந்தளர்ந்தவன் புதிய மகிழ்ச்சி பெறுவான்; சிடுசிடுக்கும் முகமும் படபடவென்று சிரிக்கும். அத்தகைய முகத்தை குவின்ப்ளேனுக்கு அளித்தது யார்? இயற்கையா? அல்ல, கொம்ப்-ரா-ஷி-கரே. இரண்டு வயதுக் குழந் தையை வாங்கி அதன் முகத்தை இப்படி விகாரப் படுத்தினர் அக்கொடியர். பச்சைக் குழந்தை முகத் தைத்தான் இந்தமாதிரி ஆக்கமுடியும். வாய், காது வரையில் விரிந்திருக்கிறது; உதடுகள் சேருவதில்லை; இரண்டு வரிசைப் பற்களும் வெளியே தெரிகின்றன. மூக்கு உயர்ந்து துவாரங்கள் அகன்றுள்ளன. பொங்கி மகிழ்ந்து, வியந்து சிரிக்கும்போது ஒருவர் முகம் எப்படியிருக்குமோ அப்படி எப்போதும் இருக்கும் க்வின்ப்ளேன் முகம். அழுதாலும், சினந்தாலும், வெறுத்தாலும், கடுத்தாலும்—அவன் மனவுணர்ச்சி என்னவானாலும் சரி—வாய் மட்டும் இளித்துக் கொண்டேயிருக்கும். இந்தமாதிரிக் குழந்தைப் பருவத்திலேயே அவன் முகத்தை ஆக்கிய கொம்ப்- ரா-ஷி டாக்டர் வெகு சாமர்த்தியசாலி. குவின்ப் ளேன் ஒருவனுக்கே இவ்வளவு பரிபூரணமான இளிச்சவாய் அமைந்தது.

இக் குழந்தையைக் கோமாளியாகப் பழக்கி, தெருக்களில் வேடிக்கை காட்டிப் பிழைக்கவே கொம்ப்-ரா-ஷி-கர் இவ்வாறு செய்தனர். அதற்கு வேண்டிய மற்ற ஹாஸ்யப் பயிற்சிகளையும் அவனுக் குத் தந்தனர். கொஞ்சகாலம் அவனைக் கொண்டு

பணம் சம்பாதித்தும் பிழைத்தனர். அவனைப் பார்த்தவுடனே மனத்துயர் மறந்து தம்மை யறியாது மாந்தர் நகை கொப்புளித்தனர். ஆதலால், "இளிச்சவாயனைக் காணவேண்டும்" என்று பலர் ஆவலாயிருந்தனர். அவன் பேச்செல்லாம் நகைச்சுவை கொட்டும். ஆளுக்கேற்றபடி, சமயத்திற்கேற்றபடி, ஹாஸ்யரசத்தைப் பயன்படுத்தும் புலமையை அவன் இயற்கையிலும், பயிற்சியாலும் பெற்றிருந்தான். முகந்தான் இளிச்சவாய்; மற்ற அங்கங்களெல்லாம் அவனுக்கு அழகாகவும் உறுதியாகவும் இருந்தன. அவன் தலைமயிரை ஏதோ மருந்துபோட்டு வளரவொட்டாது செய்துவிட்டனர்.

பையனைப் பார்த்ததுமே "இன்னமாதிரி, இக் காரியத்திற்காக இக் குழந்தையை இளிச்சவாயனாக்கியிருக்கிறார்கள்," என்று உர்ஸுலஸ் அறிந்துகொண்டான்; ஒரு தகப்பனைவிட அதிக அன்புடன் அவனைப் பேணினான். அவனுக்கு எழுதப்படிக்கச் சொல்லிவைத்தான். ஆங்கிலத்தில் அவனைப் புலவனாக்கினான். சங்கீதமும் நன்றாகப் பயிற்றினான். தானும் விகடகவியாதலால், ஹாஸ்யக் கலையில் பூரணம்பெறச் செய்தான். க்வின்ப்ளேன் அறிவாற்றல்களிற் சிறந்து இப்போது (1705) 25-வயதுக் காளையாயிருக்கிறான்.

## 36. தயா

சாவின் வாயில் விழாமல் அவன் காப்பாற்றி வந்த கைக்குழந்தை தயா, இப்போது 16-வயது யுவதியாயிருக்கிறாள். அவளைத் தன் மகள்போலப் பரிவுடன் பேணினான் உர்ஸுலஸ். க்வின்ப்ளேன் தயாவை

உயிர்போல நேசித்தான். இருவருக்கும் உடலே இரண்டு, உயிர் ஒன்ருயிருந்தது. இருவர் உள்ளமும் ஒன்றுபட்ட தூய அன்பினுல் துடித்தது.

தயாவுக்குக் கண்ணில்லை; க்வின்ப்ளேனே அவளுக்குக் கண்ணுயிருந்தான். "என் கண்ணு" என்று அவள் அவனை அழைத்தாள். தன்னை அந்தச் செல்லறில் பனிப்பாறையினின்றும் காப்பாற்றிய ரக்ஷகன், கண்ணிழந்த தனக்குக் கண்ணுயிருந்து காத்த உபகாரி, தன்னை, இணைபிரியாது நேசிக்கும் நண்பன், என்று தயா க்வின்ப்ளேனைக் காதலித்தாள். அவனுடைய பயங்கரமான முகத்தை அவள் பார்க்க விழியில்லை. "தயா, என் முகம் அவலக்ஷணக் களஞ்சியம். அதைப் பார்த்து எல்லாரும் சிரிக்கிருர்களே" என்பான் க்வின்ப்ளேன். "உன் அழகு மன்மதனுக்கும் இல்லை. என் அழகா, என் அன்பா, என் ரக்ஷகா, என் கண்ணுளா" என்று தயா அவனைக் கொஞ்சுவாள். அவன் தலையை வாரிவிடுவாள். அவன் கன்னத்தைத் தடவிப் பார்ப்பாள். அவனை விரும்பிய பெண் ஒருவளே; அவனை இவ்வளவு அன்புடன் நோக்கியுருகிய பெண்—இக் கண்ணில்லாத் தயாவே. அவளைக் காதலித்தவன் ஒருவனே—இந்த இளிச்சவாயனே! இருவரையும் மகார்போலப் பேணிய தந்தையும் தாயும் ஒருவனே—உர்ஸூஸ். "ஓமோ, நீ மாமா அல்லவா! என் குழந்தைகள் எப்படியிருக்கிருர்கள் பார். க்வின்ப்ளேன் மேதாவி, சொல்லிக் கொடுத்ததை எளிதில் அறிந்துகொள்ளுகிருன். நல்ல படிப்பாளியாய் விட்டான். முதல்தரமான விகடகவி;

அவனைப் பார்த்தாலும் கேட்டாலும் சிரிப்புப் பொங்கும்; அவன் புத்திசாலி, அதிட்டசாலி. என் தயாளைப் பார்த்தாயா! கண்ணில்லை; அறிவும் அழகும் அதிகம். அவள் நன்றாக ஆங்கிலம், லத்தீன் பேசுவாள். இனிமையாகப் பாடுவாள். எதையும் நுட்பமாக அறிவாள். அத்துடன் அவளுக்குச் சங்கீதமும் வாத்தியமும் கற்றுக்கொடுத்திருக்கிறேன். பல நாடகங்களை அவளும் அவனுடன் நடிப்பாள். ஆமோ, நான் ஓரியாயிருந்தேன்; வயது காலத்தில் இரண்டு மக்கள் வந்து எனக்கு ஆறுதலும் இன்பமும் அளித்தனர். இவர்களால் என் அன்பு பல மடங்கு அதிகமானது. சிறு வண்டியில் நீ, நான், இந்தக் குழந்தைகள் ஆகிய நான்கு பேர் வசித்தோம். எப்படியோ குழந்தைகள் தலை தூக்கிவிட்டார்கள். க்ளின்ப்ளேனுக்கு நல்ல ஜாதகம். அவன் முகராசி [illegible]; அவன் எல்லாரையும் வசப்படுத்துவான்; [illegible]வசப்படுத்துவான்; அவன் பெயர் கேட்டதும் [illegible]ங்கள் எப்படி ஓடிவருவார்கள் பார். நமக்கு இனி அதிட்டந்தான்—" என்று உர்ஸஸ் தனது நண்பனான ஓநாயிடம் எல்லாம் சொல்வான். அதுவும் "[illegible], ஊள்" என்று அனைத்தையும் கேட்டு ஆமோதிக்கும்.

## 37. காதல்

"நீ யின்றி வாழ்வில்லை" என்பாள் தயா! "நீ யின்றி உயிரின்பமில்லை" என்பான் க்வின்ப்ளேன். இருவர் அன்பும் காதலாக மலர்ந்தது. இருவரும் உள்ளத்தில் ஒருவரானர். இருவர் மனமும்

ஒரே கனவு கண்டது—தாம் காதலராக வாழும் கனவே. இருவர் பேச்சிலும், நடையிலும், நட்பிலும் ஒரு அழகுக்கலை தவழ்ந்தது. இருவர் நேச வாழ்வும் விண்ணின்பம்போல் இனித்தது. இருவரும் தங்கள் குறையை மறந்தனர். குவின்ப்ளேன் விழிகளே தனது விழிகளெனக் கொண்டாள் தயா. தயாவின் அழகே தனது முகத்தழகெனக் கொண்டான் காதலன். இவ்விதமாக இருவர் குறைகளும் நிறைவு பெற்றன. இளமையும் பொலிவு பெற்றது; இருவர் புன்னகையும் காந்த சக்திபெற்றன. இருவர் உள்ளத்திலும் ஒரு புதிய துடிப்பெழுந்தது. ஆயினும் நாணம் தலைப்பட்டு, அவர் பேச்சை அடக்கியது. ஒரு கொம்பில் இருமலர்கள்போல, உர்ஸூஸ் அன்பில் இருவரும் வளர்ந்தனர். இருவருக்கும் 10-வயது வித்தியாசம். இருவரும் நீண்டகாலம் ஒரே படுக்கையில் உறங்கினர். ஆனால், ஒருநாள் "அப்பா, நான் உன்னுடன் கீழே படுக்கிறேன், தயா பெட்டிமேல் படுக்கட்டும்" என்றான் க்வின்ப்ளேன். இருவருக்கும் நாணம் தலைப்பட்டது. க்வின்ப்ளேன் பக்கத்திலில்லாமல், தனது பாதி உடலை இழந்ததுபோல் உணர்ந்தாள் தயா. க்வின்ப்ளேன் குளிர்காலம் கீழேயும், வெயிற்காலம் வெளியிலும் படுப்பான். எனினும், தயாவுடன் உறங்கும் இன்ப நாளையே அவன் மனம் எதிர்பார்த்து ஏங்கியது. இருவர் காதலும் முதிர்ந்தது.

## 38. கலியாணம்

இக்காதலர் மனத்தையும், நடையையும் உர்ஸூஸ் கவனித்து வந்தான். மனத்துள், "உம்,

கடக்கட்டும் காதல்—இருவரையும் ஒரு நாள் கட்டிப்போடுகிறேன்!" என்றான். உர்ஸ-ஸ் க்வின் ப்ளேனிடம் காதலைப்பற்றி வேடிக்கையாகப் பேசத் தொடங்கினான் :

உர் : கடவுள் காதலை எப்படிப் பற்றவைக்கிறார் தெரியுமா? கேள். பெண்ணைக் கீழே வைக்கிறார்; அவளுக்கு மேலே பேயை ஏவுகிறார்; பேய்க்கு மேலே ஆளைப்பொருத்துகிறார். ஒரு தீக்குச்சி (ஒரு கண் பார்வை)—போதும்—பக்! காதல்பற்றிக் கொண்டெரியும்.

க்வின் : காதலுக்குக் கண்பார்வை வேண்டாமே.

உர் : முகக்கண்ணே கண்ணு; அகக் கண் ஒன் றுள்ளதல்லவா? பயலே, உன் குட்டு வெளியே தெரி யட்டும். கோழி வெளிப்படையாகக் காதலிக்கிறது.

க்வின் : பருந்து மறைமுகமாகக் காதலிக்கிறது.

உர் : பயலே அதிகம் நெருங்காதே; தள்ளியிரு; மனத்தை அடக்கு; பேய்க்கு இடங்கொடாதே. உன் அவலக்ஷணத்தையும் அவள் அஷ்டலக்ஷணத் தையும் நினை. மலர்முகம், பவழவாய், மேகம்போலக் கூந்தல், நல்ல சிகப்பு, வனப்பு, அன்ன நடை, மின் னிடை இனிய குரல்—தயா கட்டழகி தான். ஆயி னும் அவள் யுவதி; நீ யுவன். மனத்திற்கு வரம்புமீறி இடங் கொடுக்காதே.

தனியாயிருக்கும்போது "தயா, நீ பெரியவ ளாளுய்; அவன் வாலிபக் காளை; அதிகமாக அணுகாமல் தள்ளியிரு; ஆசையை அடக்கு"

என்பான். எப்படி யடக்குவது? ஒன்றாய் வளர்ந்து சேர்ந்து பாடி, பேசி, ஒன்றான அன்பை எப்படிப் பிரிப்பது? கிழவன் உபதேசம் இவ்வாலிபர் காதற்கனலில் நெய் வார்த்தது போன்றது. அவனில்லாத சமயம் இருவரும் நெருங்கி யமர்வர். ஒருநாள் உணர்ச்சி மேலிட்டு, தயாவின் பூங்கையை க்லின்ப்ளேன் முத்த மிட்டான். "ஆ! என்ன சுகம்! இன்னொரு தடவை," என்றாள் தயா. இன்னொரு தடவை முத்தமிட்டான் க்லின்ப்ளேன். நீயே என் கண், கண்மணி, கதிரொளி; உன் கரமே இந்த அனாதையைக் காத்தது. என்னைக் காத்த கரமலருக்கு ஒரு மலர் சூட்டுகிறேன்" என்று தயா, க்லின்ப்ளேன் கையை முத்தமிட்டாள். இருவருக்கும் வளர்ந்தோங்கும் காதலை இனித் தணிக்கவோ அடக்கவோ முடியாதெனக் கண்டான் உர்ஸ—ஸ். ஒரு நாள் இருவரும் தனியே அமர்ந்து தங்கள் உள்ளக் கனவைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். திடீரென்று உர்ஸ—ஸ் வந்தான்.—" சரி, சரி, சரி, நடக்கட்டும்! பயலே இரு; உனக்கு அவளைக் கலியாணம் பண்ணுகிறேன்" என்றான்.

தயா: அதெல்லாம் முன்னமே ஆயிற்றே.

உர்: சரி—சரி—சரி—ச—ரி! சுபமஸ்து!

## 39. பச்சை வண்டி

க்லின்ப்ளேன் வந்த பிறகு உர்ஸ—ஸ் எல்லா வகையிலும் செழுமையுற்றான். இனிச்சவாயன் முகமும் பேச்சும் மேன்மேலும் ஜனங்கள் மனத்தைக் கவர்ந்தன. பணம் குவிந்தது. உர்ஸ—ஸ் கையும்,

மனமும் தாராளம். "பணம் வருகிறது, சுகமாயிருப்போம்" என்று கருதினன். அவனும், ஓமோவும் முறைமை யெய்தினர். குழந்தைகள் சிறுவராயிருக்கும்போது, ஓமோவுடன் தானும் வண்டியிழுத்தான். சரியான வயது வந்ததும், "அப்பா நீ உள்ளே யிரு" என்று க்வின்ப்ளோன் வண்டியிழுத்தான். பணம் வந்ததும் உர்ஸுஸ் ஒரு பெரிய நாலுசக்கர வண்டி வாங்கினன். அதில் ஆறு பேருக்கும், சாமான்களுக்கும் போதிய இடம் செய்தான்; அவ் வண்டியை இழுக்க இரண்டு குதிரைகளை வாங்கி யிணைத்தான். வண்டிக்குப் பச்சை நிறமடித்தான். வண்டிக்கு இரண்டு ஜன்னல்களுண்டு; ஒரு கதவுண்டு. கூண்டு மேல் புகைப்போக்கியுண்டு. இந்த வண்டியை உர்ஸுஸ் ஓட்டினன்; பாண்டு வாத்தியத்துடன் பச்சை வண்டி கிராமங்களில் நுழையும். "இளிச்சவாயன் வந்துவிட்டான்!" என்று திரளான ஜனங்கள் கூடுவர். மாகாணத்தில் ஒரு பெரிய மைதானத்தில் வண்டியை நிறுத்தி உர்ஸுஸ் முன்னுரை பேசுவான். பிறகு இளிச்சவாயன் வருவான். கூட்டம் முழுதும் மதி கண்ட கடல் போலே சிரிப்பலைவீசிப் பரவசப்படும். இளிச்சவாயன் பேசினல் போதும்; மனக் கவலை பறந்து போகும். உள்ளும் புறமும் நகை பொங்கும். பணம் வந்து குவியும். முதலில் பார்திங், பிறகு பென்ஸ், பிறகு ஷில்லிங் ஷில்லிங்காகப் பணம் வரத் தொடங்கியது.

பணம் வரவர உர்ஸுஸ், க்வின்ப்ளேனுக்கு வேண்டிய சௌகரியங்களைப் பெருக்கினன். வண்டியை இன்னும் விசாலமாக்கி ஒரு சிறு நாடகக்

கொட்டகைபோல் அமைத்தான். முன்னே அவனே குழலூதி வந்தான். இப்போது பாடவும், வாத்தியம் வாசிக்கவும் சற்றுக் காரியங்கள் செய்யவும் இரண்டு பெண்களை அமர்த்தினான்; இவரும் இளம் பெண்கள். இருவருக்கும் உர்ஸஸ் புதுப் பெயரிந்தான். ஒருவள் பெயர் ஃபோபே (Phoebes) அவளே அனைவருக்கும் சமைத்துப்போட்டாள்; மற்றொருவள் வீனஸ் (Venus). இவள் வண்டியைச் சுத்தம் செய்து சாமான்களைக் கோவையாக அடுக்கி வைத்தாள். இருவரும் தயாவுக்கு வேண்டிய சிஷ்ருஷைகளெல்லாம் அன்புடன் செய்தனர். இவர்கள் தயாவுக்கு அழகாகச் சிங்காரித்தனர். வண்டிக்குள் இருந்து பழக்கப்பட்டதால், தயாவுக்கு அதிலிருக்கும் சாமான்களெல்லாம் தெரியும். எது வேண்டுமானாலும் எடுத்துக்கொடுப்பாள்.

தனது புத்தியெல்லாம் செலவிட்டு உர்ஸஸ் குடித்தனத்திற்கேற்ற வீடாகவும், க்வின்ப்ளேனுக்கேற்ற அரங்காகவும் இந்த வண்டியை அமைத்தான். அதில் சமயல்றை ஒரு மூலையில் இருந்தது; ஒரு பக்கம் திரைபோட்டுத் தயாவும், மற்றிரு பெண்களும் சௌக்கியமாக இருந்தனர். இன்னொருபுறம் உர்ஸஸ் க்வின்ப்ளேன் இருவரும் இருந்தனர். இடையே நாடகமேடை விசாலமாக அமைந்திருந்தது. ஆட்டம் நடக்கும்போது சமயலறையில் சங்கீதம் முழங்கும். பக்க அறைகளில் வேடம் புனைந்து வந்து நடுவேயுள்ள அரங்கில் ஆடுவர்.

உர்ஸஸ் நாடகக் கலையிலும், காட்சி ஜோடிப்

பிலும் கைதேர்ந்தவன், கவி, பாடகன். அவனே நகைச்சுவை ததும்பும் சிறுசிறு நாடகங்கள் எழுதி, க்வின்ப்ளேன், தயா இருவருக்கும் பழக்கி வைத்தான். உணர்ச்சிக்கேற்ற காட்சிகளையும், காட்சிக்கேற்ற நடிப்பையும் அவன் அரங்கில் அமைத்தான். 16, 17-வது நூற்றாண்டில் இந்தமாதிரி அரங்கு வண்டிகள் இங்கிலாந்திலும் பிரான்ஸிலும் இருந்தன. தெருக்கூத்தருக்கு அவை உதவின. வண்டியை ஓரிடம் ஊன்றவைத்து, கதவைத் திறந்து, அதையே அரங்கமாக்கி இரவில் ஆடத்தொடங்குவர். மழை, பனி இல்லாதபோது திறந்த வெளியில் கூத்து நடக்கும். எல்லா ஜனங்களும் வண்டிக்கு முன்னே அணியணியாக வீற்றிருந்து பார்ப்பர். மழைபெய்தால் விசாலமான ஒரு ஓட்டல் முன்றிலில் அரங்கை அமைத்துக் கூத்து நடத்துவர். கட்டிடங்களுள் நடக்கும் கூத்திற்கு வரும்படி அதிகம்.

உர்ஸூஸ் எழுதுவான், பயிற்றுவான், நடிப்பான், பாட்டுப் படிப்பான், குழலும் பிடிலும் வாசிப்பான், சமைப்பான், க்வின்ப்ளேனுடனும் தயாவுடனும் இனிமையாகப் பேசுவான், விகடம் செய்வான்— கிழவனுக்கு ஒரு புதிய தெம்பும், திறனும், வாலிப உற்சாகமும் வந்தன! வீனஸ், ஃபோபே இருவரும் பாண்டி ஊதுவர், பாடுவர். ஓமோவும் பல வேடிக்கை காட்டும். உர்ஸூஸ் கரடித்தோல் போர்த்து ஓமோவுடன் விளையாடி எல்லாரையும் நகைப்பூட்டுவான். உர்ஸூஸ் லத்தீனிலும், ஸ்பானிய மொழியிலும் சமயத்திற்கேற்ற துக்கடாக்கள் புனைந்து பயிற்று

வான். இந்தியாவில் ஆரியமொழிக்குள்ள மதிப்பு அக்காலம் லத்தீனுக்கு இருந்தது. ஆங்கில டாமுயி கள் ஸ்பானிய மொழி பேசினர்.

## 40. இருள் கடிதல்

உர்ஸுஸ் சிறு நாடகங்கள் பல எழுதினன். அவற்றில் உர்ஸுஸ் ஓர்ஸுஸ் என்ற நாடகமும், அதைக்காட்டிலும் இருள் கடிதல் என்ற நாடகமும் புகழ்பெற்றவையாம். "இருள் கடிதல்" நாடகக் காட்சி இதுவே:—காரிருள்; காடு; அதில் ஒரு ஓநாயும் (ஓமோ), கரடியும் (உர்ஸுஸ்) திரிகின்றன. இருள்—மனவிருள், விலங்குகள் மனத்தின் காமக் குரோதாதிகள். ஒரு மனிதன் தோன்றுகிறான். அவனை ஓநாயும், கரடியும் வேகமாகத் தாக்குகின்றன, மிரட்டுகின்றன. மனிதன் தலைமயிரால் முகத்தை மறைத்துக்கொண்டிருக்கிறான். விலங்குகளுடன் போர்புரிகிறான். விலங்குகள் அவனை வீழ்த்தி மேலே ஏறுகின்றன. மனிதன் "தெய்வமே துணை செய்!" என்று கதறுகிறான். அடி, உதை, குஸ்தி எல்லாம் நடக்கின்றன....மனிதன் சோர்ந்து அலறுகிறான். பிறகு எங்கும் மௌனம் பரவுகிறது. இருளில் ஒரு இனிய பாட்டுக் கேட்கிறது. அத்துடன் ஒரு ஜோதிர் மயமான தேவதை (தயா) தோன்றுகிறாள். அமைதி, அழகு, இனிமை, மென்மை, அருள் அன்பு வடிவாகவே தயா விளங்குகிறாள். அதுவே உண்மைக் காதலின் வடிவம். மிருகக் காமம் அவனை வதைத்துக் கீழே தள்ளியது. உண்மைக் காதல் என்னும் இனிய தேவதையின் காட்சியோ மனிதனுக்குப் புதிய பல

மணிக்கிறது. தயா இவ்வாறு இனிமையாகப் பாடி, சோர்ந்து வீழ்ந்த காதலனை எழுப்புகிறாள் :

இறைவனை நினைந்தே
முறையிடு மனமே
இருளிடர் விலகும்
அருளொளி இலகும்!
வருந்தியுன் பிழையைத்
திருந்திடு மனமே,
திருந்திய மனமே
பொருந்திய சுவர்க்கம்!
அழித்துன தயர்வை
விழித்தெழு மனிதா!
புலர்ந்தது காலை
மலர்ந்தது சோதி
ஒழிந்தது துன்பம்
விளைந்ததுநல் லின்பம்!
ஏறுபோல் மனிதா
வீறுகொண் டெழுவாய்!
தைரியங் கொண்டால்
வைரிகள் வீழ்வார்!
எழுந்திரு மனிதா,
எழுந்திரு மனிதா!

இப் பாட்டு மனிதனுக்குப் புதிய ஆற்றலளிக்கின்றது. மனிதன் சிங்கம்போ லெழுந்து கம்பீரமாகப் பாடிக்

கொண்டே காமம், குரோதம் ஆகிய இரண்டு விலங்கு களையும் மிதித்து அடக்கி வெல்லுகிறான் :

நூறு சிங்கம்போல்
வீறுபெற்றெழுந்தேன்
பயமினியில்லை
ஜயம் ஜயம் ஜயமே!
பேராசைப் பேயே
போராசைப் பேயே,
போ சினப்பேயே!
போ மனப் பேயே!
காதலைக் கண்டேன்
சாதலுந் தவிர்ந்தேன்!
அருளொளி கண்டேன்
இருளினி யுண்டோ?
கருணையின் உருவே
குருமணி நீயே!
உனதுளம் ஆவேன்
எனதான்மத் தேவே
இனிப்பிரிவில்லை
தனிப்பெருஞ் சுடரே!

தீர புருஷன் தோள்மேல் பெண் தெய்வம் கை போட்டு நிற்கிறாள். உடனே பளிசசென்று ஒரு ஒளி மனிதன் முகத்திலும் தேவதையின் முகத்திலும் வீசு கிறது. சபையோரெல்லாம் 'கொல்'லென்று விழுந்து விழுந்து சிரிக்கின்றனர். கை தட்டுகின்றனர் எழுந்து கூத்தாடுகின்றனர்—என்ன விசேஷம்! இளிச்ச வாயன் முகம் முழுதும் தெரிகிறது—அவன் வாய் பிறைமாதிரி ஒரே சிரிப்பாகப் பொங்குகிறது!

## 41. க்வின்ப்ளேன் சிந்தனை

எவ்வளவு பணம் காசிருந்தாலும், மனித மனம் மகிழ்ச்சி பெறுவதில்லை. ஏதோ ஒரு துயரம் மனத்தைக் குடைந்துகொண்டிருக்கிறது. க்வின்ப்ளேனைப் பொதுஜனங்கள் ஒவ்வொரு கிராமத்திலும் ஆவலாக எதிர்பார்த்தனர். அவன் நாளைக்கொரு கிராமமாகச் சென்றான். ஒவ்வொரு மாலையும் புதுப்புது ஜனக் கூட்டத்தைப் பார்த்தான். அவர்கள் தனது இளிச்ச வாயைப் பார்த்து அரை நாழிகை சிரித்துத் தமது துயரை மறந்தனர். தனது அவலக்ஷணம் பிறருக்குச் சிரிப்பாயிருந்தது. ஒவ்வொரு மாலையும் அவனைப் பார்த்துச் சிரிக்க ஏராளமான சில்லறைப் பணங்களைப் பொது ஜனங்கள் கொண்டு குவித்தனர். ஒவ்வொரு இரவும் உர்ஸஸ் ஷில்லிங், பென்ஸ் நாணயங்களை எண்ணி எண்ணிப் பை கட்டி வைத்தான். வரும்படியைக்கொண்டு எல்லாரும் தாட்டாகச் சாப்பிட்டனர்; நல்ல உடையணிந்தனர்; தாராளமாக ஏழை எளியவருக்கும் உதவினர். நிர்வாகம் முழுதும் உர்ஸஸ் பொறுப்பில் இருந்தது. க்வின்ப்ளேன் பணங்காசைத் தொடுவதில்லை. அதைப்பற்றி அவனுக்குக் கவலையே இல்லை.

ஜனங்களிடையே தனக்கு நாடோறும் கிடைக்கும் புகழையும், கரகோஷங்களையும் அவன் மதிக்கவேயில்லை. வறுமை தீர்ந்தது, வளமை பெருகியது. எனினும் அவன் மனம் எதையோ நினைத்து வருந்தியது. தன் முகத்தைக் கண்ணாடியெடுத்துப் பார்ப்பான். "இப்படி என்னைச் செய்தது

யார்? பிறக்கும்போது இப்படிப்பட்ட முகம் எனக்கிருந்திராதே! முகம் சிரிக்கிறது! அதைப் பார்த்து எல்லாரும் சிரிக்கிறார்கள். அகம் வருந்துகிறது! மனம் எதையோ நினைத்து ஏங்குகிறது. என் வாழ்வில் ஏதோ ஒரு இரகசியம் உள்ளது. நான் இப்படி ஊர்க் கோமாளியாய்ப் பிழைக்கவா பிறந்தேன்?" என்று சிந்திப்பான். பிறகு தயாவைப்பற்றி நினைப்பான். "என்னைக் காதலிப்பவள் கண் தெரியாத இந்த அபலையே. கண்ணிருந்தால் அவளும் என்னைப் பார்த்து மற்றவரைப் போலச் சிரிப்பாள். என்னை வெறுப்பாள். அவள் கபோதியா யிருப்பது எனது அவலக்ஷணத்திற்கு ஒரு பாதுகாப்பா யிருக்கிறது" என்பான்.

இவற்றினும் இன்னொரு துயரம் அவன் நெஞ்சைப் பிளந்தது. ஒவ்வொரு மாலையும் அவன் முன் திரளான ஜனங்கள் கூடுவர். அவர்களை யெல்லாம் அவன் ஊன்றிக் கவனிப்பான். உலகை அவன் ஆராய்வான். நாலு பிள்ளை குட்டிகளுடன் சம்சாரிகள் படும் கஷ்டத்தைக் கண்டு கண்ணீர் வடிப்பான். எத்தனையோ பெற்றோர் வேலையில்லாது திண்டாடுகின்றனர்; கிடைப்பதும் அடிமைத் தொழில்; அது கிடைத்தாலும், கூலி ஒரு வேளைக் கஞ்சிக்குக் கூடக் காணுவதில்லை. அதையும் சாராயக் கடையில் உதறிவிட்டு வருகிறான் புருஷன். போதையில் பெண்சாதி பிள்ளைகளைப் போட்டு அடிக்கிறான், சண்டை பிடிக்கிறான். சில பெண்களும் குடிக்கின்றனர். அப்படிப்பட்ட வீடு

களின் பரிதாபம் சொல்லி முடியாது. குழந்தைகள், "பசி பசி, சோறே சோறு!" என்றலறித் தெருவில் நின்றழுகின்றன. ஜனங்களுக்குப் போதுமான கல்வி யில்லை. எங்கும் மடமை குடிகொண்டிருக்கிறது. கொலை, களவு, கள், காமவெறி, சூதாட்டம் ஆகிய பஞ்சமா பாதகங்கள் உலகை நாசம் செய்கின்றன. உலகம் கொலைக்களமாயிருக்கிறது. நேசம் எங்கே, அன்பெங்கே? போட்டி பொறாமைகளால் ஒருவருக்கொருவர் கத்தி தீட்டி வெட்டிக்கொள்ளுகின்றனர். வீட்டில் கணவனுக்கும் மனைவிக்கும் ஒற்றுமையிருப்பதில்லை தாயாதிகள் போராட்டம் சொல்லி முடியாது. வாழ்க்கையைத் துக்கம் சூழ்ந்துகொண்டிருக்கிறது. வறுமையும் மடமையும் வாழ்வின்பத்தைப் பகாசுரன்போல விழுங்குகின்றன! ஏதோ சில பிரபுக்கள் பணங்கொழுத்து, சுகபோகங்களிற் புரளுகின்றனர்! இந்தப் பிரபுக்கள் ஏழைகளைப் புழுப்போல நசுக்குகின்றனர். பொதுஜன நிதியை இடம்பக்கூத்திற்கு அள்ளி வீசுகின்றனர். பகற்கொள்ளையடிக்கின்றனர். இந்தப் பிரபுக்கள் அடிமைகளைச் சிருட்டித்து மனிதத் தன்மையைப் பாழாக்குகின்றனர். அந்தோ! ஏழைகள் படுந்துயரம் எனக்குச் சகிக்கவில்லையே! நான் மாத்திரம் நன்றாகச் சாப்பிட்டாற் போதுமா? அந்தோ என்னைச் சுற்றி எத்தனை ஏழைகள் பட்டினி கிடக்கிறார்கள்! நான் மாத்திரம் நல்ல உடைகளை அணிந்துகொண்டால் போதுமா? என்னைச் சுற்றி எத்தனை ஏழைகள் ஆடையின்றி வாடையில் மெலிகின்றனர்! நானே பதினைந்தாண்டுகளுக்கு முன்பு அப்படி ஒரு கதியற்ற

பஞ்சையாயிருந்தேன். பஞ்சை மக்கள் படும் பாட்டை நினைத்தால் என் மனம் வெடிக்கிறதே! இவர்களுக்கு நான் எந்த வகையில் உதவி செய்வேன்? அவர்களை எனது இளிச்சவாயால் அரை நாழிகை துயர் மறந்து இளிக்க வைக்கிறேன்! அது போதுமா? உலகில் இரக்கமற்ற கர்விகளிடம் பணம் குவிந்து இரும்புப் பெட்டியில் உறங்குகிறது. பரம ஏழைகள் வயிறு வாடுகின்றனர்; வயிற்றுக் கொடுமையால், செல்வர் ஏவும் பாபத் தொழில்களைச் செய்கின்றனர். ஆ, இந்த ஏழைகளை இளிக்கவைத்து, நானுமல்லவா அவர் பணத்தைப் பிடுங்குகிறேன்! ஏழைகள்! ஏழைகள்! ஆ! அவர்கள் துயரைத் தீர்க்க நான் என்ன செய்வேன்? அல்லது இந்த உலகோரின் பரிதாபங்களைக் காணுமல் எங்காயினும் ஓடிப் போகட்டுமா........?" என்று இவ்வாறு நீண்ட சிந்தனையில் ஆழ்ந்திருப்பான் க்லின்ப்ளேன்.

## 42. உர்ஸூஸ் உபதேசம்

முகம் பார்த்து அகமறிவான் உர்ஸூஸ். இளிச்சவாயன் சில நாட்களாக எதிலும் மனம் பற்ருமல், ஏதோ சிந்தையில் ஆழ்ந்திருப்பதை அவன் நுட்பமாக ஆராய்ந்தான். பழுத்த கிழவன்; உலகுடன் போராடி அதை வெறுத்த கிழவன், சுக துக்கங்களைப் பொறுத்த கிழவன்; உர்ஸூஸ் வேதாந்தியல்லவா? இளிச்சவாயன் மனமாறுதலை அறிந்து கொண்டான். ஒருநாள் க்லின்ப்ளேன் செல்வர் கொடுமையால் ஏழைகள் அடிமையாக வருந்தும் ...ரைப்பற்றி நினைத்துக் கண்ணீர் வடித்தான். அச்

சமயம் உர்ஸுலஸ் தினம் பணம் எண்ணிப் பை கட்டு வதுகூட அவனுக்குப் பிடிக்கவில்லை. தயாவைக்கூட மறந்தான். ஏழைகளையே நினைந்துருகினான்.

உர்ஸுலஸ் அவனை ஒரு உலுக்கு உலுக்கி, "இங்கே பார்" என்று பெரிய பிரசங்கம் செய்தான் :

"உன்னை நான் கவனிக்கிறேன், இமுதலெல்லாம் நீ நினைக்காதே. கேள், வேதாந்தம் :—பேசாமல் தயாவைக் காதலி ; உன் இளிச்சவாயை எல்லாரும் பார்த்துச் சிரிக்கிறார்கள். இந்தப் பெண் மட்டும் உன் அவலக்ஷணத்தைப் பார்க்கவில்லை. அவள் குருடாயிருப்பதே உன் அதிர்ஷ்டம். உன் இளிச்ச வாயைப் பார்த்தால் எந்தப் பெண்ணும் உன் முத்தத்தை ஏற்கமாட்டாள். நீ இப்படிப் பிறக்கவில்லை; பாரோ பாபி உன்னை இப்படியாக்கினான். உனக்கும் ஒரு ஆறுதலாக, தயா வந்து சேர்ந்தாள். அவளைக் காப்பாற்று; அனுபவி. ஒரு பிள்ளை, இரண்டு, மூன்று, ஒரு டஜன், அதற்கு மேலும் பிள்ளைகளைப் பெறு. இதைத்தான் நான் வேதாந்தம் என்று சொல்லுகிறேன். குழந்தைகள் உன் மடியில் தவழும், நடக்கும், சிரிக்கும், அழும், விளையாடும், மழலை பேசும். கொஞ்சு, சீராட்டு, பாராட்டு, சிரி, அதட்டு, மிரட்டு; அவை வேண்டியதை வாங்கித்தா. குழந்தைகள் பெரிதாகும். 'அப்பா சட்டை, அப்பா பாவாடை, பக்ஷணம், பொம்மை' என்று ஆசையாய்க் கேட்கும். வாங்கித்தா. அவை பெரிதாகும், படிக்கும். இருபது வயதானதும் உன் வாலிபப் பையன் ஒரு வாலிபப் பெண்ணைக் காதலிப்பான்.

ஆ, காதல் பற்றிக்கொண்டால் இந்தப் பயல்கள் பண்ணும் ஷோக்கும், தளுக்கும், பார்க்கும் திருட்டுப் பார்வையும் ........ என்னென்பேன்! சரி, காதல் முற்றிக் கலியாணமாகும். அப்புறம் உனக்குப் பேரப் பிள்ளைகள் பிறக்கும்; அப் பிள்ளைகளைக் கொஞ்சலாம். அதுவல்லவா அனுஷ்டான வேதாந்தம்! இந்த வேதாந்தம் எனக்குத்தான் கிடைக்கவில்லை, கிழவனாய்ப் போனேன். உனக்குச் சரியான வயதும் துணையும் சேர்ந்திருக்கிறது. நடத்து வேதாந்தத்தை! ஜனத்தொகையைப் பெருக்கப்பா—அதுதான் முதல் தரமான வேதாந்தம்! இந்த முக்கியமான காரியத்தை விட்டு, உலகமாம் உலகம்; உலகம் அப்படித்தான் இருக்கும். நீ இல்லாமலே உலகம் கெட்டழிந்து போகும்! பயப்படாதே. நீ விகடன்; உன்னை உலகம் பார்க்கவேண்டும்; நீ உலகைப் பார்க்கக் கூடாது. உலகம் உன்னைப் பார்த்துச் சிரிக்க வேண்டும்; நீ உலகைப் பார்த்து அழக்கூடாது. நன்றாகச் சாப்பிடு; தயாவும் நன்றாகச் சாப்பிடட்டும்; உலகை வளர்க்க முயற்சி செய்; உலகை வெறுக்கும் எண்ணத்தை விடு. நான்தான் இப்படி ஆசாபாசங்களையெல்லாம் அடக்கிக்கொண்டே கிழவனாய்ப் போனேன். எனக்கு உன்னைப்போன்ற அதிர்ஷ்டமில்லை. என்னை நேசித்த ஒரே பிராணி அதோ ஊளையிடுகிறதே அதுதான்! உனக்கு ஒரு குருட்டழகி வாய்த்ததே அதிர்ஷ்டமப்பா. வேறு நினைப்பை மற. பிரபுக்களைப்பற்றி நினைக்கிறாய்; பிரபுக்கள் லட்சணமெல்லாம் இதோ எழுதி வைத்திருக்கிறேன் பார். பிரபு என்பவன் எல்லாம்

உடையவன், சர்வாதிகாரி, தலைவணங்காதவன், உடல் வணங்காதவன், வயதில் பெரியவர்களையும் 'அடா புடா, தாட்பூட்' என்று அதிகாரம் செய்யும் தடபுடல் ஆசாமி, சுகபோகச் சோம்பேறி. பிரபு சர்வ முட்டாளாயிருந்தாலும் கேம்ப்ரிட்ஜ், ஆக்ஸ்போர்டு பட்டம் பெற்றுவிடலாம். பிரபு பயந்தாங் கொள்ளி, பயத்திஞல் தண்டத் தடியரை வைத்து ஊரைமிரட்டு வோன்; இப்படித்தான் எல்லாப் பிரபுக்களும் இருப் பார்கள் என்று சொல்லவில்லை; முரட்டு முட்டாளா யிருந்தாலும் பிரபு பிரபுதான். அவன் குறைகளை யாரும் துணிந்து சொல்லமாட்டார்கள். பிரபுக்கள் தாமப்பா சீமையை ஆளுகிருர்கள். பொதுஜன சபை (House of Commons) 'ஆம்' என்று சொன்னுல், பிரபுக்கள் 'இல்லை' யென்று சொல்ல உரிமை யுண்டு. பிரபுக்கள் கோபம் பொல்லாதப்பா. சார்லஸ் மண்டையைப் பிளந்த கிராம்வெல் தலையைப் பிரபுக்கள் கழுமரத்தில் நட்டுவைத்தார் கள். வில்லியம் I தயாரித்த டூம்ஸ்டே பேரேட் டைப் (Doomsday Book) பார்த்தாயாஞல், இங்கி லாந்தை ஆளுவோர் பிரபுக்களே என்றறிவாய். அந்தப் புத்தகம் இப்போது அரசாங்க நிதிப்பிரபுவின் பாதுகாப்பில் உள்ளது. அதிலிருந்து ஏதாயினும் எழுதிக்கொள்ள வேண்டுமாஞல் வரிக்குக் காலணு தரவேண்டும். அதில் சீமையிலுள்ளவர் ஆஸ்தி பாஸ்தி யெல்லாம் குறித்து ஆளுக்கேற்ற கடுவரி போட்டான் வில்லியம். எல்லாம் பிரபுக்கள் வேலை!

நான் பிரபுக்களிடம் பழகியிருக்கிறேன்; ஒரு பிரபுவுக்குக் குடும்ப வைத்தியஞ யிருந்திருக்கிறேன்.

பிரபு வீட்டு நாய், முயல்களின் செலவில் எத்தனையோ ஏழைகள் பிழைக்கலாம். பிரபுக்கள் சிறு குற்றத்திற் காகக்கூட ஏழைகளைத் தூக்குமேடையில் ஏற்றுவர். தோட்டத்தில் ஒரு குழிமுயலைப் பிடித்ததற்காக ஆறு சிறு குழந்தைகளின் தகப்பனான ஒரு ஏழை யைத் தூக்குப்போட்ட பிரபுவை நான் அறிவேன். பிரபுவின் முயல், கடவுளின் மனிதனைவிடப் பெரிது. யானை நடக்கும்போது பூச்சி புழுக்களைக் காலடி யில் நசுக்குகிறதல்லவா? அதுபோலத்தான் பிரபுக் களின் சட்டம் ஏழைகளை நசுக்குகிறது. பிரபுக்கள் சமாசாரம் பொல்லாதப்பா. நான் பிரபுக்களை விரும்பு கிறேன்; அவர்களை விலகிப்போகிறேன். நான் ஒரு பிரபுவிடம் இருந்தேன்; அவர் மாளிகை விசாலம், அவர் வருமானம் ஏராளம், அவர் அலங்காரம் பிரமாதம். பிரபுக்களை நான் விரும்புகிறேன். அவர்க ளில்லாவிட்டால் சலவைக்கல் மாளிகையேது, சேவக ரேது? கனந்தங்கிய பிரபு "நாம்" என்றுதான் பேசுவார். ஒரு பிரபு பலபேருக்குச் சமானம். பிரபு என்பது பலர்பால்; பிரபு பாஷையே வேறு. கழுகு, யாளி, சிங்கம், பாம்பு, காலகோடி சர்ப்பம், நாம் அஞ்சும் இவையெல்லாம், பிரபுக்களுக்குத் தங்கமும் வைரமும் இழைத்த அலங்கார நகைகளாகின்றன. பூச்சிகள் வேரைச் சாப்பிடும். பிரபுக்களின் ஆணவம் ஏழைகளைச் சாப்பிட்டு ஏப்பம்விடும். சந்தோஷமா யிருக்கத் தமக்கே உரிமையுண்டு என்று நினைப்பர் பிர புக்கள். 'ஏழைகளுக்குக் கஷ்டப்படுவதே கடன்' என்று நினைப்பர். பணமப்பா; உலகை ஆட்டிவைப்பது பணம். பிரபு ஆயிரக்கணக்கில் சம்பாதிப்பவர் தெரியுமா?

"ஆம், ஆம், ஏழைகளின் நரகம் பிரபுக்களின் சுவர்க்கமா யிருக்கிறது," என்றான் இளிச்சவாயன்.

உர்ஸஸ் மொழிகள் க்வின்ப்ளேன் சிந்தனையை மேன்மேலும் உந்தும். தயாவின் இனிமைதான் அவனை உலகப் பற்றுடன் வைத்தது. தயா கணவ னிடம் பயபக்தியாய் நடந்துகொள்வாள். ஆட்டத்திற் கூட அவனைத் தாழ்வாகப் பேசச் சம்மதியாள். க்வின் ப்ளேன் தயாவுக்கு ரொட்டி அறுத்துத் தருவான். அவள் சௌகரியங்களை ஆவலாகக் கவனிப்பான். மாலையில் ஆட்டம் முடிந்ததும் உர்ஸஸ் அன்று வரும்படியைக் கணக்கிட்டுக் கட்டிவைப்பான், பிறகு எல்லாரும் சாப்பிடுவர். க்வின்ப்ளேன் அதிகமாக வெளியே போகமாட்டான். சாப்பாடானதும் பச்சை வண்டியிலேயே எல்லாரும் படுத்துக் கொள்வர்.

நாளாக நாளாக, க்வின்ப்ளேன் என்ற பெயர் மறைந்தது. " இளிச்சவாயன் " என்ற பட்டமே நாட்டிய வழங்கியது.

பல ஊர்களை இவ்வாறு இவர்கள் சுற்றிப் பார்த்தனர். ஒரு நாள் உர்ஸஸ் "லண்டனுக்குச் செல்லவேண்டும்" என்றான். மறு நாளே வண்டி லண்டனுக்குப் புறப்பட்டு, தேம்ஸ் நதிப் பாலத்தைத் தாண்டியது.

## 43. டாட்காஸ்டர் விடுதி

இன்று லண்டன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மூளை ; வாணிபவுலகின் உள்ளம், இயந்திரத் தொழி லின் இராஜ நாடி, நவீன நாகரிகத்தின் உயிர்த்

துடிப்பு ; உலகிற் பெரிய நகரம். அது தேம்ஸ் நதிக் கரையில் குபேரச் செல்வத்துடன் பொலிகிறது. தேம்ஸ் கழிமுகத்தில் திமிங்கிலம்போலக் கப்பல்கள் வரும், தங்கும், செல்லும். லண்டனில் பல கிராமங் கள் இணைந்துள்ளன. அதன் மொத்த ஜனத்தொகை 75 லக்ஷம்.

இராணி அன்னாள் காலத்தில் லண்டன் சிறிதா யிருந்தது. அப்போது அதற்கு ஒரே பாலந்தான் உண்டு ; அப் பாலத்திற்கு 'லண்டன் பாலம்' என்று பெயர். அப் பாலத்தின் மேலே நகர வீடுகள் எழுந் தன. முற்காலம் லண்டன் வீடுகள் மரத்தினால் கட் டப்பெற்றன ; அவை மிகவும் நெருங்கியிருந்தன. 1666-ம் ஆண்டில் தீப்பிடித்து எல்லா வீடுகளும் வெந்து சாம்பலாயின. அத்துடன் அந்த அழுக்கு வீடுகளாற் பரவிய தொத்து நோய்களும் ஒழிந்தன. புதிய லண்டன் எழுந்தது.

லண்டன், ஸௌத்வார்க்கில் (Southwork) பௌலிங் க்ரீன் (Bowling Green பசும்புல் மைதா னம்) என்ற ஒரு மைதானம் உண்டு. அது தேம்ஸ் நதிக்கருகே, ஜேம்ஸ் முனிவர் அரண்மனைக் கெதிரே, ஃபாக்ஸ் ஹாலுக் கருகே யுள்ளது. அதன் ஒரு கோடியில் குலாலத் தொழிற்சாலை நடக் கிறது ; மற்றொரு கோடியில் கண்ணாடித் தொழிற் சாலை யுள்ளது.

இப் பசும்புல் மைதானம், ஆதியில் ஹேஸ்டிங்ஸ் பிரபுக்களுக் குரியதாயிருந்தது. அது பிறகு டாட் காஸ்டர் (Tadcaster) பிரபுக்களைச் சேர்ந்தது. முடி

வில் அது ஒரு கோயிலைச் சேர்ந்து, மேய்ச்சல் தரை யாக மாறியது. இக் காலம் அங்கே சந்தை கூடும்; கோமாளிக் கூத்துகளும், செப்பிடு வித்தைகளும் நடக்கும். இந்த வித்தை விநோதக்காரரெல்லாம் நாடோடிகள். ஊருக்கு இரண்டொரு நாளிருந்து வயிறு வளர்ப்பவர். விகடம், கூத்து, செப்படி வித்தை, வேடிக்கை, விநோதங்கள் இவற்றைப் பாதிரிமார் "பேயாட்டம்" என்பர். பேயாட்டம் பார்க்கத் திரளான ஜனங்கள் இந்தப் பசும் புல் மைதானத்திற்கு வருவர். கூட்டமிருக்கும் இடத்தில் வியாபாரிகள் நாட்டமிருக்குமல்லவா? சாராயக் கடைகள், பலகாரக் கடைகள் முதலியவை பகலில் நடக்கும். அங்கே இக் கடைகளுக்கு நல்ல வியாபாரம் உண்டு. பொழுது விழுந்ததும் கடைகளைப் பூட்டிச்செல்வர் வியாபாரிகள். அங்கேயே நிலைப்பாயிருப்பது டாட்காஸ்டர் விடுதியே. அது மிகப் பழைய வீடு. அங்கே ஒருவர் சாப்பாட்டுக் கடையும், சாராயக் கடையும் வைத்திருக்கிறார். அவர் பெயர் நிக்லஸ். அது நிக்கோலாஸ் என்பதின் திரிபு. ஆங்கிலத்தை நன்றாக உச்சரிக்க வழி சில சப்தங்களை விழுங்கி விடுவதேயாம்.

நிக்லஸ் மனைவியை இழந்தவர்; பணத்தாசை கொண்டவர்; அரசாங்கத்திற்குப் பயப்பட்டு நடப்பவர். அவரிடம் கோவிகம் என்ற 14 வயது பொதுக் கைப் பையன் வேலைக்கிருந்தான். பகலெல்லாம் வேலை செய்து, இரவில், அவன் ஒரு நாய்க்கொட்டிலிற் படுப்பான். இந்த விடுதியில் ஒரு வண்டி வாசல் உண்டு; அதைத்தாண்டி வித்தை, கூத்து நடத்த

ஒரு அகலமான முன்றில் உண்டு. பெயர்பெற்ற கூத்தரும், கோமாளிகளும் இந்த விடுதியில் அமர்ந்து, தமது வித்தைகளைக் காட்டுவர்.

உர்ஸுஸ், தனது பச்சை வண்டியுடன் லண்டனுக்கு வந்தான். பௌலிங் க்ரீன் லாபகரமான இடமென் றறிந்தான். பால் முனிவர் மாளிகை அங்கேயுள்ளதைப் பார்த்து மகிழ்ந்தான். டாட்காஸ்டர் விடுதியைத் தனது தொழிலுக்காக அமர்த்திக்கொண்டான். அதன் முன்றிலில் பச்சை வண்டியை வைத்து அரங்கை அமைத்து, ஜனத்திரள் உட்காரவேண்டிய ஏற்பாடு செய்தான். வாசலில்

| |
|---|
| **க்வின்ப்ளேன்** |
| **(இளிச்சவாயன்)** |
| இன்று ஆட்டம் :— |
| உர்ஸுஸ் எழுதிய |
| **"இருள் கடிதல்"** |

என்று எழுதிய விளம்பரப் பலகையை மாட்டினான். பணம் வசூலித்து ஆட்களை உள்ளேவிட, கவனமான ஏற்பாடு செய்தான். வீனஸ், ஃபோபே இருவரும் உட்கார்ந்து பாண்டு முழக்க, அரங்கின் பக்கம் ஒரு பீப்பாய் போட்டு இடம் செய்தான். "நாம் இருப்பது லண்டன்; இது நாகரிகச் செல்வர் நகரம்," என்று சொல்லி, பிரபுக்களும், சீமாட்டிகளும் உட்

காரச் சிறப்பாக மேலே ஏற்பாடு செய்தான். நகராதி பதியின் மனைவி வந்துவிட்டால் என்ன செய்வது? முன்பே அவளுக்காக ஒரு அலங்காரமான வெல்வெட்டு நாற்காலி போட்டு வைத்தான். பிறர் உட்கார சௌகரியமான நாற்காலிகளும், விசு பலகைகளும் போட்டான். ஏற்பாடெல்லாம் ஷேக்ஸ்பியர் காலத்து குளோப் தியேட்டர் மாதிரி அமைந்தன.

இளிச்சவாயன் பெயர் எங்கும் பிரசித்தமாயிருந்ததால் ஏராளமான கூட்டம் வந்தது. உர்ஸுலஸ் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவன் எழுதிய நாடகத்தை ஜனங்கள் மெச்சினர். உர்ஸுலஸ் பட்சி, மிருகங்கள் மாதிரிக் கத்துவான்; கனவான்கள் போல நடிப்பான். தனது விகடச் சரக்குகளை யெல்லாம் காட்டுவான். கூட்டத்தை இவற்றால் மகிழ்விப்பான். இளிச்சவாயனைக் கண்டதும் சபை பொங்கியெழுந்து சிரித்துக் கைகொட்டி ஆரவாரிக்கும்; பணம் ஏராளமாக வந்து குவியும். ஆட்டமெல்லாம் முடிந்தபிறகு, க்வின்ப்ளேன், உர்ஸுலஸ், தயா முதலியோர் உணவுகொள்வர். எல்லாரும் உறங்கிய பிறகு இரவு 11-மணிக்கு, க்வின்ப்ளேன் மட்டும் பௌலிங் கிரீனில் ஒரு மணி நேரம் சிந்தனையுடன் உலாவிவந்து படுப்பான்.

## 44. சண்டப்ரசண்டம்

ஒரு நாள் மாலை டாட்காஸ்டர் விடுதியில் ஜனக் கூட்டம் மிகுந்தது. மாலுமிபோல உடையணிந்த ஒரு கனவான் விடுதியின் வெளிப்புறத்திலிருந்து செவிகொடுத்தான். உள்ளே அரங்கிலிருந்து

உர்ஸ—ஃஸ் குரல் தெளிவாகக் கேட்டது. உர்ஸ—ஃஸ் ஆங்கிலத்தில் வெளுத்து வாங்கினன் :—

" லண்டன் மஹாஜனங்களே, நீங்கள் ஆங்கிலேயர்; அதனல் மகிழ்ச்சியுடன் உங்களை வரவேற்கிறேன். நீங்கள் மஹாஜனங்கள், புகழ்பெற்ற சமூதாயத்தார். உங்கள் மனப்பசி பெரிது; நீங்கள் பிற நாட்டாரைச் சாப்பிட்டுத் தீர்ப்பதில் மேதாவிகள்! எவ்வளவு இனிய வேலை! வாளைக் குத்தாமல், ஆளைக் குத்திவிட்டே நீங்கள் காரியத்தைச் சாதிப்பீர்கள். நீங்கள் உலகைச் சூப்பியெறிவதில் கைகாரர்கள்! நீங்கள் தோலிருக்கச் சுளை விழுங்கிகள். அரசியல், தத்துவம், தொழில், வாணிபம் அனைத்திலும் உங்களை யாரும் மிச்சம் கொண்டுபோக முடியாது. குடியேற்ற நாடுகளை நீங்கள் அடக்கி யாளுவீர். உங்களுக்கு இன்பம், பிறருக்குத் துன்பம் செய்வதில் நீங்கள் பலே சூரர்கள். 'இது ஜனங்கள் கட்சி; இது ஆங்கிலேயர் கட்சி' யென்று உலகம் இரண்டாகும் ஒரு காலமும் வரும். இது நிச்சயம். உங்கள் மகிமையை விளக்கவே இதைச் சொன்னேன். நான் ஆங்கிலேயனல்லேன்; மனிதனுமல்லேன்; நான் ஜாம்புவான்; நான் டாக்டர்; கரடியும், வைத்தியனும் ஜோடி சரிதான்! நான் மூலிகை விற்கிறேன்; புதிய எண்ணங்களைத் தருகிறேன்; தெரிந்ததைத் தருகிறேன்; தெரியாததைச் சொல்லுகிறேன்—ஆக இரண்டு வேலைகள் எனக்குள்ளன. ஊன்றிக் கேளுங்கள், கனவான்களே, காதைக் கொடுத்துக் கேளுங்கள். காது குறுகலாயிருந்தால் உண்மை விளங்காது; காது மிகவும் பெருகினல் மூடப் பொய்க

மெல்லாம் அதிற் குடியேறும். ஆதலால் காதை நிதானமாக வைத்துக் கேளுங்கள். என் வைத்திய முறையே வேறு. என்னுடன் ஒரு வாலிபன் இருக்கிறான். அவன் உங்களைச் சிரிக்க வைப்பான். நான் உங்களைச் சிந்திக்க வைப்பேன். சிரிப்புஞ் சிந்தனையும் இந்த வண்டியில் சேர்ந்து வாழுகின்றன. சிரி, அழு; அறி, சிரி இவையே எனது சுருதி வாக்கியங்கள். அறிந்தவர்கள் உலகத்தைப் பார்த்துச் சிரிக்கத் தான் வேண்டும். கிரேக்கில் இரண்டு வேதாந்திகள் இருந்தனர். ஒருவர் ஹெராக்ளிதர் (*Heraclite*) இவர் அழுவார், எல்லாரையும் அழவைப்பார்; மற்றொருவர் தெமோக்ரிதர் (*Democrite*); இவர் சிரிப்பார், எல்லாரையும் சிரிக்க வைப்பார். "தெமோக்ரிதரே நீர் எப்படி இவ்வளவு அறிவாளியானீர்?" என்றொருவர் கேட்டார். "ஐயா, நான் சிரித்துச் சிரித்து இப்படியானேன்" என்றார் அந்த ஞானி. "ஏனையா சிரிக்கிறீர்?" என்று என்னை யாராவது கேட்டால் "எனக்கு விஷயம் தெரியும்; சிரிக்கிறேன்" என்பேன். உண்மையில் நான் சிரிப்பதில்லை; பொதுவான குற்றங்களை நான் எடுத்துக் காட்டுவேன்; மூளைகளிற் புகுந்து தூசி துடைப்பேன். மூளைகளில் எவ்வளவோ தூசியும் அழுக்கும் ஏறிப்போயிருக்கின்றன. அவற்றையெல்லாம் நான் கூட்டித் தள்ளுவேன். மூளையில் பொய்யும் மெய்யும் சேர்ந்திருக்கின்றன; நான் இரண்டையும் பிரிப்பேன்.

லாக்தான்ஸ் (Lactance) என்பவர் விர்ஜி

ல் வெண்கலச் சிலையைக் கேள்வி கேட்டாராம்; பச்சிலை பதிற் சொன்னதாம். சில்வெஸ்டர் Sylvestre) சாமியார் பறவைகளுடன் பேசினாராம். ரவிஜார் முனிவரது குழந்தையின் ஆவி அகுஸ்த னிவருடன் பேசியதாம். பகுத்தறிவுள்ள மூளை ற்றை நம்புமோ நம்பாதோ; நான் இதோ து நண்பன் ஓமோவுடன் பேசுகிறேன்; அது ானுடன் பேசுகிறது—இதை மட்டும் நம்புங்கள்; ஆனால் எனக்கும் மற்ற அறிவாளிகளுக்கும் வேற் றுமை புண்டு. ஹோமர் முதலிய அறி வாளர், மருந்து மூலிகைகளில் ஒரு தேவதை இருக் ிறது என்றனர். நான் மருந்தில் பேய் புகுந்திருக் ிறது என்கிறேன். அந்தப் பேயை நான் அறிவேன். ரனென்றால் நான் மூலிகை வைத்தியன்; ஏவாளை மயக்கிய சாத்தான்-பாம்பிற்கு மனிதத்தலை உண் டென்பர். அது பிசகு; பாம்பு பாம்புதான் என்று நான் வாதிக்கிறேன். நான் கடவுளை நம்புகிறேன். அவர் எவ்வளவு தாறுமாறான விஷயங்கள் செய்தாலும் நம்பு கிறேன். ஆனால் பகுத்தறிவுடனே நம்புகிறேன். மூட நம்பிக்கைகள் என்கிட்ட வரக்கூடா! அவை சாத் தான் வேலை. சாத்தான் ஆட்சியில் மூளைக்குச் சனி பிடிக்கிறது—மடத்தனங்கள் கிளம்புகின்றன. 'மிதுன ராசி ஜூபிடரின் வைப்பாட்டிக்குப் பிறந்தது' என்பதுபோன்ற கட்டுக் கதைகளை நம்பாதீர். நாங் குள் எத்தனையோ மூடக்கொள்கைகள் உள்ளன. சாடாமஞ்சி என்னும் பச்சிலையை முகர்ந்தால் மண்டையிலே பல்லி முளைக்குமாம், மாடு அழுகி வண்டாய் மாறுமாம், குதிரை அழுகிக் குளவியாய்

மாறுமாம், ஆட்டு ரத்தம் மரகதத்தை அழிக்குமாம். ஒரு மரத்தில் கம்பிளிப்பூச்சியும், கொசுவும், எட்டுக் கால் பூச்சியும் சேர்ந்திருந்தால் சண்டையும், பஞ்ச மும், கொள்ளைக் காய்ச்சலும் வருமாம். காக்காய் வலிப்பிற்கு ஆட்டு மண்டையிற் பிடித்த புழு நல்ல தாம். இவையெல்லாம் சுத்தப்பொய்; இந்தப் புருடா வுக்கெல்லாம் பயப்படாதீர்கள். பகுத்தறிவுடனிருங் கள். தைரியமாயிருங்கள். சரடு திரிக்கும் சமயவாதி களை நம்பாதீர்கள்.

ஒரு உண்மையை மட்டும் நம்புங்கள். உள்ளே யிருக்கும் எனது நண்பர் கொஞ்சம் தலைகாட்டினாற் போதும்; நீங்கள் கலகலவென்று சிரிப்பீர்கள். உங் கள் விசனமெல்லாம் பறந்தோடிப்போகும். இது கட்டுக்கதையல்ல.

தவளையைக்கொண்டு கோழி முட்டையைப் பொரித்தால் தேள் வரும்; அது பல்லிக்குட்டி போடும் என்பதை நம்புவீர்களா? நம்பமாட்டீர்கள். கன்னியாயிருப்பவள் தாயாக முடியாது என்பதை நம்புவீர்களா? கன்னிக்குக் குழந்தை பிறந்தது என் றால் தாயாகாமல் எப்படி அது இயலும்?

(இச்சமயம் பெரிய காற்றடித்தது; சபையிலும் ஏதோ பேச்சு நடந்தது. பிறகு அமைதி நிலவியதும் உர்ஸுலா பேச்சைத் தொடர்ந்தான்). காற்றும் ஏகாங்கி; நானும் பிரமசாரிக்கட்டை! காற்றும் தனக்கே பேசுகிறது; நானும் எனக்கே பேசுவேன். நாங்கள் நான்கு பேர்கள், முதலில் எனது நண்பன் நாயனாரைப் பாருங்கள்! அவன் வெளிப்படை

யானவன்; எதையும் ஒளிக்கமாட்டான்; அவன் என்னிடம் கற்றவன், அறிவாளி; என் பாஷை அவனுக்குத் தெரியும்; அவன் பாஷை எனக்குத் தெரியும். அவன் ஓரகமில்லாதவன், செருக்கில்லாதவன், அவன் பிரபுவல்லன்; அவன் தாழ்மையானவன், அடக்கமுள்ளவன்; பரோபகாரி; "வலதுகை ஈவது இடது கைக்குத் தெரியாமல் ஈக!" என்றார் ஏசுநாதர். அதைச் சரியாய்க் கடைப்பிடிப்பவன் நமது ஓமோ. வலது கால் செய்வது இடதுகாலறியாமல் அவன் நலம்புரிவான். நீண்டநாளாக எனக்கு ஒரே நண்பன் ஓமோதான்.

அதன் பிறகு மற்றொரு நண்பன் வந்தான். அவனை நீங்கள் வியப்பீர்கள், கண்டதும் சிரிப்பீர்கள்; கொள்ளைக்காரர் அவனைப் போர்ட்லாந்துப் பாறையில் விட்டுவிட்டுப் போனார்கள். அவன் எனக்கு வந்து வாய்த்தான்.

அவன் ஒரு குழந்தையைக் கொண்டுவந்தான். அது குருடு. என்றாலென்ன? கண்ணிருந்தும் எத்தனையோ பேர் கபோதிகளாயிருக்கிறார்கள். கருமிகள் காசைத்தான் பார்ப்பார்கள்; மற்றெதையும் கவனிக்கமாட்டார்கள்—அவர் குருடர்தாமே! ஊதாரிகளும் குருடரே; அவர்கள் முன்பின் பாராது காரியம் செய்வர். மண்டைக் கருவம்பிடித்த வம்பாடிகளும் குருடரே—தமது அவலக்ஷணம் அவர்களுக்குத் தோன்றாது. அறிவாளியும் குருடனே; தனது குறைகளையே அவன் காண்பான், பிறர் குறைகாணான். சாதுவும் குருடனே; அவன் கண்

னுக்கு அயோக்கியன் புலனுகான். எல்லாரையும் ஒரே சமனுக அவன் நினைப்பான். போக்கிரியும் குருடனே; அவன் கண்ணுக்கு நல்லது தோன் ருது. நாஸ்திகனும் குருடனே ; அவன் கண்ணுக் குக் கடவுள் தோன்ருது. கடவுளும் குருடனே ; ஏன் ? உலகைப் படைத்தபோதே அதில் பேய் நடம் புரியும் என்று அவன் அறியவில்லையல்லவா ? நானும் குருடனே; ஏனெனில், நீங்கள் ரஸிக்கிறீர்களா என்று பாராமல் கண்டபடி உளறிக்கொட்டுகிறேனல்லவா ? ஆனுல், இந்தக் கண்ணிழந்த பெண் மிகவும் புத்தி சாலி ; உள்ளே அவளுக்கு ஒரு ஒளிக்கண் உண்டு. அவள் ஒரு தேவதைபோல் விளங்குகிருள். நான் மருந்து தருவேன், நோய் தீர்ப்பேன், சிந்திப்பேன். இப்படி ஓயாமல் எனக்கே பேசிக்கொள்வேன். எனக் குப் பாட்டும், பிரசங்கமும் பிடிக்கும். மேற்சொன்ன தேவதையுடன் நான் மாசற்று வாழுகிறேன். ஸீமான் களே, ஸீமாட்டிகளே ! சன்மார்க்கம், அன்பு, மரி யாதை—இவற்றை வளருங்கள். எங்களைப்போல ஒற்றுமையாக வாழ்வீர்கள். தலைவர்களே ! இத்துடன் என் பேச்சு நிற்கும். இனி ஆட்டம் தொடங்கும்.”

வெளியிலிருந்து இந்தப் பேச்சைக் குறிப்பாகக் கேட்ட மாலுமி போன்ற கனவான், பணங்கொடுத்து உள்ளே வந்தான். அரங்கைப் பார்த்தான் ; கரடித் தோல் போர்த்த ஒரு கிழவன், ஒரு ஓநாய், முகமூடி தரித்த ஒரு வாலிபன், ஒரு குருட்டுப் பெண்— நால் வரையும் அக் கனவான் பார்த்து “ சபாஷ் ! தமாஷா யிருக்கிறதே ” என்று சிரித்தான். அவனைக் கண்ட

தும் ஜனங்கள் குதூகலமடைந்தனர். அவன் ஜனத் திரளைக் கையால் ஒதுக்கித் தள்ளிக்கொண்டு வருவான். அவன் வந்த நாளெல்லாம் வெகு தமாஷாயிருக்கும்; உர்ஸ-லஸ் கரடித் தொண்டையில் பேசுவான், பட்சிகத்துவான், சீமாட்டிகளை அபிநயிப்பான், சீமான்களை அபிநயிப்பான், [illegible]ளரை அபிநயிப்பான், அப்படியே [illegible] களையும் விற்பான். (அந்தத் தொ[illegible] விடவில்லை), பாடுவான், ஆடுவான், [illegible] வான், பேசித்தள்ளுவான்—[illegible] "சபாஷ், பலே! தமாஷ்!" என்று [illegible]க்கக் கூவி "அப்ளாஸ்" கொடுப்பான் அந்த மாலுமி—கனவான். அவன் கை தட்டவேண்டியதுதான், எல்லா ஜனங்களும் தடதடவென்று தகரக் கொட்டகை மேல் அடமழை பொழிவதுபோலக் கைதட்டுவர். இளிச்சவாயன் வந்துவிட்டானோ—போதும்—ஒரே இடிநகைதான்! கனவான் "ஹ, ஹ, ஹ, ஹொ, ஹொ, ஹோ, ஹொ, ஹொ, ஹோ!" என்று விழுந்து விழுந்து சிரிப்பான். அவன் விழுந்து சிரித்தால் எல்லாரும் புரண்டு சிரிப்பர். தனது வித்தையை இவ்வளவுதூரம் ரசிக்கும் இவன் யார் என்று உர்ஸ-லஸ், க்வின்ப்ளேன் இருவரும் நிக்லஸை வினவினர்.

—அவனே டாம்-ஜிம்-ஜாக்!

## 45. பொறாமைத் தீ

"டிங் டிங் டிங்" என்று பச்சை வண்டியில் மணியடிக்க வேண்டியதுதான் தாமதம்; "பூம் பூம்"

என்று பாண்டிற் பெண்கள் முழங்குவர். உடனே, "கிண் கிண்" என்று பணம் பெட்டியிற் குவியும். 'நீ முந்தி, நான் முந்தி' என்று ஜனத்திரள் உள்ளே வரும். இந்த மாதிரிக் கூட்டத்தை எந்த நாடகமும் அதுகாறும் பார்த்ததில்லே. இளிச்சவாயன் ஜனங்கள் உள்ளத்தை ஆகர்ஷித்தான். ஸௌத்வார்க்கில் எத்தனேயோ கோமாளிகள், கூத்தாடிகள், கரடி வித்தைக்காரர், குஸ்தி பயில்வான்கள், வாள்வீச்சுக்காரர் தொழில் நடத்தினர். விலங்கு வேடிக்கைகள் நடந்தன. கம்பீரமான வாத்தியங்களுடன் பெண்கள் பாடினர்; நடனமாடினர்; பெண்கள் கூடிய ஒரு சர்க்கஸ் அப்போது நடந்தது. எல்லார் வாயிலும் மண் விழுந்தது! கெண்டை மீனேப் பருந்து கொத்துவது போல, எல்லார் பிழைப்பையும் கொத்திக் கொண்டு போனன் இளிச்சவாயன்! "இளிச்சவாயன் எல்லாரையும் சாப்பிட்டுவிட்டான்; நமக்கினிப் பிழைப்பில்லே" என்று எல்லாத் தொழிலாளரும் தூங்கினர், ஏங்கினர், பொறாமையால் வீங்கினர்.

ஒருவன் வாழ்ந்தால் அடுத்தவனுக்குப் பொறாமை—இது உலகியல்பல்லவா? ஆடு புலியை விரும்புமா? மீன் பருந்தை விரும்புமா? எல்லாச் சனங்களேயும் கவர்ந்து, லாபத்தையெல்லாம் கொள்ளேகொண்டு, தமது பிழைப்பைப் பகாசுரன் மாதிரி சாப்பிட்டுக் கொழுக்கும் இளிச்சவாயனே நினேக்கும்போதே மற்றத் தொழிலாளருக்கு நெஞ்சு பொறுக்காது. பச்சை வண்டிக் கூட்டம் யாருடனும்

பேசுவதில்லை. உர்ஸுலஸ், க்வின்ப்ளேன் இருவரும் ஆட்டம் முடிந்ததும் அமைதியாகத் தமது காரியங்களில் ஈடுபட்டிருப்பர்; யார் வம்பிற்கும் அவர் போவதில்லை. பொறாமைக்காரர், "இந்த இளிச்சவாயன் நமது ஆட்டம், பாட்டம், கூட்டம், வரும்படி, பேர், புகழ்—அனைத்தையும் கெடுத்தான். நம்மைப் பட்டினி போட்டான்; இந்தப் பகாசுரன் நமது உயிரை உறிஞ்சிவிட்டான்! இவனைத் தொலைத்தாலொழிய நாம் பிழைக்க வழியில்லை!" என்றனர். கோமாளிகளின் நகைச்சுவை யெல்லாம் பகைச் சுவையானது. "ஐயோ, நமக்கு இப்படிப்பட்ட அவலட்சண முகம் வாய்க்க வில்லையே!" என்று அவர்கள் கண்ணாடி பார்த்துக் கவலைகொண்டனர். அவர் தாய்மார் தமது சிறு குழந்தைகளைப் பார்த்து "எனக்கென்று நீ பிறந்தாயே; அதோ அவன் மாதிரி இளிச்சவாயனா யிருந்தால் நமது பிழைப்பு நடக்குமே; ஏனிப்படி அழகாய்ப் பிறந்தாய்?" என்று குறைகூறி இடித்தனர். தமது குழந்தை, க்வின்ப்ளேன் மாதிரி இளிச்சவாயனாக வழியென்ன என்றும் சிந்தித்தனர். சிலர் இந்த இளிச்சவாயனிடம் ஏதோ மந்திரம், மாயம், குறளி இருப்பதாகக் கட்டிவிட்டனர். "எவ்வளவு அற்புதமான அவலக்ஷணம்!" என்று சினந்து வியந்து பொறாமைகொண்டு பல்லைக் கடித்தனர். எல்லாரும் கூடிச் சதியாலோசனை செய்தனர். "இருள் கடிதல்" என்னும் நாடகத்தில் கலாட்டா செய்தனர். "உஸ், புஸ், விஸ், உர், டுர்" என்று சீறிச் சீழ்க்கையடித்துச் சத்தம்போட்டுக் கைதட்டி ஆட்டத்தைக் கெடுத்தனர். டாம்-ஜிம்-ஜாக், கையை யிறுக்கிக் குத்துவைத்து

அவர்களை அடக்கினான். அவன் வரும் நாட்களில் காலிகள் நிதானமாக நடந்துகொண்டனர். மற்ற நாட்களில் வட்டிபோட்டுக் கலாட்டா செய்தனர். அவர் பாய்ச்சல் பலிக்கவில்லை.

பொறாமைத் தீ சும்மா அடங்குமா? எல்லா அக்கப்போர்களுக்கும் அதுதானே காரணம். கூத் தாடிகளும், கோமாளிகளும் சேர்ந்து ஊர் அதிகா ரிக்கு (மாஜிஸ்ட்ரேட்) பெரிய மனுப் போட்டனர். அவர்களுடன் பாதிரிமார்களும் சேர்ந்து கொண் டனர். ஏன்? க்வின்ப்ளேன் வந்த நாள்முதல் சர்ச்சு காலியானது. மாலை வணக்கநேரத்தில் கூட்டம் குறைந்தது; முடிவில் உபதேசியாரும் விளக்குத்தண்டுந்தான் மிச்சம். எல்லாரும் க்வின்ப்ளேனைப் பார்க்க ஓடினர். ஆதலால், உபதே சம் செய்து, வரும்படி தேடும் பாதிரிகளின் உண்டியல் பெட்டியும் காலியானது. அக்காலம் ஆளைச் சரி பண்ண இந்தச் சர்ச்சுக்காரர்களுக்கு ஒரு சுருக்கு வழி யிருந்தது. அந்த வழியைக் கடைப்பிடித்து ஸௌத்வார்கிலுள்ள ஐந்து சர்ச்சுப் பாதிரிகளும் லண்டன் பிஷப்பிடம் ஒரு அவசர மனுக் கொடுத் தனர். பிஷப் நேராக ராணியிடம் சென்று முறை யிட்டார்.

கோமாளிகளின் புகாருக்குமேல் சாமியார் களின் புகார் அதிகமானது. "ஐயோ, சாத்தான் தனது துஷ்டப்பேயை அனுப்பியிருக்கிறான்! அந்தப் பேயின் பலத்தால் இப்படி இந்த இளிச்சவாய்ப் பயல் ஜனங்களைக் கெடுக்கிறான். அவன் குறளி வித் தைக்காரன், மாயாவி, பேய் உபாசகன். அவனுடன்

இருக்கும் உர்ஸூலஸ் பெரிய நாஸ்திகன், மதவிரோதி! ஐயோ! நமது புனிதமான கிறிஸ்து சமயம் போயிற்று; எல்லாரும் பேயைப் பார்க்க ஓடுகிறார்கள். சர்ச்சு காலி! பார்லிமெண்டு சட்டப்படி நடவடிக்கை யெடுத்துக்கொள்ளாவிட்டால் ஆபத்து வரும்!" என்று அவர்கள் முறையிட்டனர்.

கோமாளிகளும் இதே காரணத்துடன், தங்கள் பிழைப்புப் போயிற்றென்று கூச்சலிட்டனர். இக்காலம் வால்டேரின் புரட்சிக் கொள்கைகள் இங்கிலாந்தில் பரவின. 'மூடக்கொள்கைகளையும், பொய்க் கதைகளையும் நம்ப வேண்டா; அவரவர் மூளையை உபயோகித்துச் சரியான வழியில் நடக்கலாம்' என்று ஜான்லாக், போலின்ப்ரோக் போன்ற அறிவாளிகள் உபதேசித்தனர். 'நமது மதத்தைக் கெடுக்க மற்றொரு வலிய நாஸ்திகனும், மாயாவியும் கிளம்பியிருக்கின்றனர்' என்று சர்ச்சுக்காரர் கூச்சலிட்டனர்; பச்சை வண்டியைப் பழித்தனர்; அதனால், பரலோக ராஜ்யம் தடையாகும் என்றனர். ஓமோவின்மேல் பாய்ந்தனர். ஓநாய் வளர்த்தல் கொடிய குற்றமென்றனர். குலைக்கும் நாயை வளர்க்கலாம்; ஊளையிடும் ஓநாயை வளர்க்கக்கூடாதாம். 'ஓநாயால் நாய்ச்சொறி பரவும்' என்றனர்.

இங்கே இவர்கள் இப்படித் தூற்றிச் சதியாலோசனை செய்யச் செய்யப் பச்சை வண்டிக்கு லாபம் அதிகமானது. "அந்த மாயாவியைப் பார்க்காதே" என்று பிரசாரம் செய்தனர் கோமாளிகள். "அட, அந்தப் பச்சைவண்டியில் பேய் புகுந்துள்ளது;

அந்த நாஸ்திகப் பேயிடம் போனால் பரமபிதா உங்களை நரகத்தில் தள்ளுவார்" என்று மதவாதிகள் கூச்சலிட்டனர். இந்தக் கூச்சலே இளிச்சவாயனுக்கு இன்னும் பெரிய விளம்பரம் அளித்தது. ஆயிரக் கணக்கில் வந்த ஜனங்கள் பதினாயிரக் கணக்கில் வரத் தொடங்கினர். சட்டம் என்ன செய்தது! சட்டத்திற்கு நத்தை வேகமல்லவா? கோமாளிகளும், சாமியார்களும் செய்த புகார், பிஷப்பிற்கு எட்டி, ராணிக்கு எட்டி, அவள் போலீஸாருக்குத் தெரிவித்து, போலீஸார் துப்பறிந்துவந்தனர். சட்டம் தூங்கித் தூங்கிக் காரியம் செய்யும். ஸௌத்வார்க் ஜனங்கள் பச்சை வண்டியை மோகங்கொண்டு ஆதரித்தனர்; அதனால், அரசாங்கத்திற்கு யாதும் கெடுதலில்லை; ஊர்க் கோமாளிகள் காலித்தனம் செய்து கூச்சல்போட்டனர். உர்ஸ்லஸ், க்வின்ப்ளேன் இருவரும் சாதுவாகத் தங்கள் காரியத்தைப் பார்த்தனர். ஆதலால், குறிப்பான நடவடிக்கை யெடுக்க இடமில்லாமல், போலீஸார் சமயம்பார்த்திருந்தனர். எல்லாம் அறிந்த அனுபவக் கிழவன், உர்ஸலஸ், உஷாராகவே இருந்தான்.

## 46. இரும்புத் தடியன்

## (WAPENTAKE)

ஒரு நாள் அன்று வசூலான நாணயங்களை க்வின்ப்ளேன் எண்ணினான்; அவற்றில் ஒரு பார்த்திங் கீழே விழுந்தது. அதை எடுத்துப் பார்த்தான் க்வின்ப்ளேன். மற்ற பார்த்திங் நாணயங்களுக்கும்

அதற்கும் வேற்றுமையிருந்தது. அது ஏழைகளின் பார்த்திங் அல்ல; அதில் இராணி உருவமிருந்தது; அதைப் பார்த்ததும், "அரியணைச் சோம்பேறியின் ஆடம்பரம்!" என்றான். மோசம்போயிற்று! கேட்டான் நிக்லஸ்; 'வந்தது ஆபத்து!' என்று கையை உதறினான்; அவன் மூலம் அந்த வார்த்தை ஊரில் பரவியது. "இந்த இளிச்சவாயனுக்கு என்ன வாய்க் கொழுப்பு; நமது ராணியைப் பார்த்து அரியணைச் சோம்பேறி என்பதா?" என்று பகைவர் ரகளை பண்ணினர். செய்தி உர்ஸுலஸ் காதிற் கெட்டியது. உர்ஸுலஸ் மனம் பதறினான்: "க்வின்ப்ளேன், உனது வாயை அடக்கு; இது ஆங்கில ராஜ்யம்; இங்கே சீமான்களுக்கு ஒரு விதியுண்டு—ஒன்றும் செய்யாமல் சொஸ்தமாகக் காலம் கழிப்பது; ஏழைகளுக்கு ஒரு சட்டம் உண்டு. செல்வர் யாது செய்தாலும் வாயைத் திறக்காமல் பொறுத்துக் கொண்டிருப்பது. ஏழைகளுக்கு ஒரே நண்பனே உண்டு—'கப் சுப்.' ஏழை பணக்காரன் முன் 'எசமான் சித்தம்!' என்ற வார்த்தைதான் சொல்ல உரிமையுண்டு. எசமான்கள் யாது சொன்னாலும் எதிர் பேசக்கூடாது; ஆமாஞ் சாமி போடவேண்டும். அவர் அடித்தாலும், வைதாலும் பொறுத்துக்கொண்டிருக்க வேண்டும். நீதிபதியின் முன் 'எஸ், மை லார்ட்' என்று சொல்ல வேண்டும். அரசன்முன் சரணாகதி செய்து அடி வணங்கி, பதில் பேசாமல் சொன்னதைச் செய்ய வேண்டும். 'மஹா சன்னிதானத்தில் அடிக்கப் பிரியமிருந்தால், இதோ அடிமையின் முதுகு; திருவுளங் கொண்டமட்டும் தீட்டட்டும்' என்று காட்ட

வேண்டும். அப்படி நானே அடி வாங்கியிருக்கிறேன். அவர்கள் அடிக்கப் பிறந்தவர்; நாம் அடி பொறுக் கப் பிறந்தவர்கள். அவர் அணியப் பிறந்தார்; நாம் பணியப் பிறந்தோம். விதி அப்படி. நமது எலும்பு முறிந்தால் அவர் ஏற்றம் குறையாது." "மிகவும் நன்றாயிருக்கிறதே பிரபுக்கள் யோக்கியதை" என்று க்வின்ப்ளேன், உர்ஸஸ் மொழிகளை இந்தக் காதில் வாங்கி அந்தக் காதில் விட்டுவிட்டு நிம்மதியாயிருந் தான்.

ஒரு வாரம் அமைதியாகச் சென்றது. ஒருநாள் உர்ஸஸ் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். உடனே அவன் முகம் வெளுத்தது.

—க்வின்ப்ளேன் ?

—என்ன ?

—பார் அங்கே ?

—எங்கே ?

—அதோ மைதானத்தில், அந்த ஆளைப் பார்.

—கறுப்புச் சட்டை போட்ட ஆளா ?

—ஆமாம்; கையில் இரும்புத் தடி வைத்திருக் கிறான் பார்!

—அதற்கென்ன ?

—என்னவா ? அவனே இரும்புத் தடியன்.

—இரும்புத்தடியன் என்ன செய்வான் ?

—அவன் நூறு ராஜ சேவகருக்கு அதிகாரி; அவன் அந்த இரும்புத் தடியால் உன்னைத் தொடு வான்.

—தொட்டால்?

—வாயை மூடிக்கொண்டு அவன் பின்னே செல்லவேண்டும்!

—எங்கே?

—நமக்குத் தெரியாது; நரகத்திற்குப் போனாலும் அவன் பின்னே போகவேண்டியது நமது விதி.

—ஏன்?

—அவனும் சொல்லமாட்டான், நீயும் கேட்கக் கூடாது. இரும்புத்தடியால் தொட்டால் "வா பின்னே" என்று அர்த்தம்; போகவேண்டியதுதான்.

—மாட்டேனென்றால்?

—அன்றே தூக்குமேடையில் தொங்கவேண்டும்.



ஆனால், அப்போது வந்த இரும்புத் தடியன் நல்லவேளையாய் உர்ஸா—பஸ் கிட்ட வரவில்லை. இளிச்சவாயன் வந்ததுமுதல் நிக்லஸ்—சாராயக் கடைக்கு நல்ல வியாபாரம். மொங்கைக் குடியர், மடாக் குடியரானார்கள். குடி வெறியில் தடுமாறும் களியர்களை இரும்புத்தடியன் பீப்பாய் மாட்டிக் கைது செய்துகொண்டு போவான். தலையும், இரண்டு கைகளும் பீப்பாய்க்கு வெளியே நீட்டியிருக்கும். ஆள் அப்படியே நாள் முழுதும் இருக்கவேண்டும். தண்டனை, அபராதம் எல்லாம் உண்டு. ஆள் பீப்பாயுடன் தள்ளாடுகிறான்; நாய் குலைக்கிறது; ஜனங்கள் சிரிக்கிறார்கள். இரும்புத்தடியன் 'வாடா பயலே'

என்று உதைத்து இழுத்துச் செல்லுகிறான்! இப்படி அவமானப்பட்டும் குடியர் குடியை நிறுத்துவதில்லை!

## 47. எலியை விசாரிக்கும் பூனைகள்

உர்ஸுலஸ் பயந்தது சரி; ஒரு நாள் நமன் போலே சம்மன் வந்தது; பிஷப்கேட்டில் மூன்று கமிஷனர் முன் உர்ஸுலஸ் வணக்கமாக ஆஜரானான். மூவரில் ஒருவர் தத்துவ நிபுணர் (Doctor of Theology), வெஸ்டமினிஸ்டர் சாமியார் அவரை அனுப்பினார்; மற்றொருவர் வைத்திய நிபுணர், ஸர்ஜன் கல்லூரியிலிருந்து வந்தவர்; மற்றொருவர் சட்ட நிபுணர், சட்டக் கல்லூரியிலிருந்து வந்தவர். லண்டன், மிடில்செக்ஸ், ஸௌத்வார்க் வட்டங்களில் யார் சட்டத்திற்கு விரோதமாகப் பேசினாலும், விசாரித்துத் தண்டிக்க இம் மூவருக்கும் உரிமையுண்டு.

முரட்டுத்தனமாகப் பேசியதாகக் குற்றஞ் சாட்டி மேற்படி கமிஷனர்கள் சம்மன் அனுப்பினர்; சம்மன் நேராகத் தனது கைக்கு வந்ததால், உர்ஸுலஸ் யாரிடமும் சொல்லாமல் இரகசியமாகப் புறப்பட்டு பிஷப்கேட்டில் ஆஜரானான்.

கீழ் ஹாலில், தோல் மெத்தை தைத்த மூன்று நாற்காலிகளில் கமிஷனர்கள் அமர்ந்தனர். அவர்களுக்கு மேலே மினோஸ், ஏகஸ், ராதாமாந்துஸ் ஆகிய மூன்று நரக-நீதிபதிகளின் தலைகள் இருந்தன. கடுமுகடபேதார் உர்ஸுலஸைக் கொண்டுவந்து கமிஷனர் முன் நிறுத்தினான். உர்ஸுலஸ் மிகவும் தலையைக்



திரை தூக்கியதும் உர்ஸூஸ் காடி வந்தது; ஓமோ வந்தது; க்வின்ப்ளேன் வந்தான்; அவன் விழிகள் நேராக மேற்சொன்ன சீமாட்டியிடம் சென்றன. அவனும் அவளையே கண்கொட்டாமல் பார்த்திருந்தான்.

குனிந்து லத்தீனில் "எஜமான்களுக்கு மிக்க வணக்கம்" என்று கூட்டில் அமர்ந்தான். அவன் மேல் ஒற்றரும், கோமாளிகளும், பாதிரிகளும், போலீசாரும் எழுதிய புகார்கள் கட்டுக்கட்டாய் மேஜை மேல் இருந்தன. அவற்றைத் திருப்பிப் பார்த்து நீதிபதிகள் விசாரணை தொடங்கினர். மேலேயிருந்த நரக-நீதிபதிகளின் வடிவமே இந்த மூன்று கமிஷனர்களும் என்று உர்ஸுலஸ் மனத்திற் சொல்லிக்கொண்டான்.

இனி விசாரணையைக் கவனிப்போம்:

—நீ ஜனங்கள் முன்னே பேசுவதுண்டா?

—ஆம்.

—பேச உனக்கென்ன உரிமை?

—நான் வேதாந்தி.

—அது உரிமையல்லவே?

—நான் விகடன்.

—விகடன் பேசலாம்; வேதாந்தி மௌனமாக அல்லவா இருக்கவேண்டும்.

—விகடன் பேசலாம், வேதாந்தி பேசக்கூடாது! இதென்னடா சங்கடம்!

நீ நியாயம் தப்பிப் பேசுகிறாய்; மத தூஷணை செய்கிறாய்; உண்மையை மறுக்கிறாய்; பிறரைப் புண்படுத்தும் பொய்களைப் பரப்புகிறாய். உதாரணமாக கன்னி தாயாக முடியாது என்றாய்!

—ஆம்; தாயான பேரெல்லாம் கன்னியாயிருக்கமுடியாது என்றேன். அதில் என்ன பிசகு?

முதல் கமிஷனர் பதில் பேசமுடியாமல் வாயடைத்தார்.

இரண்டாவது கமிஷனர் (சரித்திர நிபுணர்) விசாரணை தொடங்கினர்:

—குற்றவாளியே, நீ பல துணிச்சலான பிழைகளைப் பேசியிருக்கிறாய்.

—சமூகம் சொல்லட்டும்.

—நீ ஒரு சரித்திரப் புளுகு புளுகினாய். புருடஸும், கேயஸும் ஒரு நீக்ரோவைச் சந்தித்ததால் ஃபார்சாலியா (*Pharsalia*) போர் தோற்றது என்றாய்.

—ஸீஸர் அப்போரில் தைரியமாகப் பாம்பேயை வென்றான்; அவனே சரியான போர்த் தலைவன் என்றேன்.

இரண்டாவது கமிஷனர் ரோமன் வரலாற்றைத் திருப்பிக்கொண்டு யோசனையில் ஆழ்ந்தார்.

மூன்றாவது கமிஷனர் (வைத்திய நிபுணர்) கேள்வி போட்டார்:

—டியானாவை (*Diana*) ஸ்நான அறையில் பார்த்த ஆக்தியன் செயல் குற்றமில்லை என்றாயல்லவா?

—ஒரு ஆண் நிர்வாண ஸ்திரீயைப் பார்த்தால் தோஷமில்லை என்றேன்.

—அது பிசகு, சரி; நீ மருந்தில் பேய் புகுந்திருக்கிறது. மூலிகை வைத்தியம் மூட நம்பிக்கை என்றாயல்லவா?

—மன்னியுங்கள்; மூலிகையின் சக்தியை நான் மறுக்கவில்லை; நானே மூலிகை விற்பவன்; மூலிகையில் ‘அந்தத் தெய்வம் உள்ளது. இந்தத் தெய்வம் உள்ளது’ என்பதையே மூடக் கொள்கையென்றேன். இந்த மூடக் கொள்கையே மருந்தைப் பேயாக்குகிறது என்றேன். நான் மூலிகைகளின் குணத்தை மறுக்கவில்லை; பெண்களின் குணத்தையும் மறுக்கவில்லை.

—நீ சொல்வதெல்லாம் பைபிளுக்கு விரோதம்.

—சட்டத்திற்கு விரோதம்.

—சரித்திரத்திற்கு விரோதம்.

—சரிதான் பிரபுக்களே, நான் சொல்வது மனச்சாட்சிக்கு விரோதமில்லையே.

—ஒரு யூதன் கிறிஸ்தவனாதல் அசங்கியம் என்றாயா?

—இல்லை துரையே. கிறிஸ்தவன் யூதனாவதே அசங்கியம் என்றேன். மதம் மாறுவதே அசங்கியந் தானே.

—யானை எழுதும் என்றாயா?

—இல்லை, நீர் யானை வேதாந்தம் சொல்லும் என்றேன்.

—நீ பேய், பிசாசு, குட்டிச்சாத்தான்.....

—ஐயோ இல்லையே, நான் மனிதன்.

—நீ சாத்தான் வியாபாரம் வைத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

—நான் சாத்தானை வெறுப்பதில்லை, மறுப்பதில்லை; கடவுளும், சாத்தானும் பகலும் இரவும்

போலாம். சாத்தானில்லாவிட்டால் கடவுளின் வல்லமை விளங்காது. இரண்டையும் நம்பவேண்டும். சாத்தானை நம்பாதவர் கடவுளுக்குப் பயப்படமாட்டார்கள் என்றேன்.

—கண்ணுடி நேர்த்தியாகிப் பளிங்காகும்; அது நேர்த்தியாகி வைரமாகும் என்பதை நீ மறுத்தாயல்லவா?

—இல்லை துரையே, கண்ணுடி உருகிப் பளிங்காக வெகுகாலம் ஆகும் என்றேன். வைரமும் கண்ணுடியும் ஒன்றல்ல என்றேன்.

—மரம் பேசும் என்பதை நீ மறுத்தாயா?

—ஒருக்காலும் இல்லை; மரம் பேசவேண்டுமானல் தூக்குமேடைக்குக் கீழே யிருக்கவேண்டும் என்றேன்.

—நீ முட்டாள் கழுதை என்கிறேன்.

—அப்படியே சொல்ல விரும்புகிறேன்.

—அதிகப்பிரசங்கிக் கோமாளியே, உன் காலைப் போலவே மூளையும் சுற்றுகிறது. உன் கொள்கையும் நடத்தையும் சந்தேகத்திற்கிடமாயிருக்கின்றன. நீ சூனியம் கற்றவனுகத் தெரிகிறது.

—நீ பேய்களுடன் உறவாடுகிருய். நீ விநோதமான விஷயங்களைப்பற்றிப் பேசுகிருய். பொது ஜனங்களை மயக்குகிருய்.

—இல்லை துரையே, நான் என்னுடனேதான் உறவாடுகிறேன்; என் உள்ளம் பேசுவதை ஊருக்குச் சொல்லுகிறேன்.

—பொய்....பகல் மலர்கள் இரவில் நட்சத்திரங்களாகின்றன என்று பேசியிருக்கிறாய்; பேயை உபாசிக்காமல் அப்படிச் செய்ய முடியுமா?

—துரையே! இரவில் வானில் வைர மலர்கள் மின்னுகின்றன; பூமியில் மலர்த் தாரகைகள் மின்னுகின்றன என்று கவிச்சுவையுடன் பேசினேன்.

—மலர்களை விளக்குகளாக்குவேன் என்றாயே, அது மாயவித்தைதானே?

—இல்லை துரையே, ஒரு கவியின் விழிகளுக்கு மலர்கள் விளக்குப் போலவும், அவற்றின் மணம் சுடர் போலவும் காணும் என்றேன்.

—இருக்கட்டும், நீ மருந்து கொடுக்கிறாயா?

—ஆம்.

—உயிருள்ளவர்களுக்கா?

—இல்லை, நோயால் உயிரை இழப்பவர்க்கு.

—என்ன முணு முணுக்கிறாய்?

—வாலிபர் முணுமுணுப்பார்; என்னைப் போன்ற வயோதிகர் மனமுடைந்து கண்ணீர் விடுவர்.

—கவனம்! நீ ஒரு நோயாளிக்கு மருந்து கொடுத்து, அவன் இறந்தால் உனக்கும் மரண தண்டனை கிடைக்கும்!

—நோயாளி பிழைத்தால்....?

—அப்போதும் மரண தண்டனைதான்.

—அதெப்படி?

—சட்டம் அப்படி : நோயாளி இறந்தால், உன் முட்டாள்தனத்திற்காகத் தூக்குமேடை ஏறவேண்டும். நோயாளி பிழைத்தால், முட்டாளான நீ மருந்து கொடுத்த துணிச்சலுக்காகத் தூக்கு மேடையேற வேண்டும்.

—மன்னிக்க வேண்டும். அரசாங்கச் சட்டத்தின் அழகு தெரியாமலிருந்தது ; இப்போது தெரிந்தது ; வந்தனம்.

—ஜாக்கிரதையாயிரு !

—உத்தரவுப்படி தானிருக்கிறேன்.

—நீ செய்வது எமக்குத் தெரியும்.

—தங்களுக்குத் தெரியாத விஷயம் உண்டா ? அது எனக்குத் தெரியும்.

—உன்னைச் சிறையிடுவோம்.

—தங்கள் கருணை அது மட்டுமா செய்யும் ? சர்வாதிகாரமும் அங்கே இருக்கிறதே.

—மூன்று கமிஷனர்களும் இரகசியமாகப் பேசினர். சட்ட புத்தகங்களைப் புரட்டு புரட்டென்று புரட்டினர்.

உர்ஸஸ் மனங்கலங்கினன். சட்டம் என்றால் பயந்தான் !

நீதிபதிகள் கடுமையாக அவன் முகத்தைப் பார்த்தனர்.

“ ஓடிப்போ !” என்றனர்.

திமிங்கிலம் விழுங்கிய ஜோனஸ் திரும்பி வந்ததுபோலுணர்ந்தான் உர்ஸஸ். “ நில் ; உன்னை



அவளைப் பார்த்தான் க்வின்ப்ளேன், உடனே அவன் மனத்திலிருந்த காதலி மாயமாய் மறைந்தாள்.

விடுதலை செய்தோம்; செல்" என்றனர் சட்ட நிபுணர்.

"வந்தனம், வந்தனம் துரைகளே, உங்களுக்கு, உங்கள் சட்ட நூல் மூட்டைக்கு, உங்கள் உடுப்பிற்கு, மூக்கண்ணாடிக்கு, உங்கள் நாற்காலிக்கு, கோர்ட்டிற்கு, உங்கள் தீர்ப்பிற்கு, கருணைக்கு வந்தனம், வந்தனம். இதோ ஓடிப்போகிறேன்—" என்று உர்ஸாஸ் வந்தனம் செய்துகொண்டே மெல்லச் சென்றான். கோர்ட்டு வாசலைத் தாண்டியதும் ஒரே ஓட்டமாக ஓடினான். பச்சை வண்டியில் நுழைந்ததும் "ஓமோ, இன்று நான் நரகத்திலுள்ள மூன்று-தலை நாயினின்றும் தப்பினேன்" என்றான்!

## 48. தங்கச் சீமாட்டி

எதிரிகள் சூழ்ச்சி பலிக்கவில்லை; கூட்டம் வர வரப் பெருகியது; பணம் வந்து குவிந்தது; டாட்காஸ்டர் சாராயக்கடைக்கும் பெருத்த லாபம் கிடைத்தது. இன்று சனிக்கிழமை, கூட்டம் அதிகம். இதுகாறும் பிரபுக்களுக்குப் போட்ட வெல்வெட் நாற்காலி காலியாயிருந்தது. இன்று அது நிரம்பியிருந்தது. அங்கே ஒரு சீமாட்டி வைரக் குன்றுபோல் ஜொலித்தாள்.

திரை தூக்கியதும் உர்ஸாஸ்—காட்சி வந்தது; ஓமோ வந்தது; க்வின்ப்ளேன் வந்தான்; அவன் விழிகள் நேராக மேற்சொன்ன சீமாட்டியிடம் சென்றன. அவளும் அவனையே கண்கொட்டாமல் பார்த்திருந்தாள். அவளிடம் ஒரு புதிய ஒளி வீசியது.

தயா சற்று மங்கல், இவள் நல்ல சிகப்பு; தயா சக்தி வேளையானால் இவள் அருணோதயம் போன்றாள். தயா அழகி, இவள் ஜகன்மோகினி. தயா சாது, வஞ்சமற்றவள், மாசற்றவள்; இவள் ராஜாத்தி, ஆடம்பரமானவள். அச்சம், நாணம் இவளிடம் இருப்பதாகத் தெரியவில்லை. அசையாப் பொற்சிலை போல் அவள் சபை நடுவே கம்பீரமாக வீற்றிருந்தாள்; அவள் சோபை சபையை வசீகரித்தது. அவளே சபையனைத்தும்போல விளங்கினாள். அனைவரும் அவளையே பார்த்தனர்.

அவள் நெட்டை, பருமன், தனது அழகு, தளுக்கு மினுக்குகளை எவ்வளவு காட்டமுடியுமோ அவ்வளவு காட்டினாள். காதில் கனத்த டோலக் அணிந்திருந்தாள். அவளது மேலணி தங்கச் சரிகை யிழைத்த இந்திய மஸ்லினால் ஆனது. அக் காலம் இந்திய மஸ்லினே அணிகளிற் சிறந்தது. ஒரு சீமாட்டி உடுத்தும் மஸ்லின் 600 கிரௌன் விலையானது. மேலங்கி, பெரிய வைரப் பொத்தானால் இணைக்கப் பெற்றிருந்தது. தனங்கள் நிவந்து காட்டும்படி வைர வேலை செய்திருந்தது; அது அக்கால நாகரிகம். ஒரு மோதிரத்தில் நுழையக்கூடிய அவ்வளவு மெல்லிய இந்திய மஸ்லினில் இழைத்த முத்தும் சரிகையும் வைரமும் அவள் உடலை அலங்கரித்தன. மைப்புருவங்கள் விற்போல் வளைந்திருந்தன. கைகள், முழங்கைகள், உள்ளங்கைகள், தோள், கன்னம், மூக்கு, இமை, காது, விரல் நுனி,—எல்லாம் சாயம்பூசிப் பளிச்சிட்டன. உதடுகள் கோவைக்கனிபோலச் சிவந்திருந்தன. தனது

அழகு முழுவதையும் காட்டி, உலகை மோகப்படுத்தவே தோன்றியது போலிருந்தாள் அவள். தனது—சேவகன், அவளுக்குப் பின்னால் இருந்தான்: அழகான வாலிபன், குள்ளன், நாகரிகவுடையணிந்து, இறகு சொருகிய ஜரிகைத் தொப்பி போட்டுக்கொண்டிருந்தான். டாம்-ஜிம்-ஜாக் அன்று வெகு மௌசாக வந்து கூட்டத்தின் நடுவேயிருந்து, அப்ளாஸ் கொடுப்பதும், இடி நகை புரிவதுமாயிருந்தான். அன்று க்வின்ப்ளேன் முகமும், ஆட்டமும், பேச்சும் சபையின் உள்ளத்தை அள்ளின. மதிகண்ட கடல்போலே சபை சிரிப்பலை வீசிப் பொங்கியது! சீமாட்டி மட்டும் சிரிக்காமல், இளிச்சவாயனையே கண் கொட்டாது பார்த்துச் சிலைபோ லமர்ந்தாள்.

ஆட்டம் முடிந்து கூட்டம் கலைந்தது. உர்ஸஸ் அன்று வசூலை எண்ணினான். சில்லறைகளுக்கிடையே, பளபள வென்று ராணி முத்திரை போட்ட பவுன் இருந்தது.

“ஆ, அந்தச் சீமாட்டி பவுன் கொடுத்தாள். தங்கச் சீமாட்டி, அவள் ஒரு தேவதை” என்று சந்தோஷப்பட்டான் உர்ஸஸ்.

“தேவதையா? அதற்குமேல் ராஜாத்தி, என்று சொல்லும்” என்றான் உள்ளே வந்த நிக்லஸ்.

நிக்லஸ் ஜன்னலைத் திறந்து, ‘பாரும் வெளியே’ என்றான்.

ஒரு பெரிய சாரட்டு அங்கேயிருந்தது. அதில் சீமாட்டி அமர்ந்தாள். சேவகர் தீவர்த்தி பிடித்து நின்றனர். குள்ளச் சேவகன் சாரட்டிற்கு பின் படி

யில் அமர்ந்தான். டாம்-ஜிம்-ஜாக் ஏறினான்—சாரட்டு சிட்டாய்ப் பறந்தது.

அவளைப்பற்றி நிக்லஸூம் உர்ஸூலஸூம் பேசினார்.

—அவள் யாரா யிருக்கலாம் ?

—செல்வச் செருக்கும், வைர மினுக்கும், தங்கத் துருக்கும், அலட்சிய பாவனையும், நிமிர்ந்த நடையும், வேலை செய்தறியாத மென்கையும், அழகுச் சாயமும், ஆடம்பர நகையும், பூச்சும் பார்த்தால் அவள் ஒரு ராஜத்தியாகத்தான் இருக்கவேண்டும். அவளது குள்ளச் சேவகன் ஜரிகைத் தொப்பியைப் பார்த்தே உண்மை யறியலாம். அந்தமாதிரித் தொப்பி ராஜாத்திகளின் சேவகருக்கே உண்டு; பிறர் அணிந்தால் அபராதம் விழும்.

—அவள் வண்டி யேறினாள்; அவளுடன் இன்னொருவர் ஏறினாரே, அவர் யார், அரசரா ?

—இப்போது அரசன் இல்லை, இது ராணி அன்னாள் ஆட்சி.

—கூட ஏறினவர் யார் ?

—டாம்-ஜிம்-ஜாக் !

இப் பேச்சைக் கேட்ட தயா, "இந்தப் பெண் இனி வராமல் தடுக்கமுடியாதா?" என்றாள். அவள் வர்ணனை தயா நெஞ்சைக் கலக்கியது! உர்ஸூலஸ் மட்டும் தங்கச் சீமாட்டியை வாழ்த்தினான். அவள் தினம் வருவாளென்று எதிர்பார்த்தான்.



காதலர் ஒருவர் கிண்ணத்தை ஒருவர் மாற்றி ஆற்றித் தேநீரை மெல்ல உறிஞ்சிக் கொண்டே கொஞ்சிக் கொஞ்சிப் பேசினர்.

ஆனால், அவள் வரவில்லை; டாம்-ஜிம்-ஜாக்கும் வருவதில்லை. டாம்-ஜிம் வந்தது ஒரு பாதுகாப்பா யிருந்தது. ஏன் அவரும் வரவில்லை என்று உர்ஸ"லஸ் கவலைப்பட்டான். மறுநாள், அரசாங்க வார அறிக்கை யில் (Weekly Gazette), மாட்சிமை தங்கிய இராணி யின் ஆணையால், டிர்ரிமோர் பிரபு, உலாந்தாக்கரையில் உலாவும் பிரிட்டிஷ் கப்பல் படையை நடத்தச் சென்றிருப்பதாகச் செய்தி வந்தது.

## 49. காதற் கடிதம்

மினுக்கழகின் விஷம் கொஞ்சம் க்வின் ப்ளேனுக்கு ஏறியது. சீமாட்டியின் சிலுசிலுப்பில் அவன் சிறிது மயங்கிப்போனான். அவள் ராஜாத்தி; இவன் கோமாளி; அவள் இரதி; இவன் இளிச்ச வாயன்; அவள் இருப்பது அரண்மனை; இவன் இருப்பது ஒரு பச்சைவண்டி—இருவருக்கும் எட் டேணி வைத்தாலும் எட்டாது; அவளை இனி அவன் காணமுடியாது; எனினும் அவளிடம் அவன் மனம் சென்றது; அவளைப்பற்றியே நீண்டகனவுகள் கண் டான். உர்ஸ"லஸ் வேதாந்தத்தையும் மீறி அவன் நினைப்பு அந்தத் தங்கச் சீமாட்டியைப் பற்றிநின்றது.

இவ்வுணர்வு இரண்டு வாரங்கள் இருந்து மெல்ல மறைந்தது; வழக்கம்போல தயாவை அவன் நேசித் தான். எனினும், தயா தேவதை; சீமாட்டி பூலோக ரம்பை என்பது மட்டும் அவன் மனத்தினின் றகல வில்லை; அவளுக்கும் தனக்கும் ஒரு சம்பந்தம் இருப்ப தாகவே நினைத்தான்.

இதனிடையே அமைதி நிலவியது; ஊர்க்

கோமாளிகள், காலிகள், பாதிரிகள்—யாரும் தொல்லை செய்யவில்லை; எல்லாப் புகார்களும் அடங்கின. ஆட்டத்திற்கு லண்டன் மஹாஜனங்களும் ஏராளமாக வந்தனர். பிரபுக்கள் சங்கத்திலும் இளிச்சவாயன் புகழ் பரவியது. அக்கால வழக்கம்போல, சீமான்களும் சீமாட்டிகளும் மாறுவேடம் போட்டுக் கொண்டு இளிச்சவாயனைப் பார்க்க வந்தனர்.

ஏப்ரல் மாதம்; வசந்தக்காட்சி வசீகரமாயிருந்தது; காதலர் நெஞ்சில் இன்பக்கனவுகள் எழுந்தன. இக்காலம், இரவில் ஆட்டம் முடிந்ததும் க்வின்ப்ளேன், வழக்கம்போல பௌலிங்கிரீனில் உலாவிக் கொண்டிருந்தான்: மாசற்ற ஆகாயம் வைரமணிப் பந்தல்போல நட்சத்திரங்களால் மினுக்கிட்டது. இராமலர் மணத்தை அள்ளி வந்த தென்றல் ஏதோ தூது பேசுவதுபோலிருந்தது. மைதானத்தில் தனிமையும் மோனமும் பரவின. அந்த அமைதி வெளியில் க்வின்ப்ளேன், புறங்கை கட்டி, ஏதோ சிந்தனை செய்துகொண்டே நடந்தான். அன்று கண்ட தங்கச் சீமாட்டி அவன் மனத்தில் தோன்றினாள். அந்த எட்டாக் கனியை அவன் நினைத்தே உலாவினான்.

திடீரென்று அவன் கையில் ஏதோ பட்டது; சட்டெனப் பார்த்தான்; ஒரு கடிதம். அவன் முன்னால் ஒரு குள்ள வாலிபன் வந்து நின்றான். அந்த வாலிபன் இறகுவைத்த சரிகைத் தொப்பி யணிந்திருந்தான். அவனே தங்கச் சீமாட்டியின் தனதுசேவகன்; க்வின்ப்ளேன் அவனை அறிந்துகொண்டான். அவன் 'என்ன செய்தி' என்று வாயெடுக்கு முன்,

“நாளை; இதே நேரம், லண்டன்பாலக் கோடியி லிருங்கள்; நான் தங்களை அழைத்துச் செல்லு கிறேன்,” என்று கிச்சுக்குரலில் பேசினன் சேவகன்.

“எங்கே?” என்றான் க்வின்ப்ளோன்.

“தங்களை எதிர் பார்க்கும் இடத்திற்கு” என்று ஓரே ஓட்டமாக ஓடி மறைந்தான் வாலிபன். டாட் காஸ்டர் வீடுதியில் மினுக்கிட்ட விளக்கருகே சென்று, க்வின்ப்ளோன் கடிதத்தைப் பார்த்தான். பையின்மேல் ‘க்வின்ப்ளோனுக்கு’ என்று விலாசமிட்டிருந்தது. உடைத்துப் பார்த்தான், படித்தான் :—

“நீ அவலட்சணம்; நான் அஷ்டலக்ஷணம்; நீ கோமாளி; நான் சீமாட்டி, ராஜாத்தி; நான் உயர்ந்தவள்; நீ தாழ்ந்தவன்; நான் உன்னை விரும்புகிறேன்; நான் உன்னைக் காதலிக் கிறேன்! வா!”

கடிதம் எழுதியது அந்தத் தங்கச் சீமாட்டி தான்! சீமாட்டி இளிச்சவாயனைக் காதலித்து வரச் சொல்லுகிறாள்!

இளிச்சவாயன் உள்ளத்தில் பல உணர்ச்சிப் படலங்கள் எழுந்தன. அவன் அக் கடிதத்தைப் படித்தான்; படித்துப் படித்துப் பார்த்தான்; வரி வரியாகச் சிந்தித்தான். “நான் உன்னைக் காதலிக் கிறேன்!” என்ற மூன்று வார்த்தைகள் அவனைப் பித்தனுக்கின. அம் மூன்று வார்த்தைகளே அச் செல்வக் காதலி தன் காதருகே சொல்லுவதுபோல வும், உள்ளத்தை ஊடுருவிப் பாய்ச்சுவதுபோலவும்

உணர்ந்தான். காதலின் மாயந்தா னென்னே! அது மாந்தர் உள்ளத்தை எப்படிக் கொள்ளையடிக்கிறது! தயாவிடம் ஊன்றிய மனத்தை இக்கடிதம் எழுதிய கைகள் வேரோடசைத்தன. அவள் எழுத்துக்கள் அவன் மூளையைக் கலக்கின: "நான்—உன்னைக்—காதலிக்கிறேன்!" ஆ, இம் மூன்று சொற்களும் அவனது நரம்புகளில் விறுவிறென்று இனிய விஷம் போல் ஏறின! "ஆ, அந்தத் தங்கக் கன்னிகை, செல்வச் சீமாட்டி, அழகுத் தெய்வம், 'என்னைக் காதலித்தாள்; அழைத்தாள். அவள் முகத்தழகும், உதட்டழகும், உடையழகும், நகையழகும், முத்தழகும், மணியழகும் அற்புதம், அற்புதம்! அரண்மனையில் ஆளும் அக்கனல் மணிப்பாவையோ என்னை "வா" என்றழைத்தாள்! இந்த இளிச்சவாயனை ஒரு இளந்திருத் தெய்வமும் காதலித்தது! நானா....ஆ....நானோ போகவா....?"

ஆசை 'போ' என்றது. ஆன்மா 'போகாதே' என்றது! இளமையின் விருப்பம் அவனைச் சீமாட்டியின் காதற் கோபுரத்தில் ஏற்றியது; மனச்சாட்சி அவனை அங்கிருந்து உருட்டித் தள்ளியது. "டாண்! டாண்!" என்று இரண்டு மணி யடித்தது. க்வின்ப்ளேன் அக் காதற் கடிதத்தை மடக்கி, மார்பருகே யுள்ள சட்டைப்பையில் வைத்து உள்ளே சென்றான். அங்கே பிஞ்சிளமான் போலத் தயா கண்ணுறங்கினாள். அவளைக் கண்டதும் மேற்பையில் வைத்த கடிதத்தை மடக்கிக் கீழ்ப் பையில் வைத்தான். ஏனெனில், அவன் மார்பில் எப்போதும் தயா இருப்



அந்த ஆள் உயிரோடிருக்கிறான்; மூச்சுத் திணறுகிறது; மூச்சுவிட முடியாதபடி அவன் வயிற்றில் ஒரு இரும்புக் கட்டை வைத்து அதன்மேல் ஆறு பெரிய கற்களை தூக்கி வைத்திருக்கிறார்கள்.

பதை யுணர்ந்தான். மெல்ல விளக்கை அணைத்துப் படுத்தான் க்வின்ப்ளேன்.

அவன் கண்மூடினான்; உறங்கவேயில்லை; காதற் கனவுகள் ஒன்றின்பின் ஒன்றாய் அவன் மனத்தைச் சூழ்ந்துகொண்டன. ஒரு மோகினிப் பேய் 'வா' என்றாள். ஒரு கற்பரசி "போகாதே" என்றாள். இடது கால் முன்னே வைக்கிறது; வலது காலை யாரோ பின்னே பிடித்திழுக்கின்றனர்; சஞ்சலப் புயலில் அவன் சித்தம் தத்தளித்தது, பொழுதும் விடிந்தது; இன்னும் அவன் கனவு விடவில்லை. "தூக்கமா; க்வின்ப்ளேன்!" என்றொரு மணிக் குரல் கேட்டது. தயாவின் குரலே அது. அக்குரல் அவன் கனவுகளைச் சிதறடித்தது; அவன் கலக்கத் தைத் தீர்த்தது; அருணோதயம் போலத் தயா அவன் முன் நின்றாள். அவளைப் பார்த்தான் க்வின்ப்ளேன்; உடனே அவன் மனத்திலிருந்த காதலி மாயமாய் மறைந்தாள். அவன் உறுதியை அசைத்த தங்கக் கரங்கள் தோற்றன. அவன் உள்ளத்திலிருந்த ஆசைப் பேய் ஓட்டமெடுத்தது; அங்கே தயா ஒருவளே விளங்கினாள். புயல் ஒழிந்தது; இருள் நீங்கிற்று; தயாவின் புன்னகை, க்வின்ப்ளேனுடைய சாந்த மனதில் மாசற்றெழுந்து விளங்கியது.

## 50. தோட்டான் இரும்புத் தடியன்!

காலை; மூவரும் தேநீர் சாப்பிட உட்கார்ந்தனர். தயா தனது காதலனுக்குத் தேநீர் ஆற்றிக் கொடுத்தாள். அப்போது க்வின்ப்ளேன் ஒரு காகிதத்தைக்

கொளுத்தி யெறிந்தான்; அதன் புகை தயா மூக்கில் ஏறி, அவள் தும்மினாள்.

—அதென்ன?

—ஒன்றுமில்லை.

தன்னைக் கலக்கிய காதற் கடிதத்தையே க்வின்ப்ளேன் அவ்வாறு கசக்கி எரித்தான்; அதன் சாம்பலை பூட்ஸ் காலால் மிதித்துத் தள்ளினான்! அத்துடன் தங்கச் சீமாட்டி மேலிருந்த ஆசையும் புகைந்து கரிந்து மண்ணாய் மறைந்தது!

நேற்றிரவில் அதில் இன்பமிருந்தது; இன்று காலை அதில் 'ஒன்று மில்லை.' க்வின்ப்ளேன் மாசற்ற புன்னகையுடன் தயாவை நோக்கினான்!

மனிதனின் மாசற்ற மனச்சாட்சியே அவனைக் காதலிக்கும் நங்கையின் பாதுகாப்பாகும்.

காதலர், ஒருவர் கிண்ணத்தை ஒருவர் மாற்றி ஆற்றித் தேநீரை மெல்ல உறிஞ்சிக்கொண்டே கொஞ்சிக் கொஞ்சிப் பேசினர். உர்ஸஸ் இருவரையும் பார்த்துக் கொண்டிருந்தான். காதலர் கொஞ்சுதல் சோலைக் குயிலிசையினும் இனிது. காதலர் உள்ளமே கவின்பெறுங் கவிதை; அவர் முத்தமே இன்ப விண்ணிசையாம்.

—க்வின்ப்ளேன்! நான் ஒரு கனவு கண்டேன்!

—என்ன?

—நம் இருவருக்கும் சிறகு முளைத்துப் பறப்பது போல....

—ஆனால், நாம் புட்களானோம்.

—இல்லே, தேவதைகளாமோம்.

—தயா, நீ என் தேவதை. நீ இல்லாது போனால்..........!

—நீ இல்லாதுபோனால்....நான் இறந்திருப் பேன்; நீ என் உயிர், என் இன்பம், என் கடவுள், என் உலகம், என் கண்!

—நீ என் வாழ்க்கை, என் விண்.

—என் கண்ணுக்கு எல்லாம் இருட்டாகத் தோன்றுகிறது. அந்த இருளில் என் ஜ கும் ஒளி நீயே. உன்னைத் தொடும்போதுப்படி வளவு சுகமாயிருக்கிறது! ஆ நீயே கட் க்வின்ப்ளேன்! நான் உன்னை உயிர் அழைப்பை கிறேன். அழைப்பை மீற முடி

—தயா நான் உன்னை யன் தொட்டவரே காதலிக்கிறேன். தயா, செல்லவேண்டும்; மற்றவர் இன்பமயம்; தயா, றுத்தால் தூக்குமேடை!

—என் விருந்தி; பொறுப்போம்; கேள்வி சுகம் அனுபவிக்கிறதுவும் பேசாதே; கேட்டதற்குச் சொல்லு," என்று ஜாடை காட்டி

—ஆ, நமது சொன்னான். தயாவின் உதட்டில் இக் காதலர் வைத்து மௌனவிடை பெற்று, தொண்டை புகுந்த புத்தடியன் பின்னே சென்றான்.

"மகிழ்ச்சியுவத்துக் குனிந்து சென்றதால், பிசகு! இந்த உறைந்திருந்தது. மானல் மறைந்சத்தம் போடாமலிருந்தது; அது படாதிர்கள்.ரால், அதன் ஊழ் முடிந்திருக்கும். கிக் கொள்ளுத்திசாவி' என்று தட்டிக்கொடுத்தான் பிறகு, அவன் கிக்லஸ், கோவிசும், வீனஸ்,

யே மகிழ்ச்சியின் அளவுகோல். மின்மினிப் பூச்சி மாதிரி வெளியே வந்து மினுக்கினால், உலகம் உங்களைக் காலில்போட்டுத் தேய்க்கும். என்ன கொஞ்சிக் குலாவல்! நான் கிழவன்! எனக்குக் காதல் வித்தை தெரியாது! காதலர் கொஞ்சி முத்தமிடும் இடத்தில் எனக்கு வேலையில்லை; இடையே பேய் புகுந்து ஆணையும் பெண்ணையும் சேர்க்கிறது என்று முன்பே சொன்னேன்! பேயிடம் எனக்குச் சலிப்பு தான். ஆனால், நீங்கள் இஷ்டப்படி ஜமாயுங்கள்!

ஆப்பா மிகவும் கண்டிப்பு.

க

புன் ...ாந்தர் பொங்கி மகிழ்வது எனக்குப் பிடிப்ப

...ன்றால், மகிழ்ச்சியின் பின்னே துக்கம்

மனி... மறைந்து நிற்கிறது.

காதலிக்கும் நங்...

காதலர், ஒருவர்

ஆற்றித் தெரு மெல்... வாசலைநோக்கி ஊளை

கொஞ்சிக் கொஞ்சிப் பேசின அது அடங்கவில்லை.

வரையும் பார்த்துக் கொண் உங்கள் மகிழ்ச்சி

கொஞ்சுதல் சோலைக் குயிலைப்படுத்தி "ஊம்"

காதலர் உள்ளமே கவின்பெறுவனும் வேதாந்தி.

முத்தமே இன்ப விண்ணிசைய தெரியும்...."

—க்வின்ப்ளேன்! நான் ஏமோவைத் தடவிக்

—என்ன? க்க் கிண்ணத்தை

—நம் இருவருக்கும் சிறகு வெறிக்க வெறிக்

போல்.... ஆள் நின்றான்;

—ஆனால், நாம் புட்களாமேோம். ...னான்.....

...ன்; தனது

தடிக்கையால் க்ளின்ப்ளேன் தோளைத் தொட்டான் ; மற்றொரு கையை வாசலைநோக்கி நீட்டினான். “பேசாமல் எழுந்து வா,” என்பது அதன் பொருள்.

உர்ஸ—ஸ் இடிவிழுந்த நாகம்போல் நடுங்கினான்; கலங்கினான். ‘தனக்கெதிராகச் சதியாலோசனை செய்த கோமாளிகளும், பாதிரிகளும் செய்த சூழ்ச்சியின் பலனே இது’ என்று மனத்துட் புலம்பினான். ‘இந்தப் பயல் வகைதெரியாமல் பணக்காரரையும் ராணியை யும்பற்றிக் கண்டபடி பேசினான். அதனால் இப்படி வந்தது’ என்று நொந்துகொண்டான்.

இனி என்ன செய்வது? எமன் அழைப்பை மீறினாலும், இரும்புத்தடியன் அழைப்பை மீற முடி யாது; மூச்சுவிடக்கூடாது; தடியன் தொட்டவரே அவன்பின் உடனே செல்லவேண்டும்; மற்றவர் தொடரக்கூடாது ; மறுத்தால் தூக்குமேடை!

உர்ஸ—ஸ், “ விதி ; பொறுப்போம் ; கேள்வி கேட்டாலொழிய எதுவும் பேசாதே; கேட்டதற்குச் சுருக்கமாகப் பதில் சொல்லு,” என்று ஜாடை காட்டி மெல்லக் காதுடன் சொன்னான். தயாவின் உதட்டில் தனது விரலை வைத்து மௌனவிடை பெற்று, க்ளின்ப்ளேன் இரும்புத்தடியன் பின்னே சென்றான். பெரிய தொப்பிவைத்துக் குனிந்து சென்றதால், அவன் முகம் மறைந்திருந்தது.

ஓமோ சத்தம் போடாமலிருந்தது; அது ‘ஊள்’ என்றால், அதன் ஊழ் முடிந்திருக்கும். ‘நண்பா நீ புத்திசாலி’ என்று தட்டிக்கொடுத்தான் உர்ஸ—ஸ். பிறகு, அவன் நிக்லஸ், கோவிகம், வீனஸ்,

ஃபோபுஸ் இந் நால்வரிடமும், "தயாவுக்கு இச்செய்தி தெரியாமல் பார்த்துக்கொள்ளுங்கள்; இதைப்பற்றி மூச்சுவிடாதீர்கள். கேட்டால் அலுவலாகச் சென்றிருக்கிறார்கள், சீக்கிரம் வருவார்கள் என்று சமாதானம் சொல்லுங்கள்," என்று தெரிவித்து, மறைந்து மறைந்து, க்வின்ப்ளேனைத் தொடர்ந்தான். தானும் அதிகாரிகள் முன்பு சென்று நியாயத்தைச் சொல்லி க்வின்ப்ளேனை அழைத்துவரலாம் என்பதே அவனது நம்பிக்கை. இரும்புத்தடியன் முன் சென்றான் போலீஸார் இருமருங்கும் சூழ்ந்தனர். க்வின்ப்ளேன் தலைகுனிந்து அவர்களைப் பின்பற்றினான். வளைந்து வளைந்து, சிறு மருங்குகளைக் கடந்து முடிவில் இவர்கள் ஒரு குறுகிய சந்திற் புகுந்தனர். அதன் இருபுறமும் வானளாவிய சிறைச்சுவர்கள் பயங்கரமாக எழுந்து நின்றன. அச் சந்தில் இவர் புகுந்ததுமே உர்ஸஸின் நெஞ்சு பகீரென்றது. சிறைச் சுவர்களில் தூக்குமேடைகள் இருந்தன. தள்ளியிருந்து பார்த்தான் உர்ஸஸ். "அரசி ஆணை கதவு திறக்கட்டும்" என்றொரு சத்தம் கேட்டது. உடனே படபடவென்று இரும்புக்கதவு திறந்தது. போலீஸாருடன் க்வின்ப்ளேன் உள்ளே சென்று மறைந்தான்! சிறு கதவு உடனே மூடிற்று.



இதுவே ஸௌத்வார்க்கின் பயங்கரச் சிறை. இதில் நுழைந்த கைதிகள் உயிருடன் திரும்பார். இதில் போவதும் சரி, புதை குழியில் மறைவதும் சரி! இது நரகினும் கொடிய இருட்சிறை. இந்தச் சிறை இப்போதில்லை; இதைத் தகர்த் தெறிந்தனர்.

இச் சிறைக்கு இரண்டு வாயில்கள் உண்டு. ஒன்று தெருப்பக்கம் உள்ள பெரிய வாசல், அதிகாரிகளுக்கே அதில் நுழையும் உரிமையுண்டு; மற்றொன்று ஒரு குறுகிய சந்திலிருக்கும் சிறிய கைதி வாசல். அதன் வழியாகவே கைதிகளும் அவரைக் கொண்டுவரும் காவலரும் நுழைவர். சிறையில் கொலையுண்டோ, சித்திரவதைப்பட்டோ இறந்த பிணங்களும் இதே சிறியவாசல் வழியாகவே வெளியேறும். இச் சிறையில் வாழ்வதைவிட யமலோக வாழ்க்கை மேலாகும். "ஐயோ, க்வின்ப்ளேன் நரகச் சிறையிருளில் மறைந்தான்; வெளியேறுவானோ, என்னவோ?" என்று உர்ஸஸ் கலங்கிக் கண்ணீர் வடித்து நின்றான்.

## 51. பயங்கர நரகம்

க்வின்ப்ளேன் சிறைக்கோட்டத்துள் நுழைந்தான்; பின்னே இரும்புத்தடியன் சென்றான்; இவனைத் தொடர்ந்து விசாரணைதார்களும் அவர்களுக்குப் பின்னே போலீஸ்காரர்களும் சென்றனர்.

வெளிச்சம் கதவுக்கு வெளியேதான் உண்டு; உள்ளே இருட்டு 'கும்' என்றிருந்தது; சற்றும் எதுவும் புலனாகவில்லை; கண்ணிற்கு அங்கே ஒளியில்லை; வேலையில்லை; ஜன்னல்கள் அடைத்திருந்தன; விளக்கில்லை; ஒளிபுக சந்து பொந்துகளும் இல்லை. சிறைவாயிலில் விளக்கு வைக்கக்கூடாதென்பது சட்டம். குருடன்போலே சுவற்றைப் பிடித்து, வழி தடவித் தடவி சென்றான் க்வின்ப்ளேன். மூலையும் முடுக்குமாக உள்ளே குந்து

கிய பாதை வெகுதூரம் சென்றது. க்ளின்ப்ளேன் தைரியசாலி; அஞ்சாநெஞ்சன்; அத்துடன் பேசாமல் இருக்கச்சொன்ன உர்ஸ-ூலஸ் மொழிகளையும் நினைத்துப் பொறுமையாக இருட் குகையிற் சென்றான். இதென்ன நரகமா, பேய்க்கூடமா? இவர்கள் தன்னை இப் பயங்கர நரகத்திற்கு கொண்டு வந்ததேன்? என்று அவன் கவலைகொண்டான். "கனவான்களே, என்னை எங்கே கொண்டுபோகிறீர்கள்!" என்று ஒருமுறை வாய்விட்டலறினன். பதிலில்லை. பேச்சில்லாமல் கைதியைப் பிடித்துவரவேண்டுமென்பது சர்க்கார் உத்தரவு. 'இதென்ன கொடுமை, இவர்கள் ஏன் வாயை மூடிக்கொண்டு தன்னை இப்படி நடத்துகிறார்கள்' என்று க்ளின்ப்ளேன் கலங்கினன்; தயாவை நினைத்து வருந்தினன். மேலும் அவன் இரவில் உறங்கவில்லை; காலையில் ஒரு கோப்பை தேநீர் சாப்பிடுவதற்குள் இரும்புத் தடியன் வந்து பிடித்துக்கொண்டான். பசி வேறு; களைப்பு வேறு; கவலை வேறு. அவன் தலை சுழன்றது; எனினும் மனவுறுதியுடனே நடந்தான். இரும்புத் தடியன் முன்னே வழிநடத்தினன். மற்றச் சிறைகளில், கைதியின் ஊர், பெயர், குற்றம் இவற்றைக் குறிப்பர்; அவன் கையெழுத்தை வாங்குவர். அதெல்லாம் இச் சிறையில் வழக்கமில்லை; அவசியமில்லை. ஆனால் உள்ளே தள்ளி விலங்கு மாட்டுவர்; காரணம் கேட்கக்கூடாது; சொல்லவும்மாட்டார். இச் சிறையிருளில் நரக வேதனைப் பட்டுக்கொண்டு உயிர் துடிக்கலாம். இதனின்றும் வெளியேற ஒரே வழிதான் உண்டு—உயிரை விட்டுவிடுவது. ஆனால் வெளியேற்றமாட்டார்கள்;

பிணத்தைத்தான் வெளியேற்றி அதோ அருகிலுள்ள மயானத்திற் புதைப்பர். ஆளைச் சித்திரவதை செய்துண்ணும் கரும்பூதம்போன்ற இப் பயங்கரச் சிறையில் இரும்புத்தடியன் சென்ற குறுகிய வழியிலே, கற்சுவற்றைப் பிடித்துச் சென்றான் க்வின்ப்ளேன். இதன் ஒவ்வொரு முடுக்கிலும் கதவுண்டு; அதைத் தாண்டியதும் பின்னால் வரும் போலீஸ்காரன் 'டபார்' என்று கதவை அடைத்துவிடுவான். சில இடங்களில் கூனிக் குறுகிச் செல்லவேண்டும்; நிமிர்ந்தால் மண்டையுடையும். இச் சிறைக் கதவுகள் சேவகரில்லாமலே ஒரு சூக்குமத்தால் மூடித்திறக்கும். இவ்வாறு மூன்று கதவுகளைத் திறந்து சென்றதும்,பெருங்குடல் மாதிரி ஒரு குறுகிய இருட்சந்து வந்தது. அதில் காற்றுக் கிடையாது; நாற்ற மடித்தது; அச் சந்தைத் தாண்டியதும், படிகள் கீழே இறங்கின. இப் படிகளில் கொஞ்சம் கால் தவறினால் பாதாளமே கதி! இப் படிகளும் பாதாளச் சிறைக்கே சென்றன. கீழே மெல்ல இறங்கி மற்றொரு சந்தில் நுழைந்து, முடிவில் ஒரு இரும்புக் கதவை அடைந்தான் இரும்புத் தடியன். அக் கதவில் தனது இரும்புத்தடியால் 'டணார்' என்றடித்தான். எலிப் பொறிக் கதவு போன்ற அந்த இரும்புக் கதவு மேலிருந்து தூக்கியதும், உள்ளே விளக்கு வெளிச்சம் தெரிந்தது. இருளில் மூழ்கி வந்து திடீரென்று வெளிச்சத்தைக் கண்டதும் க்வின்ப்ளேனுக்குக் கண் இருண்டது. சற்று நிதானப்படுத்தி முன்னே பார்த்தான். பாறைகளில் வெட்டிய இருபது படிகள் இருந்தன; கைப்பிடியில்லை. அவற்றினின்றும்

கீழே பார்த்தான் க்வின்ப்ளேன். கீழே ஒரு பாதாளச் சிறை. அதில் விளக்கெரிந்தது; அச் சிறை புதை குழிபோலிருந்தது; மண்தரை, பூசாமல் ஈரமாயிருந்தது. அதில் எலி, பெரிச்சாளி, நண்டு, தேள் முதலிய ஜந்துக்கள் நிறைந்திருக்கும். கதவு, ஜன்னல் இல்லை. இது காரிருட் சிறை. இன்றே அது விளக்கைக் கண்டிருக்கிறது. இச் சிறையில் நான்கு தூண்கள் காண்கின்றன. அவற்றில் இருப்புச் சங்கிலிகள் இணைக்கப்பெற்றுள்ளன. தூண்களின் நடுவே ஒரு உருவம் மல்லாந்து கை கால் X வடிவில் விரிந்து விறைத்துக் கிடக்கிறது; அதன் கை கால்கள் அசையாமல் தூணிலிணைந்த சங்கிலிகளாற் பூட்டப்பெற்றுள்ளன. அதன் வயிற்றில் கற்கள் அடுக்கப் பெற்றுள்ளன. அந்தோ! இதென்ன பயங்கரம்! இதென்ன ஆளா, மரமா? ஆள்தான்; சட்டம் அவனை இப்படிச் சித்திரவதை செய்கிறது. இரும்புத் தடியன் ஜாடை காட்டினான். க்வின்ப்ளேன் போலீஸாருடன் கவனமாகப் படிகளில் இறங்கிப் பாதாளச் சிறைக்குள் நுழைந்தான். அவன் குடல் கலங்கியது; அஞ்சாத்தீரனாகிய அவனும் அஞ்சினான். அந்த ஆள் உயிரோடிருக்கிறான்; மூச்சுத் திணறுகிறது; மூச்சு விடமுடியாதபடி அவன் வயிற்றில் ஒரு இரும்புத் தகட்டை வைத்து, அதன்மேல் ஆறு பெரிய கற்களைத் தூக்கி வைத்திருக்கிறார்கள். கை கால் அசைக்க முடியாமல் சங்கிலிக்கட்டு! வாய்திறந்திருக்கிறது. தொண்டைக்கும் நெஞ்சிற்கும் இழுக்கிறது. கண் பஞ்சடைந்திருக்கிறது. முகத்தில் பிரேதக்களை தெரிகிறது.

இந்தக் கொடுங் காட்சியைச் சுற்றிக் கழுகுகள் போல் சட்ட அதிகாரிகள் சூழ்ந்திருக்கின்றனர். அதனருகே ஒரு விசுபலகையில் சிகப்புடைதரித்து ரோமன்—கம்பீரத்துடன், கையில் ஒரு ரோஜாக் கொத்துடன் வீற்றிருக்கும் கிழட்டுப் புலியே ஷெர்ரிஃப் (Sheriff). கையில் ரோஜாமலர் வைத்துக் கொண்டே கைதி-விசாரணை செய்வது அக் கால ஷெர்ரிஃபின் வழக்கம்.

அவர் பீடத்திற்கருகே ஒரு மேஜையில் தஸ்தா வேஜுகள், காகிதங்கள், பேனா, மைக்கூடு, சட்ட புத்தகங்கள் இவை இருக்கின்றன. ஷெர்ரிஃபின் பக்கத்தில் கறுப்புடைகளுடன் ஒரு டாக்டரும், ஒரு வக்கீலும் நிற்கின்றனர். ஷெர்ரிஃபிற்குப் பின்னால் பேனாப் பிடித்து காரியஸ்தன் அமர்ந்தான். அவன் மேஜை மேல், காயிதக் கட்டுகளும் ஒரு பழைய பத்திரமும் ஒரு சுரக்குடுக்கையும் உள்ளன. அங்கே தோற் சட்டை போட்டுத் தூணோடு தூணாக நிற்பவனே கொலையாளி கையில் கைதியைத் தருபவன்.

எல்லாரும் மௌனமாயிருக்கின்றனர். இந்தப் பயங்கர நரகக் காட்சியைக் கண்டதும் தூக்கி வாரிப் போட்டது க்வின்ப்ளேனுக்கு! நம்பிக்கை அவிந்தது; அங்கே வதையுண்ணும் கிழவன்போலவே அவன் முகமும் வெளுத்தது. அக் கிழவன் படும் மரண வேதனையை க்வின்ப்ளேனும் பட்டான். 'சரி, நம்மையும் இப்படித்தான் இங்கே கட்டி வதைக்கப்போகிறார்கள்' என்று அவனுள்ளம் பதைத்தது.

வதைபடும் கிழவனின் மேல்மூச்சைத் தவிர

வேறு சத்தமில்லாத அந்தப் பயங்கரச் சிறையில் "கிட்டவா!" என்றொரு குரல் எழுந்தது. அது ஷெர்rிஃப், க்வின்ப்ளேனுக்கிட்ட உத்தரவு. "இவர் தாம் ஷெர்ரிஃப், பணிந்து நடக்கவும்" என்று சட்ட அதிகாரிகள் க்வின்ப்ளேன் காதுக்குள் ஓதினர். க்வின்ப்ளேன் கைதிக்கருகே வந்தான்; அவன் முகத்தைக் கைதி முகத்தருகே நீட்டினர். ஆ, அம்முகத்தில் சாவு கூத்தாடியது; கண்கள் மூடின; வாய்திறந்து "ஹா ஐயோ!" என்று பெருமூச்சுவிடுகிறது.

"இக் கிழவனை ஏன் இப்படிக் கொல்லுகின்றனர். ஐயோ, சட்டத்தின் கொடுமை எவ்வளவு பயங்கரமாயிருக்கிறது? இந்தப் பாதாளச் சிறையில் மனிதனை அடைப்பதேன்? பிணங்கொத்திக் கழுகுகள்போல இவர்களெல்லாம் இக் கிழவனைச் சூழ்ந்ததேன்? இவர்களுக்கு இரக்கமில்லையா? ஒரு ஜீவன் வயிற்றில் ஆறு பெரிய கற்களை ஏற்றியிருக்கிறார்களே! அவன் கை கால்களை ஏன் இப்படிக் கட்டியிருக்கிறார்கள்? ஐயோ, மனிதனை மனிதன் ஏன் இப்படி வதைக்கவேண்டும்? இந்தச் சட்டக்காரர்களுக்கு உள்ளமும் உண்டோ? இரக்கம் உண்டோ? இவர்கள் மனிதர்களா? அல்லது மானைச் சூழ்ந்த புலிகளா?" என்று க்வின்ப்ளேன் இரங்கி மனமுடைந்து நின்றான்!

## 52. இவனே! இவனே!

ஷெர்ரிஃப் செருக்குடன் நிமிர்ந்தார்; சட்டம் பேசத் தொடங்கினர்; அருகிலிருந்த சார்ஜண்டு

பிரிட்டிஷ் சட்ட விதிகளை அவ்வப்போது, அக்கால வழக்கப்படி, லத்தீனில் படித்தான்.

ஷேர்ரிஃப்: கட்டுண்ட கைதியே, சர்வ வல்லமையுள்ள பிரிட்டிஷ் சட்டம் பேசுகிறது, கேள். நீ ஷாதாம் சிறையில் அடைபட்டிருந்தாய்; நாம் கேட்ட கேள்விக்கு மௌனம் வகித்தாய்; அதனால் காருண்யமுள்ள பிரிட்டிஷ் சட்டம் உன்னைப் பாதாளச் சிறைக்குக் கொண்டு வந்து, சங்கிலி மாட்டிப் பட்டினி போட்டது.

சார்ஜண்டு: ஆல்ப்ரட்டின் சட்டம், அத்தியாயம் ஆறு.

ஷேர்: காட்டுமிராண்டிகளைத் தவிர நாகரிகமுள்ள மனிதரெல்லாம் சட்டத்திற்குப் பணிந்தே நடப்பர்.

சார்ஜ: மனிதரை நாகரிகப்படுத்தவே சட்டம் ஏற்பட்டது; அதற்குக் கீழ்ப்படியாதவன் அசல் காட்டுமிராண்டி.

ஷேர்: நியாயாதிகாரிக்குப் பதிற்சொல்லாதவன் கொடிய குற்றவாளி. அவன் மஹாபாவி; எந்தத் தீமை செய்யவும் கூசாதவன்.

சார்ஜ: கனம் தங்கிய நியாயாதிபதிக்குப் பதில் சொல்லாமல் பிடிவாதம் செய்பவன், அதிகப் பிரசங்கி, அநாகரிக முட்டாள், போக்கிரி, ஹம்பக், திருடன், முரடன், கொலைஞன்........

ஷேர்: நீ பேசமாட்டேனென்று பிடிவாதம் செய்கிறாய்; உன்னிடம் கொடிய குற்றமிருப்பத

ருலேதான் அப்படிச் செய்கிறாய். நீதிபதிக்கு இப்படி மௌனம் சாதிப்பவன் பொய்யன், அப்பனைக் கொலை செய்த பாதகன்.

சார்ஜ: அசத்தியன், தகப்பனைக் கொன்றவன்.... ஆகிறான்....

ஷோ: நீதியின் முன் பிடிவாதம் செய்வது ஒரு புரட்சியாகும்; நீதியே அரசன், அரசி, அரசு. இந்தப் பிடிவாதக் கைதியை மாண்புள்ள ஆங்கிலச் சட்டம், குத்திக் குழியை வெட்டிப் புதைக்கும், உஷார்.

சார்ஜ: ஆங்கிலச் சட்டம் 1083-ம் ஆண்டு.... பிடிவாதக் கைதிக்கு விலங்கு, பாதாளச்சிறை, ஈட்டிக் குத்து....இவை உயிர் போகுமட்டும்.

ஷோ: மனிதா, உனது பிடிவாதத்தால், பிரிட்டிஷ் சட்டம் உன்னை இப் பயங்கரமான பாதாளச் சிறையில் தள்ளிக் கைகால் சங்கிலி கட்டி உன் வயிற்றில் கல் ஏற்றியது.

சார்ஜ: சட்டப்படி இன்னும் இரண்டு கல் ஏற்றலாம்.

ஷோ: நாம், சர்ரே ஜில்லா ஷெரிஃப், கேட்பதற்கு வாயடைத்துப்போனாய்........உம்.

சார்ஜ: இந்தமாதிரிக் கைதிகளைக் கைகால் சங்கிலி பூட்டிக் கல்லேற்றிப் பட்டினிபோட வேண்டும்—கருணையுள்ள சட்டம்.

ஷோ: அட மனிதா, முதல் நாள் உனக்கு உண்ண, குடிக்க ஒன்றும் தரவில்லை.

சார்ஜ: அதுவே சட்ட சம்மதம்.

ஷேர்: இரண்டாவது நாள்....

சார்ஜ: மூன்று துண்டு வரட்டு ரொட்டி வாயிலே திணிக்க வேண்டியது; தண்ணீர் தரக் கூடாது—சட்டம்.

ஷேர்: அப்படியே அனுப்பிசகாமல் சட்டத்தை மதித்து நடந்தோம். இன்று நான்காவது நாள். இன்னும் பிடிவாதம் செய்தால்....

சார்ஜ: இப்படிச் சங்கிலி கட்டி, கல்லேற்றிய படியே சாகும்மட்டும் விட்டு வதைக்கவேண்டியது—சட்டம்.

ஷேர்: ஆமாம் கவனம்; இன்னும் கல்லேற்று வோம். நவத்வாரங்களிலும் இரத்தம் கக்கும், விழி பிதுங்கும், இப்படியே சாவாய்.

சார்ஜ: முடிவில் கண், காது, வாய், ஆஸனம்—அனைத்தின் வழியாகவும் இரத்தம் பீறிட்டுச் சாகும்படி விட்டுவிடுக.—யாரும் உதவி செய்யற்க, இரங்கற்க—சட்டம்.

ஷேர்: மனிதா, குற்றத்தை ஒப்புக்கொண்டால், உன் இழவிற்குக் கொஞ்சம் பணம் தருவோம்; கருணையுள்ள பிரிட்டிஷ் சட்டம் உன்னை இப் பாதாள சிறையிலிருந்து விடுவித்து, நேராகத் தூக்குமேடைக்குக் கொண்டு செல்லும். அங்கே காற்றுடத் தொங்கலாம். மூச்சுப்போனபிறகு சர்க்கார் செலவிலேயே உன்னைக் குழிதோண்டிப் புதைப்பர்.

சார்ஜ: குற்றத்தை மறுத்தால் பாதாளச்

சிறையில் விறைக்க வேண்டியதுதான்; ஒப்புக்கொண்டால் தூக்குமேடையில் சாகும் நன்மை கிடைக்கும். அவன் இழவிற்குச் சர்க்கார் பணம் தண்டும். குற்றச் சட்டம்.—புத்தகம் ஒன்று, பக்கம் 173.

ஷேர்: நாம் சொல்வது கேட்கிறதா? மனிதா, சர்வ வல்லமையுள்ள சட்டம் கட்டளையிடுகிறது; பேசு; இன்றேல் மாண்புள்ள இராணிக்குக் குற்றம் செய்தவனாவாய்.

ஆள் பேசவில்லை; கண்ணைத் திறக்கவில்லை; துயர்தாங்காமல் அடிக்கடி பெருமூச்சு விட்டான். பிறகு டாக்டர் பரிசோதனை செய்து உயிர் இருக்கிறது, பார்வையும் இருக்கிறது என்றார்.

இச் சமயந்தான் இரும்புத்தடியன் க்வின்ப்ளேன் முகத்தை அக் கிழவன் முகத்திற்கு நேரே காட்டினான்.

ஷேர்: ஏழையே, பேசு; நீ செத்தாலும் சட்டம் உன்னைவிடாது. சாகு முன் சட்டத்தை மதி; இப் பயங்கரமான இடத்தில், உன்னைவிட்டு விடுவோம். நாமும் மனிதர்; நீயும் மனிதன்; உன்மேல் இரக்கப்பட்டுச் சொல்லுகிறோம். சகோதரா, மகனே, நாம் கிழவர்; இந்தத் தண்டனையை உனக்கு விதித்து வருந்துகிறோம் இதோ இன்னும் கொடுமையான தண்டனை விதிக்கப்போகிறோம். எமக்கே அதைச் சொல்ல உள்ளம் நடுங்குகிறது. சட்டத்தின் பிரதிநிதி நாம்; சட்டம் கொடியது; நமக்கு இரக்கம் உண்டு; சட்டத்திற்கு அது கிடையாது; அடா பேதையே, இதோ சட்டம் தனது கோர ரூபத்தைக் காட்டப்போகிறது; நீ இந்த

இருட்பாதாளத்தில் மார்பில் கல் சுமந்து வருந்து வாய்; சட்டம், ரொட்டி, தண்ணீர் தராது; கொலைப் பட்டினிதான் உன் கதி; உனக்குமேலே தெரு வண்டிகள் உருளும், ஜனங்கள் நடப்பர்; கீழே, எலிகளும், விஷப்பூச்சிகளும் உன் உடலைக் கண்ட துண்டமாக்கி யுண்ணும். உன்னை யாரும் கவனிக்க மாட்டார்கள். இப்படியே மூச்சடைத்து, அழுகிப் புழுத்து மண்ணோடு மண்ணாவாய்—கவனம். உனக்கு நல்லது சொல்லுகிறோம். இதோ பார்—இந்த ஆளை அடையாளம் தெரிகிறதா—சொல்?

இரும்புத்தடியன் கிழவன் கண்ணிமைகளை நீக்கினான்; க்வின்ப்ளேன் முகத்தை அவன் அருகே காட்டினான். அவனைக் கண்டதும் கைதி கண்ணை வியப்புடன் மலர்த்தினான்; அவன் உடல் நடுங்கியது. தலையைத் தூக்கி,

“ஆம், இவனே, இவனே, இவனே!” என்று உரக்கக் கூவிச் சிரித்தான். பிறகு தலையைக் கீழே போட்டுக் கண்ணை மூடினான். ஷெரிஃப் உத்திரவுப் படி குமாஸ்தா இவ் வார்த்தைகளைக் குறித்துக்கொண்டான்.

க்வின்ப்ளேனுக்குக் குடல் நடுங்கிற்று. “ஏதோ குற்றத்தை ருஜுப்படுத்த வல்லவா நம்மை இங்கே கொண்டுவந்தனர்; ‘இவனே, இவனே (குற்றவாளி)’ என்று இக் கிழக்கைதி சொல்லுகிறான்,” என்று பதறினான்; வாய்விட்டுக் கதறினான்....

க்வின்: அவன் சொல்வது உண்மையல்ல; நான் அல்லன்; இவனை யான் அறியேன்; அவனும்

என்னை அறியான்; இன்று மாலை எனக்கு ஆட்டம் உள்ளது; நான் போகவேண்டும்.

என்னை ஏன் இக் குகைக்குக் கொணர்ந்தீர்கள்; நான் குற்றமற்றவன்; யாருக்கும் தீங்கற்றவன். என்னை விடுவியுங்கள். ஐயோ, பிரிட்டிஷ் தீவில் நீதியில்லையா? சட்டமில்லையா? நீதிபதியே, நான் போக வேண்டும்; இந்த மனிதனுக்கும் எனக்கும் எச் சம்பந்தமும் கிடையாது; என்னிடம் ஒளிவு மறைவு கிடையாது. நான் கோமாளி; தெருவிலும், சந்தையிலும் ஆடிப் பிழைப்பவன்; நான் இளிச்சவாயன்; என் வயது இருபத்தைந்து. நான் டாட்காஸ்டர் விடுதியில் இருக்கிறேன். என் பெயர் க்வின்ப்ளேன்; நான் ஏழை; ஏதுமறியேன்; கொடுமை செய்யாதீர்கள்; என்னை உடனே இதைவிட்டு வெளியேற்றுங்கள். நீதிபதியே, தங்கள் முன் ஒரு பரம ஏழை, கோமாளி, இளிச்சவாயன், க்வின்ப்ளேனைப் பார்க்கிறீர்கள்.

ஷெரீ: என் முன்னே, க்ளான்சார்லி, ஹங்கர்வில், ஸிஸிலியிலுள்ள கோர்லியோன்—ஆகிய மூன்றின் எஜமானைப் பார்க்கிறேன்; ஃபெர்மேன் (Fermain) க்ளான்சார்லியைப் பார்க்கிறேன். இவ்வாறு சொல்லி ஷெரீஃப் எழுந்து மரியாதை செய்து தனது ஆசனத்தைக் கொடுத்து "பிரபுவே, இதில் அமர்ந்தருளும்" என்று வணங்கினார்.....

## 53. இளிச்சவாயன் யார்?

ஊழ்வட்டம் சுற்றுவதைப் பாருங்கள்! சற்று முன்பு கோமாளியாயிருந்தவன் இதோ சோமான்

ஆனான்! க்வின்ப்ளேன், க்ளான்சார்லி மகன். ஆங்கிலப் பிரபு என்பது விளங்கியது; இளிச்சவாயன் பிரபுவானான்!

க்வின்ப்ளேனுக்கு ஒன்றும் விளங்கவில்லை; ஷெரிஃப் பேசுவது தன்னைக்குறித்தா என்று திகைத்தான்; காதை நம்பமுடியவில்லை. இரும்புத்தடியனும், நியாயவாதிகளும் மரியாதையாகக் கைகொடுத்து அவனை ஷெரிஃபின் நாற்காலியில் உட்காரவைத்தனர்.

ஷெரிஃப் ரோஜாக் கொத்தை மேஜைமேல் வைத்தார்; சாசன குமாஸ்தா மூக்கண்ணாடி தந்தான். அதைப் போட்டுக்கொண்டார். மடிந்து மடிந்து மங்கிப் பழசாய்ப்போன ஒரு பத்திரத்தைப் பிரித்து, விளக்கு வெளிச்சத்தில் இவ்வாறு படித்தார்:

கடலில் முழுகிய கோம்ப்ராஷிகர் அறிக்கை:—

"பரமபிதா, திருக்குமாரன், பரிசுத்த ஆவி துணை........கி. பி. 1690 ஜனவரி மாதம், 29-ந் தேதி, போர்ட்லாந்துப் பாறையில் குளிர், பசி, தனிமையால் சாகட்டும் என்று ஒரு பையனைக் கொடுமையாகக் கைவிட்டோம். அவனுக்குப் பத்து வயது. இங்கிலாந்தின் மகா மாண்புள்ள காருண்ய மன்னன் ஜேம்ஸ் II-ன் உத்திரவால் நாங்கள் இக் குழந்தையை விலைக்கு வாங்கினோம். இவன் சொந்தப் பெயர் ஃபேர்மேன் க்ளான்சார்லி. இக் குழந்தை யார் என்றறியுங்கள்: ஹங்கர்வில், க்ளான்சார்லி முதலியவற்றின் பாரன், ஸிஸிலியிலுள்ள கோர்லியனுக்கு எஜமான், ஆங்கில ராஜ்யத்தின் மஹாப்பிரபு,

ஆகிய வின்னுஸ் க்ளான்சார்லியின் சொந்தப் புதல்வனே இப் பையன். இவன் தாயின் பெயர் ஆன் ப்ராட் ஷா. தகப்பன் சொத்துச் சுகங்களுக்கெல்லாம் இவனே சரியான வாரிசு. இந்த வாரிசு, பாத்தியத்தை இன்னொருவருக்குத் தரவேண்டுமென்ற கருத்துடன் காருண்ய மன்னன் ஜேம்ஸ், இக் குழந்தையை எங்களுக்கு விற்றான். தகப்பனார் இறந்தார்; தாய் இறந்தாள்; இக் குழந்தைக்கு இரண்டு வயது; சார்லி பிரபுவின் சேவகனுக்கு அரசன் ஒரு உத்தரவிட்டான். உடனே சேவகன் கொம்ப்ராஷிகனை என்னிடம் குழந்தையைக் கொடுத்தான்; நான் அரசனுக்குப் பத்துப் பவுன் விலை செலுத்தி ரசீது பெற்றேன். அதுவும் இத்துடன் உள்ளது.

இக் குழந்தை வெகு அழகாயிருந்தது; அடையாளந் தெரியாமல் இருக்க, நானே இக் குழந்தையை உடனே இப்படி உருக்குலைக்க முற்பட்டேன். ஹார்திகானன் என்ற புகழ்பெற்ற ரணவைத்தியனே இவனை இளிச்சவாயனாக்கினான். புக்காஃபிஸ்ஸா யுஸ்க் அட் ஓரெஸ் (Bucca, fissa usque ad aure-) என்ற அந்த ரண வைத்தியம் அவனுக்கே தெரியும். இந்தப் பையன் ஒருவனுக்கே அவன் இப்படிச் செய்தான். இந்த இளிச்சவாய்க் குழந்தையைக் கோமாளியாகப் பழக்கி ஊர் ஊராகக் காட்டிப்பிழைத்தோம். இப் பையனுக்கு 'க்வின்ப்ளேன்' என்று பெயரிட்டோம்; தனது பிறப்பு வரலாறெதுவும் அவனுக்குத் தெரியாது. தான் க்ளான்சார்லி பிரபு மகன் என்பதை அவன் அறியான். இரண்டு வயது முதல் இக் குழந்தையை நானும் எனது

கொம்ப்ராஷிக நண்பரும் வளர்த்தோம். எவ்வளவு வயதானாலும் குழந்தை முதிர்ந்து நரை கிழவனானாலும் அவனை ஹார்திகானன் அடையாளம் கண்டுபிடித்து விடுவான். இதை எழுதும்போது, ஹார்திகானன் சாதாம் இருட்சிறையில் அடைபட்டு வருந்துகிறான். அவனைக் கொம்ப்ராஷியான குற்றத்திற்காக வில்லியம் III-ன் சட்டம் சிறையிட்டது.

இக் குழந்தையை விற்ற சேவகனும் இறந்து போனான். ஆகையால், இக் குழந்தையின் பிறப்பை யறிந்தவர் நாங்களும் ஹார்திகானனுமேயாவோம். இதோ நாங்கள் கடலுக்கு இரையாகப்போகிறோம். முடிவில், இக் குழந்தையின் இரகசியத்தைச் சொல்லக் கூடியவன் ஹார்திகானன் ஒருவனேயாவன். எட்டாண்டுகளாக இப் பிரபு வீட்டுக் குழந்தையை இளிச்சவாயனாக்கி எங்கள் தொழிலுக்காக வளர்த்தோம்; இவனை ஊர்தோறும் காட்டிப் பிழைத்தோம். வில்லியம் III-ன் கடுமையான சட்டம் எங்களைத் துரத்தியது; ஹார்த்திகானன் படும் சிறைத்துயர் எங்களுக்கும் வரக்கூடாதென்றே அவசரம் அவசரமாகப் போர்ட்லாந்து பாறையில் க்வின்ப்ளேனை விட்டுப் படகேறிச் சென்றோம். பெரும் புயலெடுத்து எங்கள் படகு மூழ்கியது; எங்கள் பாபத்திற்காக இறைவன் எங்களைத் தண்டித்தான். அந்தப் பையனை நடத்திய கொடுமைக்காக நாங்கள் வருந்துகிறோம். மன்னன் இச் செய்தியை இரகசியமாக வைத்துக் கொள்ளச் சொன்னான்; ஆனால், கடவுளிடம் எங்கள் மனத்தை ஒளிக்க முடியுமா? இதோ எங்கள் பிழைகளை வருந்திப் பரம பிதாவிடம் மன்னிப்புக் கேட்கி

ேறும். அந்தக் குழந்தையின் வரலாற்றை அரசன் தந்த பத்திரத்திலேயே எழுதி, ஹார்திகானன் சுரக் குடுக்கையிலேயே போட்டு மூடித் தார் பூசிக் கடலில் விடுகிறேம். யாராவது என்றாவது, அதைப் பார்த்துக் குழந்தையைக் கண்டுபிடித்து, அவன் க்ஷேமமாயிருந்தால் எங்கள் ஆவி மகிழும். பரம பிதா துணை; பரிசுத்தக் கன்னி துணை.

டாக்டர் ஹெர்னார்துஸ் ஸ்பீஸ்துமூந்து....முதலியோர் (இப் பெயர்களை முன்பே குறித்துள்ளோம்)

ஷோ்: இந்தப் பத்திரம் அரசர் தந்தது; இதோ ஜேம்ஸ் II-ன் கையெழுத்து உள்ளது:—'அரசன் உத்திரவுப்படிக் குழந்தையை இன்று பொறுப்பேற்றேம்.'

"ஆமோதித்தோம். ஜேம்ஸ் II"

இதெல்லாம் க்வின்ப்ளேனுக்கு ஒரு மாயக் கனவாயிருந்தது. "ஹெர்னார்துஸ், ஆம், டாக்டர், கிழவன், துக்கப்பட்டவன், அவனிடம் நான் பயப்படுவேன். கெய்ஜ்தோரா, தலைவன், அவனைக் கண்டால் எனக்குப் பயம். இரண்டு பெண்களும் உண்டு; இன்னொருவன், ஹார்திகானன் பெயரைச் சிவப்பு நிறத்திற் பின்னிய ஒரு சுரக்குடுக்கையில், சாராயம் வைத்துக் குடிப்பான்...." என்று அவன் முணுமுணுத்தான்.

"இதோ அந்தக் குடுக்கை" என்று ஷெரிஃப் காட்டினன். ஆம், அதுவே கொம்ப்ராஷிக் கிழவன் கடலில் விட்ட குடுக்கை; அதுவே க்வின்ப்ளேனின் அதிர்ஷ்டக் குடுக்கை. "ஃபெர்மேன் பிரபுவே, இதுவே ஹார்திகானன் குடுக்கை; அவன் பெயர் இதோ மங்க

லாகத் தெரிகிறது," என்றார் ஷெர்ரிஃப். பிறகு அவர் கைதிக்குத் தீர்ப்புக் கூறினார்.

ஷெர்: துஷ்டா! சர்வ வல்லமையுள்ள சத்திய தேவதை உனது கொடுமையை இதோ வெளியேற்றியது. உண்மையை யார் ஒளிக்கமுடியும்? ஹார்திகானன், இக் குடுக்கையை முதலில் உனக்குக் காட்டினோம்; பத்திரத்திலுள்ள உண்மையைக் கேட்டோம்; உண்மை சொல்ல மறுத்தாய்; பையன் அகப்படமாட்டான் என்று நினைத்து அப்படிச் செய்தாய். இதோ ஃபெர்மேன் க்ளான்சார்லி. அவனைக் கண்டதும் உன் மனத்தை ஒளிக்கமுடியாமல் உண்மையை ஒப்புக்கொண்டாய்.

கைதி (ஈனக்குரலில்): ஜேம்ஸ் மன்னனிடம் இரகசியத்தைக் காப்பாற்றுவதாகச் சத்தியம் செய்தேன்; அதை முடிந்தமட்டும் காத்தேன்; நாங்கள் கொடியராயினும் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க மாட்டோம். நண்பரைக் காட்டிக் கொடுக்கமாட்டோம். எங்கள் நரக வாழ்விலும் ஒரு நாணயம் உண்டு. இன்று ஆளே நேரில் வந்துவிட்டான். இனி மௌனம் பலிக்காது; ஆதலால், நான் பேசினேன். இவனே ஃபெர்மேன் சார்லி; இவனையே அரசன் எங்களுக்கு விற்றான்; நானே இவனை இளிச்சவாயனாக்கினேன்.

பிறகு கிழவன் க்லின்ப்ளேனை உற்றுநோக்கி, "எப்போதும் இளித்துக்கொண்டேயிரு" என்று "பக்" கென்று சிரித்தான். உடனே அவன் தலை கீழே விழுந்தது; கண்மூடியது.

ஷேர் : ஹார்திகானன், மூன்றுநாள் வற்புறுத்திய பிறகு நான்காம் நாள் உண்மை சொன்னாய்; பாதாளச் சிறையினின்று இனி விடுபடுவாய்; காருண்யமுள்ள இராணியின் நேர்மையான சட்டம், இனி உன்னைத் திறந்த வெளியில் தூக்குப்போடும்.

சார்ஜ: குழந்தையை வாங்கி விற்கும் கொம்ப-ராஷிக் குற்றம், ஏழாவது சட்ட புத்தகம், மூன்றாவது அத்தியாயம்—குழந்தை விற்பவன் கொள்ளைக் காரன்—தண்டனை தூக்குமேடை.

ஷேர் : ஹார்திகானன் ; இனிப் பாதாளச் சிறை உனக்கில்லை ; இராணியின் கருணையை வணங்கிக் காற்றாடத் தூக்கு மேடையில் தொங்கலாம். எழுந்திரு.

சார்ஜ : தீர்ப்பானதும், கல்லையெடுத்துச் சங்கிலியைக் கழற்றி ஆளை எழுந்து நிற்கச் செய்க—சட்டம்.

அவ்வாறே கொலையாளி ஹார்திகானன் மார்பினின்றும் கல்லை யெடுத்தான் ; சங்கிலியை அவிழ்த்தான் ; ஹார்திகானன் X வடிவில் கை கால் பரப்பிய படியே விறைத்துப்போனான்.

ஷேர் : ஹார்திகானன், உனக்கு நல்லகாலம் வந்தது ; எழுந்து தூக்குமேடைக்குச் செல்....இதோ இவர்கள் பின்னே செல் ; மெல்லச்செல்....கண்விழித் தெழுந்திரு........

ஆள் எழுந்திருக்கவில்லை ; கண் திறக்கவில்லை ; வாய் சிரித்தவாக்கில் இருந்தது. உறக்கமா ? ஆம், உலகத்துன்பங்களையெல்லாம் ஒழிக்கும் நித்திய

உறக்கமே! டாக்டர் பார்த்தார், சோதித்தார். "உயிர் போயிற்று; சிரித்தான், செத்தான்" என்றார். குழந்தையை இளிக்கவைத்தான்; தான் செய்த பாவத்தைப் பார்த்து, இளித்தவாக்கில் இறந்தான் ஹார்திகானன்.

"சரி, சிறைக்கருகேயிருக்கும் மயானத்தில் இவனைக் கொண்டுபோய்ப் புதையுங்கள்" என்று ஷெர்ரிஃப் உத்தரவிட்டார். உத்தரவை குமாஸ்தா எழுதினான். ஷெர்ரிஃப் கையெழுத்திட்டார். உடனே அவர் க்வின்ப்ளேனை நோக்கி வணக்கமுடன் இவ்வாறு கூறினார்:—

"வணக்கம்; மாண்மை அரசி ஆணையால், ஸர்ரே வட்டாரம் ஷெர்ரிஃபாகிய நான், எனது குமாஸ்தா, சேவகர் அனைவரும், எங்கள் கடமையைச் செய்ய இங்குற்றோம்; கடல் இலாக்காத் தலைவர் அனுப்பிய இந்தப் பத்திரத்தை நேர்மையாக மெய்ப்பித்தோம்; படித்து, கேட்டு, வினவி, விசாரித்து, விளக்கி, அத்தாட்சி காட்டி, ருசுப்படுத்தி, மேற்கொண்ட காரியம் சட்டப்படி இனிது முடிந்தது. தாங்கள் ஃபெர்மேன் க்ளான் சார்லி; ஹங்கர்வில், க்ளான்சார்லி, கோர்லியோன்—இம் மூன்று ஊர்களுக்கும் தலைவர்; தாங்கள் ஆங்கில மஹாப்பிரபு; இறைவன் தங்கள் உண்மையை வெளிப்படுத்தினான்; சட்டம் தங்கள் மேலான பிறப்பை விளக்கியது; வந்தனம்.

ஷெர்ரிஃபும், சேவகரும் பெர்மேன் பிரபுவுக்குத் தாள்பணிந்து வந்தனம் செய்தனர். க்வின்ப்ளேன் திகைத்தான், மயங்கினான். "ஆ! இதென்ன? என்னை எழுப்புங்கள்!" என்று அலறினான். அதே சமயம்

"இதோ தங்களை எழுப்பவே வந்தேன்" என்று தூணுக்குப் பின்னிருந்து ஒரு தொந்திக் கிழவன் வெளியே வந்தான்—பர்க்கில்ஃபெத்ரோ !

"ஆம், நான் தங்களை எழுப்பவே வந்தேன்; இருபத்தைந்து ஆண்டுகளாகத் தாங்கள் உறங்கினீர்கள்; ஏதோ கனவில் ஆழ்ந்தீர்கள்; கனவு விட்டது; எழுந்திருங்கள். நீங்கள் க்வின்ப்ளேனல்ல. நீங்கள் க்ளான் சார்லி பிரபு. ஏழையல்ல, நீங்கள் மஹாப் பிரபு, கோடீசுவரர். கோமாளியல்ல, நீர் கோமான்; சிறியரல்லர், தாங்கள் பெரியார். என் பிரபுவே எழுந்திரும்" என்றான் அந்த மனிதன்.

"இதெல்லாம் என்ன ?" என்று க்வின்ப்ளேன் முணுமுணுத்தான்.

"என்னவா ? என் பிரபுவே, என் பெயர் பர்க்கில்ஃபேத்ரோ ; நான் கடல் இலாகா உத்தியோகஸ்தன் ; எனக்குப் போத்தல் உடைக்கும் வேலை உண்டு. கடற்கரையில் கண்டெடுத்த ஹார்திகானன் குடுக்கையை நானே உடைத்தேன். அதிலுள்ள பத்திரத்தை நானே மஹாராணியிடம் காட்டி விளக்கினேன். இங்கு நடந்த விசாரணைக்கெல்லாம் காரணம் நானே. அதன் பயனாகவே தாங்கள் ஃபெர்மேன் க்ளான் சார்லி யானீர் ; ஆங்கில மஹாப் பிரபுவானீர். உயர்ந்த நீதிபதி யானீர் ; தலையில் பிரபுக்குரிய கிரீடம் பூண உரியரானீர். அதனால், தாங்கள் ஒரு ராஜாத்திக்குக் கணவரும் ஆனீர்........" க்வின்ப்ளேனுக்கு இவையெல்லாம் தலையைச் சுழற்றின. அவன் பேச்சற்று மயக்கம் போட்டு வீழ்ந்தான் !

## 54. இராணிக்குச் சந்தோஷம்!

இவ்வளவு கதையும் ஒரு குடுக்கையால் வந்தது. அதைப்பற்றி முன்பே அறிந்தோம். குடுக்கையுள் இந்த பத்திரத்தைக் கண்டதும் மஹாராணி அதைப் பற்றித் துப்பு விசாரிக்கத் தக்கவரைப் பணித்தாள். ஜெனிவாவில் விசாரித்ததில், க்ளான் சார்லி மணம் புரிந்தது, குழந்தை பிறந்தது, பெற்றோர் இறந்த பின் பிள்ளை மறைந்தது எல்லாம் வெளிப்பட்டன.

சாவு, பிறப்பு, கலியாணம் எல்லாவற்றையும் மேனாட்டார் பதிவு செய்வர். ஆதலால், க்ளான் சார்லி-ப்ராட்லா விவாகப் பத்திரம், ஃபெர்மேன் சார்லி பிறப்புப் பத்திரம், குழந்தையின் பெற்றோர் இறந்த பத்திரம் எல்லாம் ஜெனிவா பதிவு நிலையத்தில் இருந்தன; அவற்றிற்கு நகல் எடுத்தனர். இராணியின் ஆட்கள் ,ஜேம்ஸ் II, ஃபெர்மேன் சார்லியை கொம்ப்ராசிகருக்கு விற்றதும் பிறகு நடந்ததும் குடுக்கைக்குள் இருந்த பழைய பத்திரத்தில் தெளிவாயின. ஜேம்ஸ் II, அன்னாளின் தந்தை; தந்தை கையெழுத்தை மகள் அறிவாள். ஆதலால், பத்திரம் உண்மையானது.

ஜேம்ஸ் II எனிப்படிக் கொடுமையாக ஒரு குழந்தையைக் கெடுத்தான்? அதைப்பற்றிப் பேச்சில்லை; "மஹா சந்நிதானத்திற்கு அப்படித் தோன்றியது; நடந்தது. ஜான் மன்னன், ஆர்தர் கண்ணைப் பிடுங்கவில்லையா? 'குடிகளின் உயிரும் உடலும் கோமானைப் பொருத்தன; அவன் இச்சை வைத்ததே சட்டம்' என்பது விதியல்லவா? படுக்கை அறையில் மேலே இன்

னொரு தடித்த மெத்தைபோட்டு, மூச்சைப்பிடித்து, அரியணைக்குரிய எத்தனையோ இளவரசரைக் கொன்று தீர்த்து, அவர் மயக்கம்போட்டு இறந்ததாக விளம்பரம் செய்திருக்கிறது அரசர் இச்சை. டியூனிஸ் மன்னன், தனது தந்தையின் விழிகளைத் தோண்டிவிட்டுப் பட்டத்திற்கு வந்தான். "ஆதலால் அரசன்மேல் அணுவும் குற்றமில்லை. மேலும், ஜேம்ஸ் மன்னன் குழந்தையைக் கொல்லவில்லை. உயிரோடு கொம்ப்ராஷிகரிடம் கொடுத்தான்; கொம்ப்ராஷிகர் அவனை இளிச்சவாயனாக்கினர்; அவ்வளவுதான்; பரவாயில்லை. எப்படியும் க்ளான் சார்லியின் சொத்திற்கு உரிய வாரிசு கிடைத்துவிட்டது. இப்போது அந்தச் சொத்து, டிர்ரிமோருக்கும் ஜோஸேனுக்கும் ஜேம்ஸ் II ஆல் கொடுக்கப்பெற்றுள்ளது. இனி அது ஃபெர்மேன் சார்லியைச் சேரும். டிர்ரிமோருக்கு இன்றே கடல் இலாகா துணைத் தலைவர் (வைஸ் அட்மிரல்) பதவியைத் தந்தனுப்பிவிடுவோம். ஜோஸேனுக்கு ஃபெர்மேன் சார்லியைக் கணவனாகத் தருவோம். இருவரும் க்ளான் சார்லி சொத்தை அனுபவிக்கட்டும். க்வின்ப்ளேன், க்ளான் சார்லி மகனே என்பது விளங்கியது; எனினும் சாதாம் சிறையிலுள்ள ஹார்திகானன் முன்பு அவன் முகத்தைக் காட்டி இவனே அக் குழந்தை என்பதையும் நிரூபிக்கவேண்டும். எல்லாம் நாளையே நிறைவேறுக" என்று இராணியும் அரசாங்க நீதிபதியும் இரகசியமாகக் கூடிப்பேசித் நிர்மானித்துக் காரியத்தை நடத்திவிட்டனர். அனைத்தையும் இரகசியமாக நடத்தினவன் பார்க்கில்ஃபெக்ரோதான். விண்ட்ஸர் அரண்மனையில், இராணி அன்று

ளின் அறையை விட்டுச் செய்தி முடிவுமட்டும் வெளியேறுமல் அவன் காத்தான். இப்போது எல்லாம் உண்மையானது. தன்னால் வெளிப்பட்ட புதிய பிரபுவுக்குத் தானே பிரபு என்று பர்க்கில் ஃபெத்ரோ இறுமாந்தான்; ஃபெர்மேன் பிரபுவைக் குலாம்போட்டு, ஏராளமான செல்வமும் ஒரு பிஷப் வேலையும் பெறலாம் என்று மனக்கோட்டை கட்டினன். எப்படியும் டிர்ரிமோர் செல்வத்தை யிழக்கச் செய்தான். ஜேம்ஸ் II அவனுக்கீந்த சொத்து சுகமெல்லாம் இனி ஃபெர்மேன் சார்லிக்கே சேரும். டிர்ரிமோருக்குக் கடல் இலாகா துணைத் தலைவன் வேலையே நிலையானது. தனது அழகிலும் இளமையிலும், செல்வத்திலும் தலை தெறித்து நடந்த ஜோஸேனுக்கு ஒரு அவலக்ஷணக் கோமாளி கணவனுகிருன். பர்க்கில்ஃபெத்ரோ வயிற்றில் பால் வார்த்ததுபோலிருந்தது. இராணி அன்னுளுக்கு மனங்கொள்ளா மகிழ்ச்சி; ஏன்? தனது அழகில் இறுமாந்த தங்கை ஜோஸேனுக்கு, அவலக்ஷணக் கோமாளிக் கணவன் வாய்த்தானல்லவா? இனி அவள் மண்டைக் கருவம் இறங்கிப்போகும் என்பதே அவள் மகிழ்ச்சி. மற்ருென்று; தந்தை செய்த குற்றத்திற்குப் பரிகாரமாக, ஃபெர்மேன் சார்லியைக் கண்டுபிடித்து, அவனுக்குரிய சொத்து, சுகம், பட்டம் அனைத்தையும் தந்த மகிழ்ச்சி. எப்படியோ அனுதையாகப் போர்ட்லாந்துப் பாறையில் திண்டாடிய குழந்தைக்கு ஒரு புகல் கிடைத்தது. அவனைக் கொடுமை செய்த கொம்ப்ராஷிகரைக் கடல் விழுங்கியது. அவர் தன்னிடம் விடுத்த குடுக்கையை அது

கரைசேர்த்தது; அக்கடலின் கருணையே க்வின் ப்ளேனை ஃபெர்மேன் சார்லி பிரபுவாக்கியது; இறைவன் அருள் இவ்வாறு விளங்கியது!

## 55. எங்கே இருக்கிறேன்!

சுரக்குடுக்கையில் பத்திரத்தைக் கண்டு, இராணியிடமும் சூழ்ச்சி செய்த பின்பு, பார்க்கில் நெடுநாள் பொறுமையிழந்திருந்தான். ஏனெனில், பத்திரத்திற் கண்ட, க்வின்ப்ளேனை அவன் கண்ணால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு நாள் டாட்காஸ்டர் விடுதி வாசலில் "க்வின்ப்ளேன், இளிச்சவாயன்" என்ற அறிக்கையைக் கண்டதுமே "நமது காரியம் ஜயம்," என்று பார்க்கில்ஃபெத்ரோ ஒரு துள்ளுத் துள்ளினான். இளிச்சவாயனைப்பற்றி அக்கம்பக்கத்தில் விசாரித்தான். பிறகு ஒரு நாள் இளிச்சவாயன் கூத்தைப் பார்க்கச் சென்றான். கப்பலுடைந்த மாலுமிக்குத் தெப்பக் கட்டை அகப்பட்டதுபோல மகிழ்ந்தான். "இதோ நான் தேடிய ஃபெர்மேன் சார்லி பிரபு; இவனுக்குரிய சொத்தையல்லவா அந்த டம்பாசாரியான டேவிட்மோரும், அந்த மண்டைக் கருவம்பிடித்த ஜோஸேயனும் அனுபவிக்கிறார்கள். இருவரும் வைப்பாட்டி பிள்ளைகள். அந்தச் செல்வத்திற்குரிய பிள்ளை இதோ; இனி இந்தப் பிள்ளை என் செல்வம்; எனக்கினிக் குறைவில்லை" என்று மகிழ்ந்தான். ஜோஸேனிடம், விஷயம் சொல்லாமல், இளிச்சவாயனை வானளவு உயர்த்திப் பேசினான். "அம்மா, தாங்கள் அவசியம் அந்த ஆளைப் பார்க்கவேண்டும். என்ன அழகு, என்ன மந்தஹாஸம், சிரித்த வாய் மூடுவதில்லை, வாழ்க்கை

இன்புறவேண்டுமானால், அவன் பக்கத்தில் இருந்தாற் போதும். அவனைப் பார்த்தாலே மதிகண்ட கடல் போலே உள்ளக் களிப்பெழுந்து பொங்கும்" என்றெல்லாம் சொல்லி, ஜிலுஜிலுப்பாக அணிகள் பூணச் செய்து, ஜோஸேனைக் கூத்திற்கு அழைத்துச் சென்றான். அதனின்று வந்த கூத்தை நாம் அறிவோம். ஜோஸேனுக்கு யார்மேலாவது பிரியம் விழுந்தால், தனது கீச்சுக்குரல் சேவகனிடம் கூசாமல் கடிதம் அனுப்பிக் கூட்டிவரச் சொல்லுவாள். அவ்வாறே க்வின்ப்ளேனுக்கும் அவள் கடிதம் அனுப்பினாள்.

இதற்குள் விண்ட்ஸர் அரண்மனையில் பெரிய சதியாலோசனை நடந்தது. டிர்ரிமோரைக் கடல் வேலை தந்து அனுப்பிவிட்டாள் இராணி; க்வின்ப்ளேனை ஃபெர்மேன் சார்லி என்று நிரூபிக்கச் செய்தாள். ஜோஸேனை அவசரமாகத் தன்னிடம் வரச் செய்தாள். அப்போது ஜோஸேன் அரண்மனையில் வேறு யாரும் இல்லாமற் செய்தாள். இவ்வளவு ஏற்பாடுகளும் செய்த பிறகு, அவசரமாக உடனே வரும்படி டிர்ரிமோருக்குச் செய்தியனுப்பினாள்.

பாதாளச் சிறையில் பார்க்கில்ஃபெத்ரோ பேசும் போது, க்வின்ப்ளேன் மயக்கம்போட்டு விழுந்தான் அல்லவா? உடனே பார்க்கில் ஆட்கள் அவனைத் தூக்கி, ஒரு மூடு வண்டியில் வைத்து, ஜோஸேன் அரண்மனைக்குக் கொணர்ந்து, அலங்காரக் கூடத்தில் அடைத்தனர். ஆள் வெளியேறாதபடி எல்லாக் கதவுகளையும் பூட்டினர். பிறகு க்வின்ப்ளேனின் பழைய உடைகளைக் கழற்றிப் பெரிய பிரபுக்களுக்கேற்ற வெல்வெட் உடைகளை ஆடம்பரமாக அணிவித்தனர்.

இரவில் க்வின்ப்ளேன் மயக்கந்தெளிந்து எழுந்தான்; சுற்றிப் பார்த்தான்; கண்ணை நம்பமுடியவில்லை. ஒரு பெரிய அலங்காரக் கூடத்தில், ஒரு அலங்கார சோபாவில் அவன் சாய்ந்திருந்தான். தங்கமணி விளக்குகளில் நீண்ட மெழுகுதிரிகள் எரிகின்றன. சலவைக் கற்சுவர்கள் பளபளவென்று மின்னுகின்றன; அவற்றில் சில அடிகள் உயரந்திற்கு வெல்வெட்டுகள் பட்டுப்பூச்சிக் கூட்டம்போல மின்னுகின்றன. உயர வெல்வெட்டு பரப்பி, அணி வேலைகள் செய்யப்பட்டுள்ளன; கீழே தடித்த இரத்தினக் கம்பளங்கள் அழகாக விரிக்கப்பெற்றுள்ளன. அவனுக்கு முன்னால், பூவேலை செய்த இரண்டு மஹாகனி மேஜைகள் இருந்தன. ஒவ்வொன்றின் மேலும், ஆறு மெழுகுதிரிகள் எரியும் தங்க விளக்கிருந்தது. ஒரு மேஜைமேல் ஏதேதோ தஸ்தாவேஜுகளும், ஒரு பணப்பெட்டியும் இருந்தன. மற்றொரு மேஜைமேல் தங்கத் தட்டுகளில் இனிய தின்பண்டங்களும், வெள்ளிக் கோப்பைகளில் இனிய பானங்களும் தயாராய் இருந்தன. ஒரு நீண்ட அலங்கார ஜன்னல் திறந்திருந்தது; அதன் வழியே வைர மணிப் பந்தல் போன்று நட்சத்திரங்கள் மினிரும் ஆகாசம் தெரிந்தது. அதன் மற்றொரு புறம் அலங்காரத் தூண்களும், ஏராளமான வெல்வெட் நாற்காலிகளும் போட்ட ஒரு தர்பார் ஹால் தெரிந்தது. இந்த ஜன்னலுக்கு எதிரேயுள்ள சுவற்றில் ஆஷ் (Ash) மரங்கள் போட்டு பசுமையும் ரோஜா நிறமுமான கொழுந்தெழும் கணப்புத் தீ காய்ந்தது. அதை

அடுத்து நீண்டகன்ற சப்ரமஞ்சத்தில் அன்னத் தூவி திணித்த வெல்வெட் மெத்தைகளும், திண்டு களும், தலையணைகளும் இருந்தன. சுவரோரத்தில் மெத்தை தைத்த நாற்காலி வரிசைகளும், அதன் முன்பு சாதாரண நாற்காலிகளும் இருந்தன. இங்குமங்கும் பட்டுத் திரைகள் தொங்கின; அவை மற்ற அறை களுக்கு வழிகாட்டின. எங்குப் பார்த்தாலும் வெல் வெட்டு மயமாயிருந்தது. உத்தரத்தில் தங்கவேலை செய்து நடுவில் பெரிய தங்கக் கேடயம் பதித்து, அதில் குடும்பத்திற்குரிய விருதுகளும், அங்கிகளும் தொங்கவிட்டிருந்தன. எதிரே பர்க்கில்ஃபெத்ரோ தாஸானுதாஸனாக நின்றுகொண்டிருந்தான். அங்கே வேறு யாரும் இல்லை.

“இதென்ன ஆடம்பரம், அலங்காரம்? இது யார் அரண்மனை? இங்கே நான் எப்படி வந்தேன்? ஐயோ இந்த டம்பக்காட்சி என் கண்ணை உறுத்து கிறதே! நான் எங்கே இருக்கிறேன்?” என்று மயங்கிப் புலம்பினான் க்வின்ப்ளேன்.

“பிரபுவே! தாங்கள் தங்கள் சொந்த மாளிகை யில் இருக்கிறீர்” என்று கூவினான் பர்க்கில்ஃபெத்ரோ. பாதாள இருட்டில் இருந்தவனைத் திடீரென்று சூரிய மண்டலத்திற்கு உயர்த்தினால் எப்படியிருக்கும்? இரும்பு விலங்கை எதிர்பார்த்தவனுக்குத் தங்கக் கிரீடம் தலையில் வைத்தால் எப்படியிருக்கும்? இருட் சிறையிற் புகுந்தவனை இரத்தின மாளிகைக்குத் தலைவனாக்கினால் எப்படியிருக்கும்? அந்தமாதிரி நிலையடைந்த க்வின்ப்ளேன் யாதுந் தோன்றாமல் திகைத்தான்.

ஆளே புதிதானான்; பழைய சட்டை தொப்பி ஏதாவும் காணோம். அவை எங்கே? தங்கவேலை செய்த வெல்வெட் உடைகள் அவனை அலங்கரிக்கின்றன. அவனது சட்டைப்பையில் கனத்த பணப்பை யுள்ளது. அவன் தலையில் டோப்பா வைத்துள்ளது. அதன்மேல் பிரபுவிற்குரிய மகுடம் உள்ளது. காலில் முழங்கால் மட்டும் உயர்ந்த பூட்ஸ் அணிந்திருக்கிறான். இனிச்சவாய்க் கோமாளி இராஜாபோலிருக்கிறான்.

## 56. மஹாப்பிரபுவே !

“ஆ, இதெல்லாம் யார் எனக்கு மாட்டியது ?” என்று வியந்தான் க்வின்ப்ளேன்.

“மஹாப்பிரபுவே நான், நான்தான் இதெல்லாம் செய்தவன்” என்று மார்தட்டித் தனது பட்டுக் குல்லா வேலையைத் தொடங்கினான் பார்க்கில் ஃபெத்ரோ. க்வின்ப்ளேன் அவனைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

“மஹாப்பிரபுவின் சந்நிதானத்தில் பணிந்து நிற்கும் தாஸன் பார்க்கில்ஃபெத்ரோ செய்யும் விண்ணப்பத்தை ஏற்றருளவேண்டும். அடியேன் கடல் இலாகா ஊழியன். நானே ஹார்திகானன் குடுக்கையை உடைத்தேன். நானே அதனின்று தங்கள் அதிர்ஷ்டப் பத்திரத்தை எடுத்தேன். நானே அதை ராணியிடம் காட்டி எல்லாக் காரியமும் செய்து தங்களை இங்கே கொணர்ந்தேன். பிரபுவே, தங்களுக்கு ஏராளமான செல்வம் உள்ளது; இந்த மாளிகை, இதை விடப் பெரிய ஹங்கர்வில் மாளிகை, க்ளான்சார்லி

கோட்டை, எல்லாம் தங்கள் உரிமையே. தங்களுக்கு 19 வட்டாரங்கள் உண்டு; அவற்றிலுள்ள கிராமங்க ளெல்லாம் தங்களுக்கே சொந்தம். தங்கள் ஆட்சியில் 80,000 குடிகள் இருக்கின்றனர். கிளான்சார்வியில் தாங்கள் நீதிபதியாகக் கச்சேரி நடத்தலாம். நாணயம் அடிக்கும் உரிமையைத் தவிர மற்ற அரச உரிமைக ளெல்லாம், மரியாதைகளெல்லாம் தங்களுக்குண்டு. அரசனுக்கு இங்கிலாந்தில் எவ்வளவு அதிகாரம் உண்டோ அவ்வளவு அதிகாரம் தங்கள் வட்டாரங் களில் தமக்குண்டு. உங்களுக்கு இளவரசுப் பட்டம் உண்டு. தங்கள் அதிகாரத்தில் 20 தூக்கு மேடை கள் உள்ளன. தாங்கள் குசாலாக 20 பேரைத் தூக் குப்போடலாம். தங்களுக்கு எட்டு பாரன் கோர்ட்டு கள் (Baron Courts) உண்டு. தங்கள் உறவினரெல் லாரும் அரசரும் அரசிகளுமே யாவர். தாங்கள் வேட் டையாட விசாலமான காடுகள் உண்டு. பழைய நகரத்தைக் கொண்ட ஒரு மலை தங்களுக்குச் சொந்த மாகும். எல்லாம் சேர்ந்து தங்களுக்கு வருஷ வரு மானம் 40,000 பவுனாகும்."



க்னின்ப்ளேனுக்கு இவையெல்லாம் பழைய பாடம் போலிருந்தது; குழந்தைப் பருவம் அவனுக்கு ஞாபகமாக நினைப்பு வந்தது. தான் பிரபுவாகப் பிறந்து பிறர் வஞ்சனையால் இளிச்சவாயன் ஆனதை அவன் நினைத்து ஆழ்ந்த சிந்தனையிலிருந்தான். அப் போது பார்க்கில்ஃபெத்ரோ, மேஜைமேலிருந்த ஒரு பணப்பெட்டியைக் காட்டி "பிரபுவே, இதில் 2,000

கினிகள் உள்ளன. மாண்புள்ள அரசி அனுப்பியது; இத் தொகை தங்கள் தற்காலச் செலவிற்கு" என்றான்.

[பிரபு தனது வேலைக்குப் பரிசாக அதைத் தருவானென்று பார்க்கில் எதிர்பார்த்தான்].

"அது என் தந்தை உர்ஸ—ஸ—க்கு" என்றான் க்வின்ப்ளேன்.

"ஆ....ஹா....பிரபு சித்தம்போல நடக்கட்டுமே. இதோ லண்டன் போகிறேன்; நானே அவனுக்கு இத் தொகையைத் தருகிறேன்" என்று நீட்டினான் பார்க்கில்.

"நானே கொண்டுபோய் எந்தைக்கு இதைத் தருவேன்" என்றான் க்வின்ப்ளேன்.

பார்க்கில்ஃபெத்ரோ "கண்டிப்பாக முடியாது; பிரபுவே, தாங்கள் கோர்லியோன் மாளிகையில் இருக்கிறீர்கள். இது அரசி வசிக்கும் விண்ட்ஸர் அரண் மனையைச் சார்ந்துள்ளது; இதற்கும் லண்டனுக்கும் 24 மைல் தூரம் உள்ளது. இங்கே தங்களை யாருக்கும் தெரியாது. இந்த மாளிகைச் சேவகரும் தங்களை இன்னாரென்று அறியார். அவர்களுக்கு என்னைத் தெரியும்; அதுபோதும்; என்னிடம் இந்த மாளிகை இரகசியக் கதவின் சாவியுள்ளது. அதன் வழியாகவே தங்களை இங்கே சேர்த்தேன். மாளிகை உறங்குகிறது. காலையில் நான் ஒரு வார்த்தை சொன்னால் போதும். எல்லாரும் ஃபெர்மேன் சார்லி பிரபுவை வணங்குவர். அரசியின் ஆணையை நான் செய்கிறேன். பிரபுவே, தங்கள் சொத்து சுகங்களின் உரிமைப் பத்திரங்கள் இதோ உள்ளன. அவற்றிலெல்லாம்

ஜேம்ஸ் I-ன் முத்திரையுள்ளது. தங்களுக்குச் சேர வேண்டிய வரி வசூல் விபரம் இதோ உள்ளது; இது தங்கள் காணியாட்சிப் பத்திரம்; இவை தங்கள் நில வுரிமைப் பட்டாக்கள்; இவை தங்கள் ஆஸ்திபாஸ்தி களின் குறிப்பு; அதோ மேலே கேடயத்துடன் தொங்குவன தங்கள் விருதுகள். இதோ இந்த உடுப்புப் பீரோவில் தங்கள் அந்தஸ்திற்குரிய ஆடம்பர மான அணிகள் உள்ளன. தங்களை இராணி பிரபுவாக அங்கீகரித்துவிட்டாள். அரசி அங்கீகரித்ததே சட் டம். நாளையே தாங்கள் பிரபுக்கள் சபையில் (House of Lords) வீற்றிருப்பீர்; இப்போது அரசி யின் கணவனை கம்பர்லாந்து பிரபுவுக்கு (Lord Cumberland), வருஷந்தோறும் 100,000 பவுன் அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்று ஒரு மசோதா வந்து விவாதத்தில் உள்ளது. தாங்களும் அந்த விவா தத்தில் கலந்துகொள்ளலாம். நாளையே தங்களைப் பற்றிப் பிரபுக்கள் சபைக்கு அறிமுகப்படுத்துவோம். ஆனால், "நான் பிரபுவாயிருக்கிறேன்" என்று தாங் கள் ஒப்பவேண்டும். இன்றேல் காரியம் கெட்டுப் போகும். நீங்கள் சம்மதிக்காவிட்டால் இத்தனை செல்வமும், உரிமையும் தங்கள் தகப்பனாரின் வைப் பாட்டி மகனை டிர்ரிமோரைச் சேரும். பேசாமல் எல்லா மரியாதைகளையும் அங்கீகரிக்கவும். அரண் மனைச் சாரட்டில் பிரபுக்கள் சபைக்குத் தாங்கள் செல் வீர்கள். இராணி தங்களுக்காகப் பல யோசனைகள் செய்து வைத்திருக்கிறாள். க்வின்ப்ளேன் இறந்து போனான். இப்போது இருப்பவன் ஃபெர்மேன் சார்லி யே. தங்களுக்குப் பிரபுவாயிருக்கப் பிரியந்தானே?

க்வின்ப்ளேன் நீளச்சிந்தித்து "ஆம்" என்றான். பார்க்கில் புன் சிரித்து, வணங்கி, முன் சொன்ன 2,000 கினிகள் அடங்கிய பணப் பெட்டியை எடுத்துக்கொண்டு "பிரபுவே, தாஸன், இதை அப்படியே உர்ஸுஸ் கையில் தந்துவிடுகிறேன்," என்று மீண்டும் வணங்கி வெளியே சென்றான்.

## 57. செல்வ மாயம்

அரண்மனை, அலங்காரக்கூடம், வெல்வெட் நாற்காலிகள், வெல்வெட் சோபாக்கள், தங்கம், வெள்ளி, பணக்குவை—ஆகிய எல்லாச் செல்வங்களும் சுற்றியுள்ளன. கண்ணைப்பறிக்கும் காந்தியுடன் செல்வ மோகினி அவனைச்சுற்றி நகைத்தாள். பார்க்கில்ஃபெத்ரோ சென்றபின் க்வின்ப்ளேன் அந்தக் கூடத்தில் இங்குமங்கும் தாண்டுகால் போட்டு நடந்தான். திடீரென்று நின்று சிந்தித்தான்:

"ஆம், ஆம், நான் பிரபுவே; பிரபுவாகவே பிறந்தேன்; பிரபுவானேன்; குழந்தையாயிருக்கும்போது என்னைத் திருடிச்சென்று, அவலட்சணமாக்கினர்; என்னைத் திருடினார், என் சொத்தைத் திருடினர்—பாதகர்! என்னைக் கொல்லப் பார்த்தனர்; என்னைக் கைவிட்டனர். மனிதர் என்னை வெறுத்து நீக்கினர்; கடல் என்னைக் காத்தது; கடல் என் தாய் தந்தையானது. என் விதியைத் தீர்மானிக்கும் அந்தக் குடுக்கையை அலைக்கரத்திற் சுமந்து கரையில் ஒதுக்கியது கடல். கடல் வாழ்க! மனிதருக்கில்லாத கருணை, கடலுக்கிருந்தது. நான் என்னை மறந்தேன்; இப்போதறிந்தேன்; மாறிப் பிறந்தேன்;

என் உடல் கந்தை யணிந்தது; எனினும் என் மனம் உயர்ந்த சிந்தை யணிந்தது. 'நான் ஏழைக் கோமாளி யல்லேன்; என் பிறப்பு வளர்ப்பில் ஏதோவொரு இரகசியம் உள்ளது,' என்று அப்போதே எனது நெஞ்சம் உணர்த்திக் கொண்டிருந்தது. செல்வரைப் பார்க்கும்போது, நான் அவர் சேவகனல்லேன், அவருக்கு நான் எஜமான் என்றொரு எண்ணமுதித்தது. நான் ஆட்டு மந்தைகளைக் காக்கும் நாயல்லேன்; நான் ஆட்டு மந்தைகளை மேய்க்கும் ஆயர்கோன் என்பதை அறிந்தேன். என் முன்னோர் பிரபுக்கள், ஜனத்தலைவர், செல்வர், அதிகாரிகள் — நானும் அவ்வாறே. நான் பிரபு; எனக்கு வாள் உள்ளது; நான் மஹாப்பிரபு, எனக்குக் கிரீடம் உள்ளது; நான் கனவான், பொதுஜன மரியாதைக்குரியவன். என்னை எவ்வளவு கொடுமை செய்தனர்! தந்தையைப் பகிஷ்கரித்தனர்; மைந்தனைக் கொடியருக்கு விற்றனர். க்ளான் சார்லி பிரபுவின் மகனை கொம்ப்-ரா-ஷிச் சாக்கடையில் தள்ளினன் அந்த ஜேம்ஸ்; அக் கொடியர் என் குழந்தைப் பருவத்தை நரக வேதனையாக்கினர். பிணத்தைக் கொத்தும் காக்காய் போலே உலகக் கொடுமைகள் என்னைக் கொத்தின. ஆம், நினைவிற்கு வருகிறது. என் தொட்டிலைச் சுற்றி ராக்ஷஸப் பேய்கள் கூடின. அப் பேய்கள் என்னை ஒரு தனியிடங் கொண்டுசென்றன; என் வாயில் இரத்தம் ஒழுகியது; நான் அழுதேன்; மயங்கி விழுந்தேன்—ஆம், அது நினைவிற்கு வருகிறது. அரசன் என்னை விற்றான்; கொடியர் என்னைச் சிதைத்தனர்; கடவுள் என்னைக் காத்தார்; கடல்

என்னை வெளிப்படுத்தியது. இடர்கள் விலகின. இதோ நான் உள்ளேன். நான், ஃபேர்மேன் சார்லி பிரபு. நான் எங்கேயுள்ளேன்? செல்வச் சிகரத்தில், புகழின் உச்சியில், பிரபுத்துவத்தின் மணி முடியில். நேற்றிருந்த இளிச்சவாயன் இறந்தான்; ஃபேர்மேன் சார்லியே இருக்கிறான். கோமாளி இளிச்சவாயன், நேற்று லண்டன் பார்க்கில் ஒரு மலர் பறித்திருந்தால் கையைச் சீவியிருப்பர் பிரபுக்கள். ஆனால், இன்றோ! நான் விண்ணேறி நட்சத்திரங்களைப் பறித்தால் தேவதைகள்கூட ஏனென்று கேட்க மாட்டார்கள். நான் சர்வாதிகாரி. எனக்கு எத்தனை மாளிகைகள், கோட்டைகள், கிராமங்கள், நிலபுலன்கள், தோட்டந்துறவுகள், வேட்டை வனங்கள், எனக்கு எவ்வளவு வருமானம், செல்வக்குவைகள் உள்ளன! நான் சிகப்பு வெல்வெட் உடையணிந்து, வாள்பிடித்துப் புறப்பட்டால், என் பின்னே எத்தனை சேவகர் ஓடிவருவர்; என்னை அடிவணங்கும் அடிமைகள் எத்தனைபேர்! நான் மந்திரிகளையும் இளவரசரையும் குற்ற விசாரணை செய்வேன்! என் அதிகாரத்தில் 20 தூக்குமேடைகள் உள்ளன. என்னை யாராவது எதிர்த்தால் "ஏற்று தூக்குமேடையில், வெட்டு தலையை" என்பேன். நான் மஹாப் பிரபு அல்லவா? என்னை யார் எதிர்ப்பார்? நான் வைத்ததே சட்டம். அரசனுக்கு முடிசூட்டும்போது நான் அருகேயிருப்பேன். எனது உதவியை அரசர் வேண்டி ஏற்பார். நான் மன்னருக்கும், பிரபுக்களுக்கும் விருந்தளிப்பேன். என் இஷ்டப்படி வேண்டிய சுகபோகங்களை அனுபவிப்பேன்."

க்வின்ப்ளேன் செல்வச் செருக்குடன் தாண்டு கால் போட்டு நடந்தான். அவனுக்கு ஏழைகளிடம் இருந்த இரக்கம், அன்பு, அவனது கற்புற்ற தூய வொழுக்கம், எளிய வாழ்வு, கருணைநினைப்பு—அனைத்தும் அக்கணம் மறைந்தன. பிரபுத்துவமும் அதன் மகத்துவமும் அவனுட் குடிகொண்டன. செல்வக் கனவுகளில் அவன் முன்பின் பாராமல் மனத்தை இழந்தான். பிரபுக்கள் சபையில் கம்பீரமாக நின்று, தான் தடபுடலாகப் பேசுவதுபோலப் பாவித்தான். "நான் பிரபுக்கள் முன்னே மலைபோல நிற்பேன்; நான் வாழ்வின் அடி முதல் நுனிமட்டும் பார்த்திருக்கிறேன்; உங்களைவிட எனக்கு உலகானுபவம் அதிகம். நான் உண்மையைச் சொல்லுகிறேன் என்று சொற்பொழிவேன். நீதி புகட்டுவேன், அவர் செருக்கைக் கண்டிப்பேன். என்னை எல்லாரும் மெச்சிப் புகழ்வர், அஞ்சி வணங்குவர்," என்று கம்பீரமாகக் கையை ஓச்சினன். பிறகு மேஜைமேல் இருந்த முன்னோர் பத்திரங்கள், தஸ்தாவேஜுகள், சாசனங்கள், குறிப்புகள், பட்டாக்கள், பேரேடுகள் அனைத்தையும் பிரித்துப் பிரித்துப் பார்த்தான். சுற்றிலும் உள்ள அலங்காரங்களை வியப்புடன் நோக்கினன். அடுத்துள்ள அறைகளைப் பார்த்தான். "மெய்தான்; நான் பிரபு; நான் யார்? க்வின்ப்ளேனா? இல்லை; நான் பிரபு."

மெய் மறந்து, இரவு முழுதும் இவ்வாறு தன்னை வியந்து நினைந்தான் ஃபெர்மேன் க்வின்ப்ளேன்.

அருணோதயம் ஆனது. அத்துடன் தயாவும் அவன் உள்ளத்தில் தோன்றினள்.

"ஆ....தயா! உர்ஸூலஸ் எங்கே!" என்று திகைத்து நின்ருன் க்விண்ப்ளேன். செல்வ மாயம் நீங்கியது! இனிப் பணப்பெட்டியைக் கொண்டு சென்ற பார்க்கில்ஃபெத்ரோவை ஓடிப் பிடிப்போம்.

## 58. உர்ஸூலஸ் புலப்பல்

க்விண்ப்ளேன் சிறையில் நுழைவதை உர்ஸூலஸ் பார்த்தான்; சிறைக் கதவு மூடும் சத்தம் கேட்டது. அவன் மனம் பதறியது. லண்டன் சிறைக்குட் போனவர் உயிருடன் மீளார் என்பதை அவன் அறிவான். அடித்த முளைமாதிரி அந்த இடத்திலேயே பேச்சு மூச்சில்லாமல், அசையாமல் திகைத்து நின்று அவன் சிறையையே நோக்கினுன். சிறைச்சுவர்களில் இருந்த தூக்கு மேடைகளை நோக்கினுன். பயங்கரக் கனவுகள் கண்டான். உலகமே கொலைக்களம் போலும் சுடுகாடு போலும் அவனுக்குத் தோன்றியது.

பொழுது விழுந்தது; க்விண்ப்ளேன் வரக் காணேம்; சிறை பயங்கர மௌனம் வகித்தது; 'இனி நின்று பயனில்லை' என்று உர்ஸூலஸ் ஆவலாகத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சந்து பொந்துகளை மெல்ல மெல்லத் தாண்டி, கவலை சுமந்து, தலைகுனிந்து 6½ மணிக்கு டாட்காஸ்டர் விடுதிக்கு வந்தான். எப்போதும் தனக்குள் பேசும் உர்ஸூலஸ் இப்போது சும்மா இருப்பானு?

"ஐயோ" என்று தலையிலே இரண்டு தட்டுத் தட்டிக்கொண்டு தற் சொற்பொழிவைப் பொழிந்து தீர்த்தான் உர்ஸூலஸ்:

"சரிதான்; இந்தப் பயலுக்கு வேண்டியது
தான்; திருட்டுப்பயல், காலிப்பயல், வெட்டிப்பயல்,
வாயாடிப்பயல், கோமாளிப்பயலுக்கு அரசியல் பேச்
செதற்கு? எல்லாம்வல்ல சர்க்காரைப்பற்றி ஏழைகள்
மூச்சுவிடலாமா? சர்க்காரிடம் துப்பாக்கி பீரங்கி
யிருப்பது தெரியாமல் வாய்வாணம் விட்டான்,
சிறைப்பட்டான்!

'சர்க்கார் எவ்வளவு வரி போட்டாலென்ன,
ஏழைகளை எப்படி நசுக்கினாலென்ன, நாம் வாயைத்
திறக்கலாமோ? மஹாகனம் பொருந்திய ராணியை
'அலங்காரச் சோம்பேறி' என்றான்—புரட்சிக்காரப்
பயல். தொலைந்தான் ஜெயிலுக்கு, ஒழியட்டும்.
படித்துப் படித்துச் சொன்னேனே. அடா, பிரபுக்
களுக்குத் தள்ளி நின்று சர்க்கார் சலாம்போட்டு கப்
சுப்பென்று நவத்வாரங்களையும் அடைத்துக்கொண்
டிரடா? உன் இளிச்சவாயைத் திறக்காதேடா! அரசி
யலும் சரி நாறக் கழுதைத் தோலும் சரி. அது உனக்
கேனடா? ஏழைகள் வரிப்பணம் தந்து பட்டினி
கிடக்கப் பிறந்திருக்கிறார்கள், பிரபுக்கள் மாளிகையில்
விருந்துண்டு வெல்வெட்டு மெத்தையில் புரளப் பிறந்
திருக்கிறார்கள். ஜனங்கள் காசு காசாகத் தரும் வரிப்
பணம் மலையாகக் குவிகிறது. அரசர் சுகமாக அனு
பவிக்கின்றனர். ஜனங்கள் அவர்களுக்குக் கை கட்
டிச் சேவகம் செய்கின்றனர். வரியும் தந்து, உரிமையும்
தந்து, நெற்றிவேர்வை சொட்ட ஊழியமும் செய்ய
ஏழைகள் தலையில் எழுதியிருக்கிறது. தொந்தி வாடா
மல் நிழல் மாடுகள்போலிருக்கப் பணக்காரர் பிறந்

திருக்கிறார்கள். அதற்கென்ன செய்வது? வரி கொடுப்பது நமது கடமை; சொன்னபடி கேட்பது நமது வேலை; மற்றதெல்லாம் மஹாபிரபுக்கள் செயலடா. உலகந் தெரியாமல் ஏதாயினும் உளறி வைக்காதேடா பயலே, உஷாராயிரு. மூட்டாள், சந்தைக் கோமாளி, நீ மஹாப்பிரபுவோ? ஏழைக ளிடம் இரக்கமாம்! பிரபுக்களை மாளிகைப் பூதங் கள் என்றாய்! கடவுளின் கோபத்தைத் தாங்கலாம்; பிரபுக்களுக்குக் கோபம் வந்தால் தூக்குமேடையில் தொங்குவாய்! உன் தலை மண்ணில் உருளும். போ, இனி வரமாட்டாய்! நன்றிகெட்ட பயலை வளர்த்தேன்; புரட்சிக்காரப் பயலைப் போற்றி னேன். போ, போலீஸார் ஒன்றைப் பத்தாக்கி உன்னை நன்றாக மாட்டிவைப்பர். நாக்கினால் வந்த வினை! மனத்திலிருப்பது நாக்கில் வரக்கூடாது; அதுதான் பிழைக்கும் வழி; தெரியுமாடா பயலே. நானும் தம்பி ஓமோவும் கவலையில்லாமல் சிறு குடித் தனம் பண்ணினோம். இந்தப் பயல் ஒரு குட்டியைச் சுமந்துவந்தான். இந்த ராஜத்துரோகியை நான் வளர்த்தேன்; இந்த இளிச்சவாயனை அந்தக் குட்டி விரும்பினாள்....களவாணிப் பயல், அந்தக் குருடியை வலை போட்டுவிட்டான். இளிச்சவாயனும் குருடியும் புருஷன் பெண்சாதியானார்கள். பிரமசாரிக் கட்டை யாய்க் கிழவனான என் வண்டியிலே, இவர் காதல் நாடகம் வேறே நடந்தது. அவனுக்கு இவள் உடல், இவளுக்கு அவன் உயிர். அவன் போனால் இவள் உயிர் போகும். போ, தொல்லை விட்டது. இந்த இளிச்ச வாயன் ஒழிந்தான்; அந்த மூட்டாள் இல்லாமல்

தயா இனிப் பிழைக்கமாட்டாள். உலகமே தூக்கந்தானே; வாழ்வு அநித்தியம்; சாவு நிச்சயம்; ஒழியட்டும். இரும்புத்தடியன் காதலனை இழுத்துக் கொண்டு போனான்; காதலியைச் சாவு இழுத்துச் செல்லும். சா, தயா! எனக்கும் வேலையில்லை; நானும் சாகிறேன்! உலகமே வந்தனம்; தூக்க உலகமே, என்னைவிட்டொழி! எனக்கு உடல் பிடிக்கவில்லை, உயிர் பிடிக்கவில்லை, உலகம் பிடிக்கவில்லை! சாவு தான் பிடிக்கிறது!...."

இவ்வாறு உட்பேச்சு நிகழ்த்திக்கொண்டே உர்ஸுஸ் விடுதிவாசலுக்கு வந்தான். அங்கே நிகொலாஸ் ஆவலாக நின்றான்.

நிக்: என்ன செய்தி?

உர்: நான் திரும்பிவந்ததே செய்தி.

நிக்: க்வின்ப்ளேன்? நேரமாயிற்று; கூட்டம் வருமே, ஆட்டம் உண்டா?

உர்: ஆஹா உண்டு.

நிக்: இளிச்சவாயனில்லாமலா?

உர்: ஆட்டத்திற்கு இளிச்சவாயன் வருவான்.

நிக்: மெய்தானா?

உர்: பாருமே.

இளிச்சவாயன் பெயர்போட்ட விளம்பரப் பலகையை நீக்கி உள்ளே கொண்டுபோனான் உர்ஸுஸ்.

நிக்: ஏன் பலகையை எடுத்தீர்?

உர்: ஹ, ஹ, ஹ....

நிக்: என்ன சிரிக்கிறீர்?

உர்: விடுதலை, விடுதலை, விடுதலை! ஆட்டம்பாட்டமெல்லாம் ஒழிந்தன. இனி அடக்கமாக என் தம்பியோடு இருப்பேன்.

நிக்கொலாஸ் அறிந்துகொண்டான். வருகிற பேர்களுக்கு இன்று ஆட்டம் இல்லை என்று கோஷிகத்தைவிட்டுத் தெரிவிக்கச் செய்தான்.

## 59. உர்ஸுஸ் நாடகம்

தயா ஆழ்ந்து உறங்கினாள். உர்ஸுஸ் அவளைப் பார்த்தான். "மீளா உறக்கத்திற்கு ஒத்திகை நடக்கிறது! மெழுகு திரி அணைந்து போகும்; தயா தனிமை தாங்காள். கண்ணில்லாதவர் கலக்கம் பெரிது. இருக்கட்டும்; இன்று சமாளிப்போம்" என்று விளக்கேற்றினான். உடனே தற்பேச்சைத் தொடங்கினான்: "இதோ இவள் எழுந்திருப்பாள்; 'க்வின்ப்ளேன் எங்கே?' என்றால் என்ன செய்வது? க்வின்ப்ளேனாவது மண்ணாங்கட்டியாவது! எல்லாம் ஒழிந்தது! என்பாடு சொஸ்தம். அவன் சிறையிலிருக்கிறான்; இவள் சமாதியில் இருப்பாள். இருவரையும் பார்த்துச் சாவு நடனமாடும். சாவைப் பார்த்து நான் நடனமாடுவேன். எனது நாடகமேடையை விட்டு இரண்டு பாத்திரர் ஒழிந்தனர். உலகமே நாடக மேடைதானே? சாவுதான் அதன் திரை! சாவு ஒரு பெரிய வைத்தியன்; நமது தொல்லைகளை ஒழிப்பவன். செத்தபின் அவன் இளிச்சவாயனல்லன்; இவள் குருடியல்லள்; நான் கிழவனல்லேன்! சாவுக்கு எல்லாரும் சமம்— அழகும் அவலக்ஷணமும் சமம். தயா தூங்குகிறாள்; நானுயிருந்தால் ஒரே தூக்கமாவேன், மீளமாட்டேன்.

அவளைக் கொன்றது அந்த இளிச்சவாயனல்லன். அவனது இளிச்சவாய் அரசியல். அவன் ஷெர்ரிஃபிடம் போகிறான்; இவள் மயானத் தோட்டியிடம் போவாள்; நானும் சாகவா? ஏன்? ஓமோவைவிட்டு நான் சாவேனோ? நானும் அவனும் பழையபடி சிறிய வண்டி வைத்துக்கொண்டு ஊர் ஊராகத் திரிவோம். விதி ஓய்ந்த இடத்தில் மண்டையைப் போடுவோம்! வீனஸ், ஃபோபஸ்—இரண்டு குமரிகள் இருக்கிறார்களே—குமரிகளா, உங்கள் பாண்டு வாத்தியங்களைக் கட்டிவையுங்கள். இனி இளிச்சவாயனுமில்லை, நாடகமும் இல்லை. இந்தக் குமரிகளை எங்கேனும் போய்ப் பிழைக்கச் சொல்லுகிறேன். நான் கிழவன்; குமரிகள் சகவாசம் எனக்கெதற்கு? நான் வேதாந்தி. பெண்கள் பேச்சு எனக்கெதற்கு? என் வாழ்வுத் துணை ஓமோதான்........"

இச் சமயம் தயா புன்னகையுடன் விழித்தெழுந்தாள்; "ஆ, ஃபோபே, வீனஸ் ஆட்டத்திற்கு நேரமானது; என்னை அலங்கரித்து வாத்தியம் முழக்குங்கள்!" என்றாள். உர்ஸூலஸ் "உண்மைதான்; அசடு மாதிரி உட்கார்ந்திருக்கிறீர்களே; குமரிகளா, எஜமானி சொல்வதைக் கேளுங்கள்; இதோ ஆட்டம் தொடங்க வேண்டும்; ஜனங்கள் வருகிறார்கள். உம், 'டொண்டணக்கு டொணக்கு டொணக்கு! பும் பும் பும் பூம் பூம்'— அடிக்கட்டும் டமாரம், ஊதட்டும் பாண்டு" என்று கண் சிமிட்டி அவர்களைத் தூண்டினான். "கிழவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது" என்று சொல்லிக்கொண்டே அவர்கள் பாண்டு முழக்கினர்.

பிறகு தனக்குத் தெரிந்த விகடத் திறமை யெல்லாம் அன்று காட்டித் தானே க்வின்ப்ளேன் போன்று அவன் நடிக்கத் தொடங்கினான்.

—அடா க்வின்ப்ளேன்.

—ஏன் ?

—ஜனங்கள் வந்து விட்டார்கள்; கூட்டம் கசகசவென்றிருக்கிறது. எழுந்திருந்து காரியத்தைப் பார். திரையைத் தூக்காதே; தயா வேஷம்போட்டுக் கொள்ளுகிறாள்.

—ஆ, தயா, எவ்வளவு அழகாயிருக்கிறாள்! தயா ஒரு தேவதை.

—உண்மை. க்வின்ப்ளேன், மேடைமேலே தாவு.

கிழவனுடன் க்வின்ப்ளேனே இப்படிப் பேசுகிறான் என்று நம்பினாள் தயா. மற்றவர்கள் பைத்தியம் முற்றிப்போனது என்று வேடிக்கை பார்த்தார்கள். கிழவன் கோவிகத்தைக் கூப்பிட்டான்; அவன் கைநிறையக் காசு தந்தான்.

"பயலே, அப்படி நின்று விழுந்து விழுந்து சிரி, கைதட்டு. புரண்டு புரண்டு சிரி....பல ஜனங்கள் சிரிப்பது போலே நடி....தெரியுமா?" என்றான். பையன் தாத்தாவின் பைத்தியக் கோலங்கண்டு 'ஹ—ஹ—ஹ' என்று இடிநகை புரிந்து நின்றான். உர்ஸஸ் நிக்கொலாஸுக்கும் ஜாடைகாட்டி அப்படியே சிரிக்கச் சொன்னான். நிக்கொலாஸ் கதவையெல்லாம் மூடி வந்து கிழவன் ஆட்டத்தைப் பார்த்து பலே, பேஷ், சபாஷ், என்று கைதட்டிச் சிரித்து நின்றான்.

“ க்வின்ப்ளேன், நான் இன்று பிரமாத விகடம் செய்வேன் ; என் சரக்கு முழுதையும் பார்....கப்பல் கப்பலாகவே வருகிறது....” என்று மேடையில் ஏறினான்.

அவனே ஜனங்கள், அவனே உர்ஸஸ், அவனே க்வின்ப்ளேன், அவனே எல்லாம் ஆனான்.

கரடித்தொண்டை வெகு ஜோராகக் கிளம்பியது. விகடச் சரக்குகள் அபாரமாகப் புறப்பட்டன.

“ தரலலலலலாய் த்ரம்....ட்ரம்....ட்ரக்....”(பாட்டு)

☆

—“ ஏண்டீ நான் பேசினால் வாசலுக்கு ஓடு கிறாய் ?”

—“கழுதை வந்து எட்டிப் பார்க்கிறதுங்காணும்.”

—“ சீ, கழுதை.”

—“ அதோ ஒரு நாயும் வந்து வள் வள் என் கிறது....”

—“ சீ, நாயே.”

“ எல்லாம் உங்கள் தொண்டையைக் கேட்டுத் தான் நாயும் கழுதையும் உறவாட வருகின்றன.”

—மூஞ்சியைப்பாரு, குரங்கு மாதிரி.

—முழியைப்பாரு, ஆந்தை மாதிரி.

—எப்போதும் எனக்கு எதிரே பேசிக்கொண்டு.

—எப்போதும் எனக்கு எதிரே பேசிக்கொண்டு. போ, வீட்டைவிட்டு.

—இது என் கணவன் வீடு.

—உனக்குக் கணவன் வேறு லட்சணம்.

—உமது சப்பை மூக்குக்குப் பெண்சாதி வேறு லட்சணம்.

—உன்னை உதைப்பேன்.

—ஆ, ஐயோ, கொல்றானே! பாவி கொல்றானே!

—அடி வேண்டாண்டீ! ஊர் கூடப்போகிறது.

—ஐயையோ, நான் செத்தேன் செத்தேன்....!

—அடி நமஸ்காரம், வாயை மூடடீ!

இது புருஷன்-பெண்சாதிச் சண்டை.



—ஹஹஹ....ரரர....அட்ரா, மண்டையிலே போட்ரா....

—அட நான் யார் தெரியுமாடா....நான் ர்ர்ரா சாடா....

இது குடிகாரன் விகடம்....



—குவா, குவா, குவா—குழந்தை கத்துகிறது.

—ஞ்ஞாவ், ஞ்ஞாவ்—(பூனை)

—ஹர்ர், ஹர்....ஹப், வப் வள், வொள்—கொள கொள்....ஹள் ஊஊள்! (இது நாய்ச்சண்டை)

—ஹ்ஆவு—ஏவு, ஏவு ஓவு ஹோ—(கழுதை)

—குர் குருகுரு கொடகொடகொட (காடை)

—ககூ, ககூ, குகூ, குக்குக்கூ (குயில்)

—கீகீகீ நீ யாருடாவன் ? (கிளி)

—க்ராவ், க்ராவ், க்லக்கலகலகல, காவ், காவ் (காக்காய்)

—சிக்சிகிசிகி பிசிபிசிபிசி பிச் (அந்திக் குருவிகள்

—எங்கே போகிறீர் ?

—பாதிரியிடம்—பாப மன்னிப்புக் கேட்க.

—சும்மாவா ?

—சும்மா மன்னிப்பாரா? ஒரு பாவத்திற்கு ஒரு ஷில்லிங் தரவேண்டும்....

—மெத்தச் சரி ; நான் 10 பவுன் திருடினேன் ; இன்னும் இரண்டு தடவை ஆயிரம் பவுன் திருடிவிட்டு மூன்று ஷில்லிங் செலுத்தி விடுகிறேன்....(இது சமயக் கேலி)



இப்படித் தனக்குத் தெரிந்த பல சரக்குகளை யெல்லாம் காட்டித் தீர்த்தான் கிழவன் ; ஜனங்கள் கைகொட்டி நகைப்பதுபோலக் காட்டினான்.

—" க்வின்ப்ளேன், இன்று ஆட்டம் சுருக்கம். " இருளின் வீழ்ச்சி "மட்டும் நடக்கும். தயாராயிரு.

—தயாராயிருக்கிறேன்.

—இதோ முன்னுரை கூறுகிறேன் :—

சீமாட்டிகளே, சீமான்களே ! தயவுசெய்து சத்தம் போடாமல் கேளுங்கள். நான் கரடி ; என் தோலும் கரடி, தொண்டையும் கரடி ; ஆனால், மனிதனை நான் விரும்புகிறேன்—என்னைக் கேலி செய்து வருத்தும் மனிதனையும் நான் விரும்புவேன். உங்களுள் ஒருவர் என்னைக் கிழட்டுப் பைத்தியம் என்கிறார். இன்னொருவர் ' சர் ' என்று பொடி உறுஞ்சித் தும்மல் வராமல் என்னைப் பார்த்து முக்குகிறார். இன்னொருவர் ஒட்டகம் மாதிரி முதுகை நெளிக்

கிறார்; இன்னொருவர் பகல் வௌவால்மாதிரி பதுங்குகிறார். ஒருவர் "முட்டாள் கிழவா!" என்கிறார். மற்றொருவர் "கெக்கெக்கே" என்று சிரிக்கிறார். சிரிப்பும் அழுகையும் வாழ்க்கையின் தோழர். நான் வேதாந்தி; இருவரும் எனக்குச் சமமே. மஹாப் பிரபுக்களே, இந்த ஏழைகளைப் பாருங்கள் என்கிறேன். இங்கே கூடிய மஹாஜனங்களில் பலர் ஏழைகள்; ஒரு வேளைதான் அவர் உண்ணச் சோறுண்டு; விரல்கள் வெளியே நீட்டும்படி அவர் பூட்ஸ் கிழிந்திருக்கிறது; அவர்களுக்கு இரண்டு சட்டைதான் உண்டு; ஒரு சட்டை உடற்சட்டை, இன்னொன்று!கடன்காரனிடம் அடகுவைத்த சட்டை; எனக்கு இரக்கம் உண்டு; அழமாட்டேன்; கண்ணீர் விடமாட்டேன். எனது தேவை சொற்பம்; நான் எதிலும் மகிழ்வதில்லை. எதைப்பார்த்து மகிழ்வது? வறுமைத் துயரும் மடமைத் துயரும், வாழ்வைச் சித்திரவதை செய்யும் உலகில் எதைப்பார்த்து மகிழ்வது? மாந்தர் உறவெல்லாம் வியாபாரமாயிருக்கிறது. வியாபாரி அழுகைவிடப் பணத்தையே பார்க்கிறான். நான் சாவைப் பார்த்து மகிழ்கிறேன். கனவான்களே, என் வாய் மழை உங்களுக்குச் சங்கடமாயிருக்கிறது. இதோ நிறுத்தி ஆட்டத் தொடங்குகிறேன்......."

இப் பேச்சிற்கிடையே 'கிழட்டு முட்டாள், உட்கார், ஹிப்ஹிப் ஹுரே—' என்றெல்லாம் ஜனங்கள் ஆரவாரிப்பதுபோலவே உர்ஸஸ் பல குரல்கள் மாறிமாறிப் பேசினான். பிறகு பிடில் இழுத்தான்;

பாடினான், ஆடினான். அதன் பிறகு "இருள்கடிதல்" என்னும் நாடகத்தைத் தானே நடித்தான். அதில் க்வின்ப்ளேன் பாகத்தை இயல்பாக நடித்தான். அவனைப்போலவே பாடினான். தயா பாடினாள்; அவள் கையைத் தனது தோளிலேயே ஏற்றான் உர்ஸஸ்.

முடிவில் கலகலவென்று ஜனங்கள் சத்தமிட்டுக் கலைவதுபோல நடந்தான்.

கோவிகம், நிகோலாஸ்—இருவருக்கும் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாயிற்று.

க்வின்ப்ளேனே அவன் பாகத்தை நடிக்கிறான் என்று தயா நம்பினாள்.

"ஆ, என்னைப்போல யார் நடிக்கமுடியும்? பலே உர்ஸஸ், சபாஷ், நன்றாக நடித்தாய்; நாளை அந்தப் பயல் வந்துவிடுவான். இன்று தயாவை ஏமாற்றியாயிற்று" என்று கிழவன் பெருமைகொண்டான். என்ன இருந்தாலும் தயாவுக்கு ஒரு வெறுமை தோன்றியது. முடிவில் "எங்கே க்வின்ப்ளேன்? தெரியும்; அவன் என்னைவிட்டுச் சென்றான். அவன் போய் விட்டான். ஆ, நான் எங்கே அவனைத் தேடிச் செல்வேன்!" என்று தயா வருந்தினாள்.

## 60. ஐயோ க்வின்ப்ளேன்!

உர்ஸஸ், தனது சாகசங்களால் கண்ணுள்ளவரை ஏமாற்றினான்; கண்ணில்லாத் தயா விழித்துக் கொண்டாள்; 'எங்கே க்வின்ப்ளேன்?' என்றாள். ஆள் திகைத்தான். "தயா, இதோ இருக்கிறேனே...." என்று க்வின்ப்ளேன் மாதிரி மீண்டும் பேசிப்

பார்த்தும் பயனில்லை; தயா ஏங்கித் தவித்தாள். இச்சமயம் நிகோலஸ் அழைத்தான்; உர்ஸுலஸ் சென்றான். இருவரும் தனித்து இரகசியம் பேசினர்:

—அண்ணா சக்கைபோடு போட்டீர்களே.

—இருந்தும் பலிக்கவில்லை; 'கொண்டா க்வின்ப்ளேனை' என்கிறாள் தயா.

—நீர் கெட்டிக்காரர்.

—நீர் முட்டாளில்லையே.

—இவ்வளவு சரக்கு எங்கே கற்றீர்?

—என்னைப்போலே ஊர் ஊராகத் திரிந்தால், உமக்கு என் வித்தையின் இரகசியம் தெரியும்.

—அண்ணா ஒன்று சொல்லவேண்டும்.

—அரசியலா? ஐயோ வேண்டாம்.

—இல்லை; கேளும்; நீர் சண்டமாருதம் பொழியும்போது, ஒருவர் கதவைத் தட்டினார்—திறந்து பார்த்தேன் சர்க்கஸ்காரர்.

—என்ன சொன்னார்?

—இன்று காலை க்வின்ப்ளேனை, இரும்புத்தடியனும், போலீஸ்காரரும் கொண்டுபோவதை அவர் பார்த்தார். இனி இளிச்சவாயன் கூத்து நடக்காது என்று தீர்மானித்தார். "ஐம்பது பவுன் கைமேல் தருகிறேன். பச்சை வண்டி, குதிரை, பாண்டு, குமரிகள், ஓநாய் அனைத்தையும் உர்ஸுலஸ் எனக்குத் தருவாரா கேள்" என்றார்.

—க்வின்ப்ளேன் வருவான்; ஆட்டம் நடக்கும் என்று அவருக்குச் சொல்லும். பார்ப்போம்

—அவர் போன பிறகு, இன்னொருவர் கதவைத் தட்டினார்.

—யாராது ?

—திறந்து பார்த்தேன் ; பேசவில்லை.

—மனிதர், பேசுவதைவிட வாயை மூடிக்கொண்டிருப்பது மேல் அல்லவா ?

—பேசாமல் உமக்காக இந்த மூட்டையைத் தந்து சென்றான்.

—யாரவன் ?

—போ-லீ-ஸ்காரன்.

உர்ஸூஸ் மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான். க்வின்ப்ளேன், சட்டை தொப்பி கால் சராய் எல்லாம் அதில் இருந்தன. "ஐயோ க்வின்ப்ளேன் ! நீ வருவாய் என்றிருந்தேன் ; உன் சட்டைதான் வந்தது; ஆ! இப்படித்தான் ஒரு நாள் சட்டையைக் கழற்றிப் போட்டு ஜீவனும் எங்கோ செல்லுகிறது ; அந்த இடத்திற்கே நீயும் சென்றாயோ—ஹா—மகனே!" என்று கலங்கினான் உர்ஸூஸ் ; பித்துப் பிடித்தவன் போல வாசற் கதவைத் திறந்துகொண்டு தெருவில் ஓடினான் ; நேராகச் சிறைக் கோட்டைக்குச் சென்றான் ; காலை நின்ற இடத்தில் நின்று, சிறைக் கதவையே பார்த்து ஏங்கினான். இந்த வேளையில் பேய் பிசாசுக்குப் பயந்து யாரும் அந்த வழியே வருவதில்லை. சுடுகாட்டுத் தனிமை; கொலைமுக இருள்! உர்ஸூஸ் அஞ்சாது நின்றான்.

'டாண் டாண்' என்று 12 மணி நின்று நின்றடித்தது. 'நிசி மணி' என்றெண்ணினான்

உரஸ-ஷ். 'டாண் டாண்' என்று மீண்டும் மணி நா பேசியது. அது கால மணியல்ல; காலன் மணி; சாவு மணி! காரிருட் சிறை வழியே ஒரு செஞ்சுடர் தெரிந்தது; கடகடவென்று இரும்புக் கதவுகள் திறந்தன. தீவர்த்தி பிடித்து ஒருவன் வெளியே வந்தான்; அவன்பின் நான்கு பேர் வந்தனர்; நான்காவது ஆள் இரும்புத்தடியனே; அவனுக்குப் பின்னால் பயங்கரமான மௌனத்துடன் இரண்டு வரிசையாகச் சிலர் வந்தனர்.

"ஆ, வருகிறான் க்ஷின்ப்ளேன்! வரட்டும்; 'அட பயலே இனி அரசியல் பேச்சிற்குப் போகாதே; மஹாப்பிரபுக்கள் பக்கமே தலை வைத்துப் படுக்காதே' என்று வெளுத்துவாங்குவேன்" என்றெல்லாம் மனப்பால் குடித்தான் உர்ஸ-ஷ். பயல் இல்லை; பாடைதான் வந்தது; போலீஸ் சிப்பாய்கள் பாடை சுமந்துவந்தனர்; மற்றவர் மௌனமாக அதன்பின் வந்தனர். கடைசியில் ஒரு தீவர்த்தி பளிச்சிட்டது; அதன் வெளிச்சத்தில், ஒருவர் ஒரு புத்தகம் படித்து வந்தார். சிறைக்கெதிரேயுள்ள மயானக் கதவு திறந்தது. பாம்பு புத்துக்குள் நுழைவதுபோல அதனுள் பாடை சென்றது; எல்லாரும் சென்றனர்; வெளிச்சம் மறைந்தது, மீண்டும் இருள் படர்ந்தது. மண் வெட்டிச் சத்தம் லேசாகக் கேட்டது. வேதப்பாடல் கேட்டது. அரை நாழிகை கழித்து, மயானக் கதவு திறந்தது; முன்னும் பின்னும் தீவர்த்தி; நடுவே இரட்டை வரிசையாகக் காவலர் வந்தனர்; மணி அடங்கியது. சிறை திறந்தது, எல்லாரும் அதற்குட்

சென்றனர்; சிறை மூடியது, பூட்டுச் சத்தம் கேட்டது. பிறகு இருள், மோனம், பயங்கரத் தனிமை!

"ஆ இறந்தான்! அவனைக் கொன்று பாடையில் வைத்துக் கொண்டு போய்க் குழியைத் தோண்டிப் புதைத்தனர். ஹா க்வின்ப்ளேன், என் குழந்தாய்! என் மகனே!" எதற்கும் அழாத உர்ஸூஸ் கண்ணீர் விட்டழுதான்! க்வின்ப்ளேன், தயா, தான், ஓமோ ஆகிய அனைவருக்கும் அழுதான். வேதாந்தக் கிழவன் குழந்தைபோல் விம்மி விம்மியழுதான்.

ஹார்திகானன் சிறையில் இறந்தான் அல்லவா? அவனுடலையே சவப்பெட்டியிலிட்டுக் கொண்டு வந்து சிறையாளர் புதைத்தனர். அது தெரியாமல் உர்ஸூஸ் கண்ணீரில் தோய்ந்து நின்று அதிகாலையில் வீடுதிரும்பினான்.

## 61. ஊரை விட்டுப்போ

நிகோலஸுக்கும் உறக்கம் பிடிக்கவில்லை; போலீஸ் என்றால், அவனுக்குச் சப்த நாடியும் ஒடுங்கி நடுங்கும்—பயந்தவன். "ஐயோ, இவர்களுக்கு ஏன் இடந் தந்தேன்? குத்தகை பேசியாயிற்றே; இவர்களை எப்படி விரட்டியடிப்பது? இவர்களால் அல்லவா என் மானம் போனது; என் வீட்டில் இரும்புத்தடியர் நுழைந்தனர். இவர்களை எப்படி வீட்டைவிட்டு ஒழிப்பது...." என்று அவன் கவலைகொண்டான்.

இருள் கரைந்தது; கிழக்கு வெளுத்தது; கவலைப் படுக்கையை விட்டெழுந்தான் நிகோலஸ்; அப்போது தடபுடலாகக் கதவுச் சத்தம் கேட்டது; எட்டிப்பார்த்தான்; அங்கிருந்தவர் போலீஸார்; அவர்

களுக்கு முன் ஒரு தொந்திக்கிழவன்—பேர்க்கில் ஃபேத்ரோ. நிகோலஸ் வேட்டை நாய்களைக் கண்ட குழிமுயல்மாதிரி அஞ்சிப்பதறிக் கதவைத்திறந்தான். அவன் உடம்பு உதறலெடுத்தது, வியர்த்தது. அதிகாரிகள் அதிகார தோரணையிலேயே பேசினர்.

—எங்கே உர்ஸுலஸ்?

—இங்கேதான் வசிக்கிறான் எஜமான்களே!

—தெரியும்.

—சமூகத்திற்குத் தெரியாததுண்டா?

—அவனை வரச்சொல்.

—அவன் வெளியே சென்றிருக்கிறான்.

—காலிப்பயல்! எங்கே போனான்?

—இதோ வருகிறான், எஜமான்.

உர்ஸுலஸ் வந்தான்; இரவெல்லாம் அழுதழுது அவன் முகம் வற்றி வெளுத்தது. கவலையில் நடக்கும் கனவுருப்போலே தன்னை மறந்து, கண்ணிழந்தவன் போலத் தடுமாறி, பித்துப்பிடித்தவன்போலப் பிதற்றிக்கொண்டே வந்தான்.

"அண்ணா, எஜமான்கள் உங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்" என்றான் நிகோலஸ்.

உர்: என்ன செய்தி?

அதிகாரிகள்: வாரும் உள்ளே.

போலீஸ் சேவகர் வாயிலில் நின்றனர். பர்க்கில் ஃபெத்ரோவும், நியாய அதிகாரியும் உள்ளே சென்று நாற்காலிகளில் ராங்கியாக உட்கார்ந்தனர். உர்ஸுலஸ், நிகோலஸ் இருவரும் வணக்கமுடன் நின்றனர்.

அதி : ஓநாய் வைத்திருக்கிறீரா ?

உர் : ஓநாயல்ல ; ஓமோ எனது நண்பன், என் ஊழியன்.

அதி : நான்ஸென்ஸ் ! நாளை இந்நேரத்திற்குள் நீரும், ஓநாயும் இங்கிலாந்தை விட்டுச் செல்ல வேண் டும். இன்றேல் ஓநாயைச் சுட்டுக் கொல்வோம் ; உன் னைச் சிறையிடுவோம். தெரியுமா ? கவனம். கட்டும் மூட்டையை !

—எஜமான்களே, நான் செய்த பிழை யென்ன ?

—பேச்சு மூச்சில்லாமல் பெட்டியைக் கிளப்பும். இன்றேல்....

உர்ஸூஸ் திகைத்து நின்றான். நிகோலஸூக் குச் சந்தோஷம் !

“ எஜமான், எப்படிப் போகிறதென்று அண்ணு திகைக்கிறார் ; திவ்யமாகப் போகலாமே ; நாள் முழு தும் கப்பல் போகிறது. இங்கிருந்து டென்மார்க்கு, ஹாலண்டு, ஸ்பெயின் முதலிய இடங்களுக்குக் கப்பல் போன மணியம் வந்த மணியமாயிருக்கிறது. இன்று ஒரு மணிக்கு ‘ஒகரத்’ என்ற கப்பல் போகிறது” என்று தூபம் போட்டான் நிகோலஸ்.

அதி : மெத்தச் சரி, அந்தக் கப்பலிலேயே செல்.

உர் : எஜமான், கப்பலில் எப்படிச் செல்வேன் ? பெரிய பச்சைப் பெட்டி, இரண்டு குதிரைகள், என் சாமான்கள் எல்லாம் கப்பல் கொள்ளாதபடி பெருகி விட்டனவே.

அதி : அதைப்பற்றி எமக்கென்ன ? சட்டம்

சட்டமே; நாளைப்பொழுது விடிந்தால் ஒநாயைக் கொல்வோம்.

"ராக்ஷஸப் பயல்கள்; கொலையே இவர் சட்டத்தின் மகுடம்!" என்று முணுமுணுத்தான் உர்ஸூஸ்.

நிக்: அண்ணு, ஏன் தயக்கம்? வண்டி, குதிரைகள், குமரிகள் எல்லாம் ஸர்க்கஸ்காரர் கேட்கிறார். விற்றுவிட்டு ஹாயாகச் செல்லலாமே.

பர்க்கில்: சரியான யோசனை; சர்க்கஸ்காரரும் இடத்தைக் காலி பண்ணி இன்றே செல்ல உத்தரவு. 'ஸௌத்வார்கில் கோமாளிச் சண்டைகள் வலுத்தன; ஊர் அமைதி கெடுகிறது; கிறிஸ்தவ தருமம் பாழாகிறது' என்று சாமியார்கள் புகார் செய்கிறார்கள். ஆதலால், இங்கே கொஞ்சநாள் இந்த வியாபாரமே கூடாது. இராணியின் ஆணை.

உர்: எஜமான், எல்லாம் விற்று, நானும் ஒமோவும் இன்றே படகேறிச் செல்வோம். ஆனால், இன்னொரு பிரியா நண்பன் இருக்கிறானே—க்வின்ப்ளேன். அவனைவிட்டு....?

பர்க்கில்: க்வின்ப்ளேன் மாண்டான்.

புண்ணில் எரி புகுந்ததுபோலத் துடித்தான் உர்ஸூஸ். இடியுண்ட நாகம்போல் நடுங்கினான்! "மகனே மாண்டாயோ!" என்று வருந்தினான்.

பர்க்கில்: இன்றே மூட்டையைக் கட்டிக் கப்பலேறிச் செல்லும்............

பர்க்கில் ஃபெத்ரோ, உர்ஸூஸ் முதுகைத் தொட்டான். "இந்தாரும் பத்து கினி, ஒரு உத்தமர் உபக்

காகத் தந்தார். செலவிற்கு வைத்துக்கொள்ளும்" என்று காதோடு சொல்லிக் கொடுத்தான்.

என்ன பகல் தீவர்த்திக் கொள்ளை! 'என் தந்தைக்கு' என்று 2000 கினிகள் தந்தான் க்வின்ப்ளோன் சார்லி; அதில் 10 கினி தந்து, மீதி 1990 கினிகளை அமுக்கிவிட்டான் பார்க்கில்ஃபெத்ரோ! பார்க்கில் பணப்பித்தன்; திருட்டுச் சொத்தில் மகிழ்வோன்; பேகன் கும்பலைச் சேர்ந்தவன்; கைக்கூலி மன்னன். 'இவ்வளவு சிரமப்பட்டுக் கண்டுபிடித்து க்வின்ப்ளேனை ஃபேர்மான் சார்லியாக்கிய திறமைக்கு இதுவா பெரிது. இலட்ச லட்சமாக அல்லவா எனக்குத் தரவேண்டும்' என்று அவன் தற்பெருமை கொண்டான்.

பார்கில் எழுந்தான்: "நல்லது; காரியமாயிற்று; இராணி வண்டி எனக்காகக் காத்திருக்கிறது; நான் விண்ட்ஸர் அரண்மனைக்கு விரைந்து செல்லவேண்டும். அரசியிடம் செய்திகள் சொல்லி, ஆணைகளை நிறைவேற்ற வேண்டும். வந்தனம்; விடை பெற்றுக் கொள்ளுகிறேன்" என்று போலீஸ் அதிகாரியிடம் இரகசியமாக ஏதோ சொல்லி, பார்க்கில்ஃபெத்ரோ விடைபெற்றுச் சென்றான்.

நிக்கோலஸ் "கிழவன் ஒழிவான்; பீடை விட்டது" என்று மகிழ்ந்தான்.

நிக்கோ: அதிகாரி எஜமான்களுக்கு ஒரு விண்ணப்பம். இனி ஓநாய் இங்கிராது; உர்ஸஸ் இதோ பயணமாவான். இந்த இருவரையும் நாடு கடத்துவது நமது இங்கிலாந்தின் அமைதிக்கே

மூதன்மையாகும். என் வீடு அமைதியானது; நான் ஏதுமறியேன் ஏழை. இனி என் வீட்டில் இப்படிப் பட்ட கோமாளிகளை நுழையவிடமாட்டேன். அதிகாரிகளே உங்கள் காரியம் ஆயிற்று. போலீசுக்கு இனி இங்கே வேலையில்லை. இங்கே யாரும் குற்றவாளிகளிலர்; வேறு யாரை நீங்கள் கைது செய்ய வேண்டும்?

அதி: உன்னை.

நிக்: ஐயோ, என்னையா?

அதி: ஐயா, நிக்கோலஸ், ஓடல்காரரே, இந்தக் கிழட்டுக் கோமாளியும், ஓநாயும் இதோ போய்விடுவர். குற்றமெல்லாம் உம்மேலேதா னுள்ளது. சட்டத்தை மீறி இதெல்லாம் செய்ய இடந் தந்தவர் நீரே. உங்கள் லைசென்ஸ் ரத்து; நீர் அபராதம் செலுத்த வேண்டியது. நேராக காப்பு மாட்டி ஜெயிலுக்குப் போக வேண்டியது. உமது வேலையாள் கோவிகம் குற்றத்திற்கு உடந்தையானன்; அவனையும் சட்டம் கைதியாக்குகிறது. இத்தனை ரகளையும் நடந்த இந்த விடுதியை மூடிப் பூட்டிவிட வேண்டியது. இனி இந்த மாதிரிக் கோமாளிக்கூத்து செய்யக்கூடாது என்று ஜனங்களுக்கு எச்சரிக்கையாயிருக்கவே இவ்வாறு சட்டம் தீர்மானிக்கிறது....

சட்டம் தனது இட்டத்தைச் செய்து தீர்த்தது.

## 62. மனச்சாட்சியின் புரட்சி

அங்கே டாட்காஸ்டர் விடுதி காலியானது; தயாவின் இதயம் சூனியமானது; அதே காலையில்,

இங்கே கோர்வியோன் மாளிகையில் க்வின்ப்ளேனுக்குச் செல்வ மயக்கம் ஒழிந்து, தயாவின் நினைப்பெழுந்தது. அருளுணர்வுடன் அவன் அகமும் மலர்ந்தது; மனச்சாட்சி எழுந்தது காலைக் கோழிபோலே. மனச்சாட்சி உண்மை யெழுச்சியைக் கூவுகிறது. ஃபெர்மான் சார்லி பிரபு, செல்வச் செருக்கன், அகம்பாவி, தன்னலச் சுகபோகி; க்வின்ப்ளேன் ஏழை, எளியவன், எளியார் நேயன், கருணையாளன், உண்மை மனிதன். நேற்று ஃபெர்மான் முன்னின்றான்; இன்று அவனுள்ளத்தில் க்வின்ப்ளேன் முன்னின்று, "ஆ தயா! ஆ உர்ஸூஸ்!" என்று கூவுகிறான். ஒரு மாயவுலகில் அகப்பட்டவன் தப்பிப் பிழைத்து வீடு வந்து சேருகிறான். வீடு பூட்டியிருக்கிறது, சாவி யில்லை. என் செய்வது? அதே நிலையில் இருந்தான் க்வின்ப்ளேன். "ஆ தயா! நீ எங்கே யிருக்கிறாய்? நான் எங்கே யிருக்கிறேன்?" என்று அவன் கூவினான். கூட்டிலடைபட்ட சிங்கம்போலே அந்த அலங்காரக் கூடத்தில் இங்குமங்கும் விரைவாக நடந்தான். "நான் விண்ட்ஸர் அரண்மனையிலிருக்கிறேன்; கண்ணே, நீ? பிரியாது உன்னைப் பிரிந்து எப்படி வாழுவேன்! நான் இங்கே; நீ அங்கே; யார் நம்மை இப்படிப் பிரித்தது? இது கூடாது; முடியாது. நான் பிரபுவானேனா? நான் உன்னை மறந்தேனா? உயிர் போனாலும் உன்னை மறப்பேனா? நான் ராஜாவானால் நீ ராஜாத்தி; நான் செல்வனானால், நீ என் செல்வி; நான் ஏழையானால் நீயும் ஏழை. யாரோ ஒரு பேதை எனக்கு ராஜாத்தியை மணம் செய்யப்போவதாகச் சொன்னான்; நான் இனி இம்

மாளிகையைவிட்டுத் தப்பமுடியாதென்றான். நான் இந்தச் செல்வக் கூண்டில் அடைபட்ட அடிமையா? நான் என் தயாவை அடையமுடியாத கோழையா! நான் அடிமையல்லேன், கோழையல்லேன்; நான் பிரபு; என் இச்சையை யார் தடுக்கமுடியும்? நான் சுதந்திரன்; பிறர் கைப்பாவையாக ஆடேன். தயா, நான் எதுவோ அது நீ. ஆ! என்னைக் காணமல் நீ வருந்துவாய்; உன்னைப் பிரிந்து நான் வருந்துகிறேன். நமக்கிடையே நிற்பது இச் செல்வ மாளிகை. இதனின்றும் நான் வெளியேற முடியாதென்றான் அப் பேதை; 2000 கினிகளை, தானே எந்தைக்குத் தருவதாகக் கொண்டு சென்றான். என்ன செய்தானே? யார் சேவகர்! குதிரைவண்டி பூட்டுங்கள்; நான் என் அரசியை அழைத்துவரவேண்டும். ஆ, சேவகரைக் காணேமே. நான் பிரபு; இது என் வீடு; என் சேவகரெங்கே? நான் வெளியே செல்லமுடியாதோ? பார்ப்போம். கதவுகளைத் தகர்த்தெறிந்து, பூட்டுகளை உடைத்தெறிந்து வெளியேறுகிறேன். என்னை யார் தடுக்கமுடியும்? இது என் அரண்மனை; அதை நான் என் தந்தைக்கு அளிப்பேன். எந்தை உர்ஸ்லான். நான் பிரபு; என் மனைவி தயா. தயா, இதோ உன்னிடம் வருகிறேன்.

## 63. விசித்திர மாளிகை

க்வின்ப்ளேன் அந்த அறையிலிருந்து அரண்மனைக்குள்ளே மேன்மேலும் சென்றான். திரை திரையாய், அழகு துலங்கியது; அறைக்கு முன் அறைகள் அலங்காரப் பொலிவுடன் தோன்றின. கினான்

சார்ளி அரண்மனை, இதாலியச் சிற்பக்கலையை விளக்குவது. அதில் கதவுகள் அதிகமில்லை. ஏராள மான பட்டுப் படுதாக்கள் உண்டு. ஒவ்வொரு படுதா வின் பின்னும், அலங்காரச் சலவைக்கூடங்கள் உண்டு. அவற்றில் பல நிலைக்கண்ணாடிகள் காணும். கூடச் சுவர்கள் மிகவும் அகலமானவை, தடித்தவை; அச் சுவர்களில் சிறிய உள் அறைகள் இருந்தன. இவற்றிற்குப் பெயர் சிற்றறைகள். இச் சிற்றறைகள் பாப நரகங்கள். பிரபுக்கள் தமக்கு ஆகாதவரைக் கொல்ல, திருட்டுச் சொத்தை ஒளிக்க, தாம் அப கரித்துவந்த அழகிளம் பெண்களை ஒளிக்க, மனம் போனபடி பெண்கள் மானத்தைக் கெடுக்க, காதற் களியாட, ஆகாதபேர்களைச் சிறையிட, யாருக் கும் தெரியாமல் ஆட்களை மூச்சைப்பிடித்து வதைக்க இச் சிற்றறைகள் பயன்பட்டன. இச் சிற்றறைக்குள் அடைபட்ட ஆணோ, பெண்ணோ சுயேச்சையாக வெளியேற முடியாது. ஒரு பெண் பிரபுக்களின் சிற்றறையில் இருக்கிறாள் என்றால், அவள் கற்பு பலமுறை அழிக்கப்பெற்றது என்றே கொள்ள வேண்டும். சிற்றறைகளில் நடக்கும் பெரிய அட்டூழி யங்கள் மிகப் பல. கீழேயுள்ள சில சிற்றறைகளில் படிகள் வளைந்தேறும். அவற்றின் வழியே ஆட்களை மாடிக்குக் கொண்டு செல்வர். அவைகளிற் பல முடுக் குகள் உண்டு; பழகின ஆட்களே அவற்றினின்றும் வெளியே வரமுடியும்.

க்லின்ப்ளேன் ஒரு பட்டுத்திரையைத் திறந்து ஒரு கூடத்திற் புகுவான். அதன் சிற்றறைகளைக் காண்பான்; அவ்வளவுதான். அரண்மனை என்றெண்

னுவான்; இன்னொரு திரை வரும். அதைத் திறந்து புகுவான். இன்னொன்று வரும்—கூடங்களில் பெரிய நிலைக்கண்ணாடிகள் இருக்கும். பார்த்தால் அவை சிற்றறைகளின் கதவுகளாகும். வீட்டில் ஆளரவமேயில்லை. அறைகளுக்கு மேல் அறைகள், திரைக்குப் பின் திரைகள் வந்துகொண்டே யிருந்தன. அந்த அறைகளில் பொன்னும், முத்தும் மணியும், பளிங்கும் குலுங்கின. விதவிதமான அழகுச் சாமான்கள் அவற்றை அலங்கரித்தன. பல நிறங்களின் பொலிவு கண்ணைக் கவர்ந்தது. இவையெல்லாம் க்வின்ப்ளேன் மனத்தைக் கவரவில்லை. இந்த வீண் இடம்பப்பொருள்களெல்லாம் ஏழைகளின் இரத்தத்தைப் பிழிந்தெடுத்த சக்கைகள் என்பதை அவன் அறிவான். அவன் வேண்டியது தயா; அவளிடம் செல்லவே அவன் வழி தேடினான்; செல்லச் செல்ல இந்த அரண்மனையின் மாயம் அவன் வழியை அடைத்து மேன்மேலும் தனது மாயவலையை வீசி நின்றது.

திடீரென்று ஒரு சலசலப்புக் கேட்டது; ஒரு பட்டுத் திரையைத் திறந்து அங்கே சென்றான்; ஒரு ஊற்றுக்குழாயினின்று வெந்நீர்த் திவலைகள் மேலே துள்ளிப் பொசிந்தன. ஒரு எண்கோண அறை; அது முற்றும் சலவைக்கற்களால் ஆனது. அது ஸ்நான அறை; அதன் நடுவிலேயே வெந்நீர்த் திவலையூற்றெழுந்தது. நீர்த்திவலைகள் குழாயைச் சுற்றுந்துள்ள தொட்டியில் விழுந்தன.

அங்கே ஒரு பட்டு மெத்தை—சோபா போட்டிருந்தது; அதில் ஒரு பெண் படுக்கலாம்; அவள்

காலடியில் ஒரு நாயும் இருக்கலாம். அதில் சுகமாகப் படுத்தால் வெந்நீர்த் திவலைகளின் ஆவி உடலுக்குச் சுகமளிக்கும். இந்த ஸ்நான அறையின் மற்றொரு புறம் உடுக்கை அறை இருந்தது. அதில் வெள்ளி மேஜை போட்டிருந்தது. அதன் சலவைச் சுவர்களில் எட்டு நிலைக்கண்ணாடிகள் பளபளத்தன. அங்கே ஒரு வெள்ளி மணியிருந்தது. க்வின்ப்ளோன் திகைப்புடன் சுற்றிப் பார்த்தான். எதிரே சலவைச் சுவற்றில் நீண்ட வெள்ளித் திரை யொன்று கண்டான். அத் திரை மிக வும் மெல்லியது. அதனூடே உள்ளே பார்த்தான் க்வின்ப்ளோன். ஆ, அங்கே ஒரு நிர்வாணக் குமரி படுத்திருந்தாள்.

அது படுக்கையறை; அந்த அறை முழுதும் நிலைக்கண்ணாடி மயமாக ஜொலித்தது. அவற்றிற்கெல் லாம் தங்கப்பட்டம் பிடித்திருந்தது. நடுவே ஒரு வெள்ளிக்கட்டில் போட்டிருந்தது; அதன்மேல் தடித்த அன்னத்தூவி—மெத்தை தலையணைகள்; மெத்தை மேல் பச்சை மோகினி மாதிரி அந்த நிர் வாண ஸ்திரீ படுத்திருந்தாள். அவள் காற்றுப்போல் லேசான டெக்காமஸ்லின்—ஜிப்பாவைக் கழுத்து முதல் கால்வரை அணிந்திருந்தாள்; எனினும், அவள் மேனி முழுதும் ஆடையணியாதவள் போலத் தோன்றியது. அந்த அறைக்கு ஸ்நான அறையி னின்றே வெளிச்சம் மினுக்கியது.

அந்த அறையில் புகவே வெளிச்சம் நாணியது. அவள் மல்லாந்து படுத்து உறங்கினாள்; உறக்கமில்லை; ஏதோ கனவு காண்கிறாள் என்றே சொல்லவேண்டும்.

கட்டிலுக்குக் கீழே ஒரு சைனுப் பட்டுடை விரிந்து கிடந்தது. இந்த அறையின் நான்கு மூலேகளிலும் பெரிய சித்திரக் கண்ணுடிகள் இருந்தன. அவையெல் லாம் தந்திரமான கதவுகள். அவற்றைத் திறந்தால் விசித்திரமான சிற்றறைகள் காணும். சிற்றறை— இரகசியம் முன்பே சொன்னேம். இப் பெண்ணின் தலைமாட்டில் ஒரு சாய்வு மேஜையிருந்தது. அதன் மேல் “அல்குரான்” இருந்தது.

## 64. காமக்கனல்

க்ளின்ப்ளேன் வேறொன்றையும் பார்க்கவில்லை ; அந்த நிர்வாணக் குமரியிடம் அவன் கண்ணும் கருத்தும் கலந்து நின்றன. அவளை அவன் அறிவான், பார்த்திருக்கிறான். அவள் கண்கள் மூடியிருந்தன ; முகம் அவன் பக்கமே திரும்பியிருந்தது. அந்த முகம் அவன் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட ராஜாத்தி முகம். முந்தாநாள் இந்த அழகியின் கனவில் அவன் சொக்கித் தெளிந்தான். மீண்டும் கனவில் ஆழ்ந்தான். தான் பொசுக்கியெறிந்த காதற்கடிதம் மீண்டும் அவன் முன்பு பெரிய எழுத்துக்களுடன் தோன்றியது. இந்த வுலகில் அவனைக் கண்டு காதலித்த ஒரே பெண், செல்வக்குமரி, அவளே ; அவளே ஜோஸேன். நேற்று அவளை மறந்திருந்தான். எதிரே இக் கோலத்துடன் கண்டதும் சண்டமாருதப் புயலில் அடிபட்ட சிறு மரக்கலம்போல அவன் மனவுறுதி தகர்ந்து உடைந்தது. தனிமை ; தன்னை விரும்பிய பெண், நிர்வாணப் பெண், படுக்கை யறை

யில் காண்கிறான்—வாலிப உணர்ச்சிப் புயலைக் கிளப்ப வேறென்னவேண்டும்?

க்லின்ப்ளேன் முதலில் திகைத்தான், மனம் பதைத்தான். பிறகு அவள் அழகை உற்றுப் பார்த்தான்; அந்த இடத்தை விட்டுப் போக முடியவில்லை. மோகனாஸ்திரம் பட்டதுபோலே மயங்கி நின்றான். உணர்ச்சிமேல் உணர்ச்சிகள் எழுந்து அவன் புத்தியை ஆசைக் கடலில் ஆழ்த்தின. பித்துப் பிடித்தது. அவன் ராஜாத்தியைப் பார்க்கவில்லை; தனது ஆசைக்குரிய ஒரு அழகிளம் பெண்ணையே பார்த்தான். "நான் உன்னைக் காதலிக்கிறேன், வா" என்று இந்த மோகனாங்கியே எனக்கு எழுதினாள். வந்தேன்; மூலஸ்தானத்திற்கே வந்து சேர்ந்தேன்; முழுதும் பார்த்தேன். இவளை இங்கே கொணர்ந்தது யார்? என்னை இங்கே சேர்த்ததார்? ஒருவேளை அவன் நான் மணக்கப் போவதாகச் சொன்ன ராஜாத்தி இவளேயோ? எங்கள் இருவரையும் சேர்த்து வைக்கவே இத் தனி யரண்மனைக்குள் எம்மை அடைத்தனரோ? இதோ தனியள் என் வசமிருக்கிறாள்; நான் அவள் வசப்பட்டேன்" என்று காமக் காட்டுத் தீயில் க்லின்ப்ளேன் கண் கெட்டுத் தவித்தான்.

## 65. காதல் பிரசங்கம்

திடீரென்று அக் குமரி விழித்தெழுந்தாள்; மஸ்லின் உடையையும் கழற்றிக் கண்ணாடியில் தன் அழகைப் பார்த்தாள்; பிறகு புலர்ச்சியைக் கண்ட புலிபோல் கொட்டாவிவிட்டு உடம்பை நெளித்தாள்.

க்ளின்ப்ளேன் நெஞ்சு படபடத்தது; கனல் துடித்தெழுந்தது. பெண் நிர்வாணமாக நின்றாள், உடலை வளைத்தாள். பிறகு கீழேயிருந்த சீனப் பட்டுடையை அணிந்து ஒரு கண்ணாடிக் கதவை மெல்லத் தட்டினாள். வெகு ராங்கியாகத் தலையையும் குரலையும் உயர்த்தி, "யாரங்கே? டிர்ரிமோரா? வந்தாயா? பெர்கில்ஃபெத்ரோவா?" என்றாள்; பதிலில்லை.

பிறகு வெளித் திரையை நீக்கி ஸ்நான அறையில் நுழைந்தாள். க்ளின்ப்ளேன் லப்த நாடியும் ஒடுங்கி நின்றான். அவனை அவள் பார்த்தாள், வியந்தாள், திகைக்கவில்லை, அஞ்சவில்லை. "ஆ, க்ளின்ப்ளேன்; நீயா வந்தாய்?" என்று புலிப்போல் பாய்ந்து, அவனை மார்புற இறுக அணைத்துக்கொண்டாள். அந்த வேகத்தில் அவள் ஆடையும் நெகிழ்ந்தது. க்ளின்ப்ளேன் விடுதலைபெற நெளித்தான்; முடியவில்லை. இன்னும் இறுகத் தழுவி அவள் அவன் முகத்தைப் பார்த்து நின்றாள். பிறகு அவனை ஓயாது கொஞ்சிக் குலாவி முத்தமிட்டுத் தனது நீண்ட காதல் பிரசங்கத்தை நடத்தினாள்:

"ஆ, நீ புத்திசாலி; இப்படித்தான் இருக்க வேண்டும் ஆண் பிள்ளை. நீ வந்து விட்டாய்; நீ கெட்டிக்காரன்; அந்த முட்டாள் அன்னாள், (அந்த ராணி) என்னைத் திடீரென்று விண்ட்ஸர் அரண்மனைக்கு அழைத்தாள்; போனேன். அவள் கதவை மூடிக் கொண்டு அந்த மூட மந்திரியுடன் குலாவிக்கொண்டிருந்தாள். பிறகு இங்கே வந்தேன். நீ எப்படி வந்தாய்? அழைத்தபோதும் வந்தாயே; அதுதான் ஆண்மை.

தடைகளை லட்சியம் பண்ணுமல் காதலின் அழைப் பிற்கு உடனே ஓடிவரும் ஆண் பிள்ளையே வீரன். உன்னை யார் இங்கே அழைத்து வந்தது? என் இளஞ் சேவகனு? அவன் கெட்டிக்காரன். அவ னுக்கு 100 கினி இனும் தருவேன். நீ எவ்வழியே வந் தாய்? சொல்லு, உம், சொல்லு.......வேண்டாம் சொல் லாதே; அனுவசியம்; எனக்கு வேண்டியது வழி யல்ல; நீயே. நான் யார் தெரியுமா? நான் இராணி யின் தங்கை; இந்த மாளிகைச் செல்வத்திற்கு அரசி; நீ தெருக்கோமாளி; நான் அழகு. நீ அவலக்ஷணம்; உன்னை நான் காதலிக்கிறேன்; உன்னை அள்ளி அணை கிறேன். அருணேதயம் இருளை அணைவதுபோலும், நரகத்தை சுவர்க்கம் அணைவதுபோலும், கீழான உன்னை, பஞ்சையான உன்னை, மேலான நான், செல்வி யான நான், அணைகிறேன்! உன்னைக் கண்டதும் விரும்பினேன்; விரும்பியதும் பெற்றேன். ஆ, பிரபு போலே உடையணிந்திருக்கிருயே? ஜோராயிருக் கிருயே; எங்கே உன் இளிச்சவாயைப் பார்ப்போம்; மன்மதன் போலிருக்கிருய். நீ வந்து வெகு நேர மானது; நான் ஆடையின்றி உறங்கியதைப் பார்த் தாயோ? பரவாயில்லை; நான் அழகி; அழகிதானே? ஆம். நான் கேள்வி கேட்கிறேன், பதில் சொல்லாதே. உன் குரல் இனிமையாயிருக்கிறது; நீ குயில்போலப் பாடுகிருய்; அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை; உன் முகம் சொக்கழகாயிருக்கிறது; உன் இளிச்சவாய் என்னை மயக்கியது."

க்வின்ப்ளேன் புலி வாயில் அகப்பட்ட மான் போலத் திகைத்தான். அவளை இனித் தப்பமுடியாது.

"வா, என் அழகா, என் காதலா! என் அவலட்சண சுவர்க்கமே!" என்று மீண்டும் அவனை இறுகத் தழுவிப் படுக்கையில் சேர்த்தாள் பச்சை மோகினி. சிறிது நேரம் பேசாச் சுகம்.

பிறகு அவள் கொஞ்சிக் கொஞ்சிப் பேசினாள் :—ஹெலன், கிளியோபாத்திரை முதல் என்வரையில் நாங்கள் சுகபோகங்களை விரும்புவோர். என்னருமை இனிச்சுவாய்—அழகா உன்னை அணைவது எனது ஸ்டுவர்ட் இரத்தத்திற்குத் தாழ்வுதான்; என்றாலும், அந்த இன்பத்தையே நான் மேலாகக் கொண்டாடுகிறேன். கேள், நான் உன்னைக் காதலிக்கிறேன். ஏன்? நான்—அவலக்ஷணக் காதலி; நான் தெருக் கோமாளிகளைக் காதலிக்கிறேன். நான் நரகக் கனியை உண்ணவே நாவூறுகிறேன். க்வின்ப்ளேன், நான் கைப்படா நாண்மலர்; புருஷவாடையே இல்லாத பரிசுத்தக் கன்னி; நான் கற்பரசி; தீ போலத் தூயள்; நான் என்னையே உனக்குத் தருகிறேன். நீ என்னை விரும்புகிறாயா என்பது கேள்வியல்ல; நான் விரும்பினால் வேறு பேச்சில்லை.

க்வின்ப்ளேன் மெல்ல "மாதாம்" (Madam) என்றான். அவன் வாயை ஜோஸேன் தனது பூங்கையால் பொத்தி, "ஹூ— பேசாதே; மூச்சு விடாதே, கேள்" என்று தொடர்ந்தாள் : "என் மனம் கல்; அது உடைந்தால் ஒரு பாம்பு சீறி வரும்; அப் பாம்பின் பெயர் "ஆசை." அந்த ஆசை நினைத்ததை நிறைவேற்றித் தீரும். அதுவே நம்மை இன்று இணைத்தது. நான் உன் காதலி, வைப்பாட்டி, உன்

ஆள், உன் அடிமை. நான் ஆசை; நான் பெண்; நான் யுவதி; நான் கனவு கண்டேன்; அக் கனவே நீ. நான் விரும்பினேன்; உன்னை அடைந்தேன். என்னைக் காலால் மிதி; உன் காலை முத்தமிடுகிறேன். மற்றப்பேருக்கெல்லாம் நான் பயங்கர ஓநாய் போல்வேன்; உனக்கு நன்றியுள்ள நாய் போல்வேன். உன் முகம் பேய்; என் அகம் பேய். உனது நிலை தாழ்வு; எனது நிலை உயர்வு. அதனுலேதான் இருவருக்கும் ஆசைப்பற்றியது. உன் முகமே என் மனத்தின் கண்ணுடி. என் மனமே உன் முகவிளக்கம். என் அருமை க்வின்ப்ளேன், ஒரு காதல் பைத்தியத்தைக் காணவேண்டுமா? இதோ என்னைப் பார்! என்னைத் திட்டு, அடி, உதை, மிருகத்தனமாக நடத்து!—உன்னைக் காதலால் வணங்குகிறேன்! ஆ! ஆசை, ஆசை, என் ஆசைக் காதலா, காதலா!—

புலி நகத்தால் பிடுங்கும்; இந்த அழகுப் புலி உதட்டால் தனது இரையை ஆயிரந்தரம் கொத்திக் கையாற் புல்லியது. பேச்சடங்கியது. இருவரும் ஒருவராஞர். உடலை மறந்தனர், உயிரை மறந்தனர்; ஏதோ ஒரு சுகக்கனவிற் புகுந்தனர்.



மௌனம்! மௌனம்! சுவற்றிற்குள் கிணுகிணுவென்று மணி யடித்தது. ராணியின் அழைப்பிற்கு அது அறிகுறி. “ஆ, அவள் (ராணி) என்ன வேண்டுகிருள்?” என்று ஜோஸேன் இருந்தபடி இருந்தே கூவிஞள். சுவற்றின் ஒரு சிறிய ஸ்ப்ரிங் கதவு திறந்தது; அதன் வழியே ஒரு வெள்ளித்தட்டு

நுழைந்தது; உடனே கதவு மூடிக்கொண்டது. தட்டில் பொன்முடி பதித்து முத்திரையிட்ட கடிதம் இருந்தது. க்வின்ப்ளேனை அணைத்தபடியே ஜோஸேன் பையை எடுத்து உடைத்தாள். அதில் ஒரு கடிதமும் பத்திரமும் இருந்தது. "சை, முட்டாள், இந்தச் சமயந்தான் ராணி இதை அனுப்புவதோ.... அவளுக்கு...." என்று மனவெறுப்புடன் கடிதத்தைப் பார்த்தாள். பிறகு "என் காதலா, உனக்குப் படிக்கத் தெரியுமோ? காதலிக்குச் சேவை செய்ய வேண்டும், தெரியுமா? சரி, படி இதை," என்று அவனிடம் கடிதத்தைக் கொடுத்தாள். க்வின்ப்ளேன் படித்தான் :—

டச்சஸ் ஜோஸேனுக்கு;

"மாதாம்,

அன்பு; இத்துடன் ஒரு முத்திரைப் பத்திரம் அனுப்பியுள்ளோம்; அது ஆங்கிலப் பிரதம மந்திரி வில்லியம் கௌபர் பரிசீலனை செய்து ஒப்புநோக்கி, முத்திரையிட்டனுப்பியது. அதில் மிகவும் முக்கியமான செய்தியுள்ளது. அதாவது, காலஞ்சென்ற லின்னன் க்ளான் சார்லியின் சொந்த மைந்தன் அகப்பட்டான். க்வின்ப்ளேன் என்று பெயர்கொண்ட தெருக் கோமாளியாக அவன் திரிந்தான். இரண்டு வயதில் அவனைக் கொம்ப்ராசிகாஸ் கையில் கொடுத்து அப்படியாக்கினர். அவன் இயற்கைப் பெயர் ஃபேர்மேன் க்ளான் சார்லி. இன்றைய ஆங்கிலச் சட்டப்படி, அவன் ஃபேர்மேன் பிரபுவாகி, க்ளான் சார்லியின் சொத்துகளை ஆளுவான். பிரபுக்கள்

சபையில் விளங்குவான். டேவிட் டிர்ரிமோரின் ஸ்தானத்தில் அவன் இருப்பான். தாங்கள் இருக்கும் கோர்வியோன் அரண்மனையும் அவனையே சேரும். ஃபெர்மேன் பிரபு அங்கே, அருகே இருக்கிறார். நாம் தங்கள் அக்காள், நாட்டிற்கு அரசி. இப்போது தங்கள் மாளிகையிலேயே இருக்கும் ஃபெர்மேன் சார்லி தங்கள் கணவனாவர்! அவரைத் தாங்கள் மணம் புரிக; இது நமது விருப்பமும், ஆணையுமாகும்."

க்வின்ப்ளேன் கடிதத்தைப் பதற்றத்தில் படித்தான். ஜோஸேன் பசக்கென்று அதைப் பறித்தாள்; அத்துடன் இருந்த பத்திரத்தைப் பார்த்தாள். அதுவே சுரக்குடுக்கையில் கொம்ப்-ரா-ஷிக் கிழவன் அடைத்துக் கடலில் விட்ட பத்திரம். "அன்னாள்—மூட்டாள்!" என்றாள். க்வின்ப்ளேனைக் குறிப்பாகப் பார்த்தாள். "அப்படியே ஆகட்டும்!" என்று முணுமுணுத்தாள். மறுபடி புலிபோலப் பார்த்தாள். அவன் வந்த வழியைக் குறித்தாள்: "போ வெளியே!" என்று செருக்குடன் கட்டளையிட்டாள். க்வின்ப்ளேன் கல்லாய்ச் சமைந்தான்; கடலளவு காதல் பேசிய ஜோஸேனா இப்போது கல்மனங் கொண்டு தன்னை விரட்டுகிறாள்!

"நீ என் கணவன்; ஆதலால் போ வெளியே," என்று மீண்டும் அவள் செருக்குடன் கட்டளையிட்டாள். க்வின்ப்ளேன் பேச்சற நின்றான். "இது என் காதலருக்குரிய இடம்; நீ என் கணவன்; இங்கே வர உனக்கு உரிமையில்லை; போ வெளியே," என்று மூன்றுமுறை இடி முழக்கினாள்.

"சரி; போகமாட்டாயா; இதோ நான் போகிறேன்; நல்லது, நல்லது, நீ என் கணவனு? கணவன் என்ருல் எனக்குப் பிடிக்காது; உன்னை நான் வெறுக்கிறேன்," என்று வெகு மோடியாகத் திரையைத் திறந்துகொண்டு அடுத்த அறைக்குச் சென்று மறைந்தாள்.

## டாம் ஜிம் ஜாக்

க்வின்ப்ளேன் தனியே திகைத்து நின்ருன். ஒரு ராக்ஷஸப் பேயினிடமிருந்து விடுதலையானது போல் உணர்ந்தான். ராஜாத்தி மையலும் அவனைச் சுழற்றியது. அவள் மோடியும் அவன் மனத்தைச் சித்திரவதை செய்தது. ஒன்றுந் தோன்ருமல் அவள் படுத்திருந்த கட்டிலில் சாயந்தான் க்வின்ப்ளேன்.

திடீரென்று காலடிச் சத்தம் டக்டக் என்று கேட்டது. பிறகு பாட்டு வந்தது. ஒரு கனவான் மற்ருெரு கண்ணுடிக் கதவைத் திறந்துகொண்டு அந்த அறைக்குள் நுழைந்தான். அவன் கப்பல் அதிகாரி உடையணிந்து ஒரு வாள் வைத்திருந்தான்.

அந்த ஆளை க்வின்ப்ளேன் அறிவான், அறிந்தான். அவனே டிர்ரிமோர். (புதிய ஏற்பாட்டைத் தெரிவிக்க இராணி அவனை வரவழைத்தாள்.)

—க்வின்ப்ளேன்!

—டாம் ஜிம் ஜாக்!

—இங்கே என்ன செய்கிருய் க்வின்ப்ளேன்?

—டாம் ஜிம் ஜாக் இங்கே என்ன செய்கிருய்?

—ஆ, தெரிந்தது; ஜோஸேன் செய்த காரியமா?

க்வின்ப்ளேன் என்ன பிரபுமாதிரி யிருக்கிறாய்?

—டாம் ஜிம் என்ன கப்பல் அதிகாரி மாதிரி யிருக்கிறாய்?

—பதில் சொல்.

—நான் என் சொந்த மாளிகையில் இருக்கிறேன்.

—வேடிக்கை பண்ணாதே; உதை விழும்; சொல் உண்மையை.

—முட்டாள், ராங்கி பண்ணாதே....

—இது நாடகக் கொட்டகையல்ல; கையில் வாளிருக்கிறது; கவனமாகப் பேசு. நான் கடல் இலாகாத் துணைத் தலைவன்.

—நான் இங்கிலாந்து பிரபு.

—ராஜா கூடத்தான்! ஹ ஹ ஹ!

—விளையாடாதே; சவுக்கடி வாங்குவாய். நான் டேவிட் டிர்ரிமோர் பிரபு.

—நான் ஃபெர்மேன் க்ளான் சார்லி பிரபு

—ஜோஸேனை அடையவா அப் பெயர் பூண்டாய்? சரி, உன்னை மன்னிக்கிறேன். ஏனென்றால் நாமிருவரும் ஒரே காதலியின் காதலர்.

இச் சமயம் திரை விலகியது. "இரண்டு கணவர், ஆம், பிரபுக்காள்," என்று ஒரு தொந்திக் கிழவன் நுழைந்தான்.

"ஆ பெர்க்கில்ஃபெத்ரோ!" என்றான் டிர்ரிமோர். பெர்கில் இரண்டு பிரபுக்களுக்கும் பணிந்தான்.

அரசி, ஃபெர்மேனைப் பார்க்க விரும்பினான். கட்டளையைச் சொல்லி அவனை அழைத்துச் சென்றான் பெர்கில்.

## 66. பிரபுச் சடங்கு

காலை முதல் இரவுவரையில், விண்ட்ஸர் முதல் லண்டன் வரையில், கோர்லியன் மாளிகை முதல் வெஸ்ட்மின்ஸ்டர் ஹால் வரையில், படிப்படியாக க்வின்ப்ளேனுக்குப் பதவி உயர்ந்தது.

விண்ட்ஸரிலிருந்து பிரபு மோஸ்தரில் இராணியின் வண்டியில் க்வின்ப்ளேன் புறப்பட்டான். கனவான்கள் அவன் பின்னே குதிரைமேலேறித் தொடர்ந்தனர். தனது தங்கை கணவனை மரியாதை செய்ய இராணி தனது—சேவகரையே அனுப்பி ஒரு இளவரசனுக்குள்ள சிறப்புச் செய்தாள். முன்னால் கருந்தடி பிடித்துக் குதிரைமேல் கட்டியக்காரன் சென்றான்.

பிரட்ஃபோர்டில், முத்துச்சிப்பிபோலப் பளபளத்த நாலு குதிரை சாரட்டு இருந்தது. அதில் பின்னால் நாலு, முன்னால் இரண்டு சேவகர் ஆடம்பரமாக விளங்கினர். வண்டியோட்டி பொய் மயிரணிந்திருந்தான். வண்டியின் நுகம், பெட்டி, பிடி, வார்ப்பட்டை எல்லாம் பொன்மயமாயிருந்தது. குதிரையின் சேணம் வெள்ளி. ஊழியர் தக்க மரியாதைகளுடன் க்வின்ப்ளேனை அந்த இராணி வண்டியில் ஏற்றினர். ஒரு சேவகன் மிகவும் அழகான டவாலி போட்டுப் பின்னே வந்தான். க்வின்ப்ளேன் கட்டியக்காரன் மூலம், அவனைத் தனது டவாலி என்றறிந்தான்.

சாரட்டு ஆடம்பரமாக லண்டனுக்கு விரைந்தது. கிங்ஸ்கேட்டில் நின்றது. கனவான்கள் அதைச் சூழ்ந்தனர். "பிரபு, தொப்பி வைத்துக்கொண்டு இறங்க வேண்டும்," என்றான் கட்டியக்காரன். அவ்வாறே க்வின்டனோன் இறங்கி, முன்னே பரிவாரங்கள் வழி நடத்த, வெஸ்ட்மின்ஸ்டர் மாளிகையின் ஒரு வட்ட அறையில் நுழைந்தான். அதில் வெளிச்சம் மங்கலாயிருந்தது; அதன் நடுவே ஒரு தூண் இருந்தது. அங்கே பதின்மூன்று ஆயுதச் சேவகர், அந்தஸ்திற்கேற்ற ஆடம்பரங்களுடன் நின்றனர். அவர் தோளினும் மார்பிலும் அரசாங்கச் சின்னங்கள் பள பளத்தன. முன் வரிசையிலிருந்த மூவர் செம்பட்டுடையணிந்திருந்தனர். அவர் தோளில் இங்கிலாந்தின் அரசியற் சின்னம் பொறித்திருந்தது. அவர்களுக்குப் பின்னே அறுவர் வெண் பட்டுடை பூண்டு தங்கள் குடும்பச் சின்னங்களை மார்பில் தாங்கினர்; அவர்களுக்குப் பின்னிருந்த நால்வர் கரும்பட்டுடை பூண்டிருந்தனர். அனைவர் தலையிலும் டோப்பா இருந்தது; பாகையில்லை; அனைவரும் வாளேந்தினர். அறை மங்கலாயிருந்ததால், ஆட்கள் முகம் தெளிவாகத் தெரியவில்லை.

எல்லாரும் ஃபெர்மேன் பிரபுவை வணங்கி வரவேற்று மரியாதையாக நின்றனர். கட்டியக்காரன் கருங்கோலை உயர்த்தி "எனது ஃபெர்மேன் சார்லிப் பிரபுவே, ஹங்கர்வில் சீமானே, நான் பிரபு சபையின் முதல் ஊழியன்; நான் தங்களுக்கு ஆயுதத் தலைவர், கார்டர் (Garter) அவர்களை அறிமுகப்படுத்துகிறேன்"

என்றான். உடனே முன்வரிசையில் வெல்வெட்டுடுத்து நின்ற கனவான் நிலந்தோயப் பணிந்து இவ்வாறு சொன்னான்: "எனது ஃபெர்மேன் சார்லிப் பிரபுவே, நான் இங்கிலாந்தின் முதல் ஆயுதத் தலைவன். கருணையுள்ள நார்போல்க் பிரபு எனக்கு இந்த உத்தியோகம் தந்தார். உத்தியோகம் ஏற்கும் திருநாளன்று அந்தப் பிரபு முறைப்படி என் தலையில் சாராயத்தை அபிஷேகித்தார். அப்போது "நான் பிரபுக்களைப் போற்றி நடப்பேன்; தீயாருடன் இணங்கேன்; கனவான்கள் என்ன குற்றம் செய்தாலும் மன்னிப்பேன்; அவர்கள் மேல் குற்றம் சாட்டமாட்டேன். கன்னியருக்கும், கைம்பெண்களுக்கும் வேண்டிய உதவி செய்வேன்" என்று பிரமாணம் செய்தேன். பிரபுக்களின் கருமாதிச் சடங்குகளுக்கு ஏற்பாடு செய்பவன் யானே. பிரபுக்களின் ஆயுதங்களையும் குடும்பச் சின்னங்களையும் காப்பாற்றுவோன் யானே. நான் தேவரீர் ஆணை வழிநிற்க உறுதி கூறுகிறேன்."

இவருக்குப் பிறகு முன் வரிசையிலிருந்த இன்னொரு கனவான் வந்து, பிரபுவே, "அடியேன் இரண்டாவது ஆயுதத் தலைவன்; நான் பிரபுக்களுக்கு அடுத்த படியான சீமான்களின் கருமாதிகளுக்கு ஏற்பாடு செய்பவன். எனது பணிவைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்," என்றான். அவ்வாறே மூன்றாவது கனவான் வந்து, "பிரபுவே வணக்கம்; நான் இங்கிலாந்தின் மூன்றாவது ஆயுதத் தலைவன், தங்கள் ஊழியன்" என்றான். இரண்டாவது வரிசைக் கனவான்கள் முன்வந்து, வணங்காமல் நிமிர்ந்து

படியே, "பிரபுவே, நாங்கள் இங்கிலாந்தின் ஆயுதக் கோமான்கள்," என்றனர். அவருள் முதல்வன் "நான் யார்க்கு கோமான்" என்றான்.

மற்றவருடைய கட்டியக்காரர் "நான் லங்காஸ்டர், நான் ரிச்மாண்டு, நான் செஸ்டர், நான் சோமெர்ஸெட், நான் விண்ட்ஸர்" என்று தமது கோமார் பெயரைச் சொன்னார்கள். பின்னிருந்த நால்வரும் பேசாமல் நின்றனர். அவர்கள் ஆயுதக் கல்லூரி உத்தியோகஸ்தர். அவர்களில் முதல்வன் தாங்கள் இன்னாரென்று சொல்லி வணங்கினான். மற்றவர்களை முறை முறையே "ரெட் க்ராஸ், ரெட் டிராகன்," என்று கூப்பிட்டான். கூப்பிட்டவர் தலைவணங்கி நின்றனர்.

ஆயுதத் தலைவன் கட்டியக்காரனிடம், "பிரபுவை அறிமுகப்படுத்தலாம்" என்று சொன்னான். "பிரபுவே, என் பின் வாருங்கள்; உங்களைப் பிரபுக்கள் வணங்குவர்; தாங்கள் தொப்பி நுனியை மட்டும் சற்றே தொட்டுப் பேசாமல் இருக்கவேண்டும்" என்றான். கட்டியக்காரன் முன் சென்றான்; அவனுக்குப் பின் ஒரு கனவான் சரிகை உடைகளடங்கிய மூட்டையைச் சுமந்து சென்றான்; அடுத்து ஆயுதத் தலைவன் சென்றான். அவனைப் பின்பற்றினான் க்லின்ப்ளேன். மற்றவர்கள் அந்த வட்ட அறையிலேயே நின்றனர். பல அறைகளைத் தாண்டித் தாண்டி க்லின்ப்ளேன், பிரபுக்கள் கூடத்திற்குச் சென்றான். இரவானபடியால் அறைகளில் மெழுகுதிரிகள்

கிளை கிளையாக எரிந்தன. அங்கே பிரபுக்கள் தொப்பி யைத் தூக்கி ஃபெர்மேன் பிரபுவுக்கு வணக்கம் செலுத்தினர். இராணி வீட்டு நிர்வாகி சர் தாமஸ் மான்ஷெல், ஐந்துறைச் சீமான்கள் (Barons of the Cinq Ports), ஹேஸ்டிங்ஸ், டோவர், ஸாண் டவிச், ஹைத், நியூரம்னே முதலியவற்றின் பிரபுக் கள் வணங்கியதும், க்வின்ப்ளேனை ஒரு தனியறைக்கு நடத்தினர். அங்கே மூன்று அரசாங்கக் காரியதரிசிகள் இருந்தனர். அவர்களில் ஒருவர் தென் இங்கிலாந்து, அயர்லாந்து, காலனிகள், பிரான்ஸ், ஸ்விட்ஸர்லாந்து, இதாலி, ஸ்பெயின், போர்ச்சுகல், துருக்கி—ஆகிய தேச விவகாரங்களைக் கவனிப்பவர். இரண்டாவது காரியதரிசி, வட இங்கிலாந்து, ஜெர்மனி, டென் மார்க்கு, ஸ்வீடன், ருஷ்யா முதலிய தேச விவகாரங் களைக் கவனிப்பவர். மூன்றும் காரியதரிசி, ஸ்காத் லாந்து விவகாரங்களைப் பார்க்கும் ஸ்காத்தியராவர். மூவரும் மௌனமாக க்வின்ப்ளேனை வணங்கினர். க்வின்ப்ளேன் தொப்பி நுனியைத் தொட்டு மரியாதை செய்தான். இந்தச் சடங்கானதும் இன்னொரு தனி யறைக்கு க்வின்ப்ளேனை நடத்தினர். அங்கே தங்கக் கதை பிடித்து பிரபுக்களின் கட்டியக்காரன் நின்றான். அங்கே இரண்டு கிழட்டுப் பிரபுக்கள் இருந்தனர்— ஒருவர் வால்டர் பிரபு, மற்றொருவர் அருண்டேல் பிரபு. இருவரும் க்வின்ப்ளேனை வரவேற்று மரியாதை செய்தனர். அங்கிருந்து ஒரு தங்கக் கதவைத் திறந்து அடுத்த அலங்கார அறைக்குச் சென்றனர். அங்கே லார்ட் சான்ஸலர் வில்லியம் கௌபர் ஒரு நாற்காலி யில் அமர்ந்திருந்தார். அவருக்குக் கண் பக்கல் இரா

ணிக்கும் அவ்வாறே; அவரது மேலுதடு லேசு; கீழுதடு தடித்தது; அது அவருடைய பாதி—நல்ல சுபாவத்தைக் காட்டியது. அவர் வலது புறம் ராணியின் குமாஸ்தா அமர்ந்திருந்தான்; இடது புறம் பார்லிமெண்டு குமாஸ்தா அமர்ந்திருந்தான்; இருவரும் தமது அலுவலுக்குரிய குறிப்பு, பேரேடுகளைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அவருக்குப் பின்னால் ஜவான்கள் இருந்தனர். அவர்கள் கதை பிடிப்பார், சட்டை வாலைச் சுமப்பார், பை சுமப்பார். அவர்களும் நீண்ட பொய்ம் மயிரணிந்தனர். அவருக்கருகே தங்கப்பிடிவாளும், உறையும், வெல்வெட் அரைக் கச்சையும் இருந்தன. இராணி குமாஸ்தாவின் பின்னே, கையில் பட்டாபிஷேக உடைகளுடன் ஒருவன் நின்றான். பார்லிமெண்டு குமாஸ்தாவுக்குப் பின்னே, ஒரு பிரபுவுக்குரிய பார்லிமெண்ட் உடைகளை ஏந்தி ஒருவன் நின்றான். இரண்டும் ஜரிகை வேலைசெய்த தீ நிற வெல்வெட்டுடைகள். பட்டாபிஷேக உடையில் ஜரிகை வேலை அதிகம். இன்னொரு உத்தியோகஸ்தன் பிரபுக்கள் பெயர் பதியும் பேரேட்டை வைத்திருந்தான். இரண்டு கிழப் பிரபுக்கள் ஃபெர்மேன் சார்லியை அமைச்சர் கௌபருக்கு அறிமுகப்படுத்தினர்; ஆயுதத் தலைவன் தனது துணைவன் சுமந்துவந்த வெள்ளியுடைகளுடன் இராணியின் அறிக்கையை வணக்கமுடன் அமைச்சருக்கு அளித்தான். அந்த அறிக்கை ஃபெர்மேன் சார்லியைப் பற்றியதே. குமாஸ்தா அதைப் படித்தான். அதன் முடிவில்,

"நமது பாராள் மன்றத்தில் அமரும் பிரபுக்களுடன் அமர்ந்து, அரசையும், சர்ச்சையும் பற்றிய எல்லா விவகாரங்களிலும், மனமாரப் பங்கு கொண்டு, இங்கிலீஷ் ஆட்சிக்குத் துணைபுரியத் தங்களுக்கு ஆணையிடுகிறேன்" என்று குறித்திருந்தது. லார்ட் சான்ஸெலர் வில்லியம் கௌபர் கம்பீரமாக எழுந்து, "இராணியின் உத்திரவைப் படித்தாயிற்று, க்ளான் சார்லி பிரபுவே, ரூபாந்தரம், சாமியார்—வணக்கம், தனிப்பூசை ஆகிய கத்தோலிய வழக்கங்களைத் துறந்தீரா?" என்று கேட்டார். க்லின்ப்ளேன் தலை வணங்கிச் சம்மதம் கூறினான்.

—இராணியின் உத்திரவு அமுலுக்கு வந்தது.

—ஃபெர்மான் சார்லி பிரபு பாராள் மன்றத்தில் இடம் பெற்றார்.

—க்ளான் சார்லி பிரபுவே உட்காருங்கள்.

—அவ்வாறே.

பிறகு பார்லிமெண்டில் அமரும் பிரபுவுக்கேற்ற உடைகளை அணிவித்து, இடுப்பில் கச்சைகட்டி வாளைத் தொங்கவிட்டனர். சட்டைப் பையில் சிவப்புப் பட்டைபோட்ட குறிப்புப் புத்தகத்தை நுழைத்தனர். குமாஸ்தாக்கள் பேரேட்டில் இந்தச் சடங்கைப் பதிவு செய்தனர். அதிற் கையெழுத்திட்டு அமைச்சர் எழுந்து, "ஃபெர்மேன் சார்லி பிரபுவே, ஹங்கர்வில் சீமானே, கோர்லியோன் கோமானே, பெரிய பிரிட்டன் பிரபுக்களிடையே தங்களை வரவேற்கிறேன்" என்றார். உடனே ஒரு பெரிய பொற் கதவு திறந்தது. ஃபெர்மேன் சார்லி, பிரபுக்கள் சபையில் நுழைந்தான்.

இத்தனைச் சடங்குகளுடன் க்வீன்ஸ்டோன் சார்லி பிரபுவானான்.

இளிச்சவாயனுக்கு அடித்த சுக்கிரதசைதானென்னே! பச்சைவண்டி அரங்கில் கோமாளியாட வேண்டியவன், பாராள் மன்றத்திற் கோமானாக விளங்குகிறான்! அதிட்டம் அம்மானையாடுகிறது! அம்மானைக்காய் எப்படிச் செல்லுகிறதெனக் காண்போம்.

## 67. பிரபுத்வம்

பிரபுத்துவம் பிரான்ஸில் பிறந்து இங்கிலாந்திற்குத் தாவியது. பிரெஞ்சுப் பிரபுத்துவம் சார்லிமாந் (Charlemagne) காலத்தில் உண்டானதென்பர். நாட்டிலுள்ள செல்வரையும் பலசாலிகளையும், அறிவாளிகளையும் வசப்படுத்தித் தன் கைக்குள் போட்டுக் கொண்டான் மன்னன். அவர்களுக்கு ஏராளமான செல்வமும் செல்வாக்கும் தந்தான். எதற்கு? நாட்டில் தனது சுயேச்சாதிகாரம் தாராளமாகச் செல்லத்தான். நரிகளை ஏவி, ஆடு பிடிக்கும் புலியின் கதை போன்றது மன்னன் பிரபுக்களைக் கொண்டு குடிகளை அடக்கியாண்டது. பிரெஞ்சுப் பிரபுக்கள், ஏராளமான செல்வம் பெற்றனர். சுகபோக வாழ்வைக் கற்றனர். கோட்டைகள் கட்டினர். அவற்றில் தமக்கு ஆகாதபேரைக் கொண்டுவந்து சித்திரவதை செய்தனர். ஸ்பானிய இளவரசர் போல ஆடம்பரமாக உடுத்திச் செருக்குடன் உலாவினர். தெய்வத்திற்கு அடுத்தபடி அரசன், அரசனுக்கு அடுத்தபடி நாமே என்று நினைத்தனர். அந்த அரசாங்கச் சபை

பார்லிமெண்டுச் சட்டங்களும் பிரெஞ்சு மொழியிலேயே எழுதப்பெற்றன. எட்டாவது ஹென்றியின் காலத்திலிருந்தே அவை ஆங்கிலத்தில் எழுதப் பெற்றன. பிரபுக்கள் சபை, பொதுஜன சபை என்று பார்லிமெண்டில் இரண்டு சபைகள் உண்டு. பிரபுக்கள் சபையே நீண்ட காலமாக எல்லா அதிகாரங்களையும் வகித்தது. பொதுஜன சபையினர் யாராவது பிரபுக்களைத் தாழ்வாகப் பேசினால் உடனே கூட்டு மேல் ஏறவேண்டும். லண்டன் டவர் சிறையில் வாட வேண்டும். பிரபுக்கள் ஒவ்வொருவராக ஓட்டுச் செய்வர். பொதுஜன சபையினர் "ஆம், இல்லை" (Aye, No) என்று இரண்டே பிரிவாகித் தமது சம்மதத்தைத் தெரிவிப்பர். பொதுஜனங்கள் குறை கூறலாம், குற்றம் காட்டலாம்; தீர்ப்புச் சொல்பவர் பிரபுக்களேயாவர்.

இங்கிலாந்தில் ஒரு காலம் வெள்ளை ரோஜா—சிவப்பு ரோஜா என்று இரண்டு கட்சிகளாகப் பிரிந்து பிரபுக்கள் அரசுரிமைக்காகப் போர்புரிந்தனர். அந்த ரோஜாச் சண்டையில் பிரபுத்துவத்தின் வேகம் மெதுவாக இறங்கிப்போயிற்று. இப்போதிருக்கும் இங்கிலீஷ் ஜாதி, பல ஜாதி கலந்தது. நிலத்துக்குரியவர் பிரித்தானியர். அவர்களை வேல்ஸ், அயர்லாந்து இவற்றிற்குத் துரத்தியடித்து, ஜெர்மனியின் வடக்கே இருந்து குடியேறிய அன்னியரே ஆங்கிலேயர். இங்கிலாந்தை ரோமர், டேனியர், நார்மானியர் முதலியோர் ஆண்டனர். பிரபுக்களே முடிவாக இங்கிலாந்து என்று நமது நாட்டிற்குப் பெயரிட்டனர். ஆதியிலிருந்த சுதேசிய மதத்தை ஒழித்து,

அவர்களே ஆங்கில மதத்தை அரசன் மதமாக்கினார்கள். 1534-ல் போப்பை மீறி இவர்களை அங்கீகரித்தனர் பிரபுக்கள். அரசனானாலும் சரி, தெய்வமானாலும் சரி, தங்கள் சுயேச்சாதிகாரத்தின் குறுக்கே வந்தால் பிரபுக்கள் கத்தி தீட்டிக் கலகஞ்செய்வர். கோடாலியும், தூக்கு மேடையும் அவர் கையிலிருந்தன. கரடியைத் துரத்தும் வேட்டை நாய் போலே இவர் அரசாட்சியைத் துரத்திக் கைப்பற்றினர். பிரபுத்துவமும் அரசும், வெருகும் பூனையும் போலவே வாழும். அரசர் தமது வைப்பாட்டி பிள்ளைகளைப் பிரபுக்களாக்கித் தமக்குச் சாதகமாக வைத்துக் கொள்ள முயன்றனர். இந்த வைப்பாட்டி மகன்களின் சூழ்ச்சிகளை ஷேக்ஸ்பியர், "கிங் லீயரில்," எட்மண்ட் (Edmund) என்பவன்மூலம் நன்றாக விளக்குகிறார். "வைப்பாட்டி மகன்? யார்? நானா? இருந்தாலென்ன? சொந்தப் பிள்ளையைப்போலே நான் வாட்ட சாட்டமாயில்லையா? என் மனம் தாராளம், என் அறிவு கூர்மை; நானும் என் அப்பன் பிள்ளைதானே; என் பிறப்புரிமையை ஏன் மறுக்கின்றனர். இருக்கட்டும்; பிறப்பினால் இல்லாவிட்டால், என் அறிவினால் என் அப்பன் நிலபலன்களை ஆளுகிறேன் (Let me, if not by birth, have lands by wit)" என்கிறான் எட்மண்டு. அதுபோலவே அக்கால அரசரின் வைப்பாட்டி பிள்ளைகள் அரசியல் அதிகாரம் பெற்றனர். அதிகாரம் வந்தபிறகு...தேளுக்கு மணியம் கொடுத்தது போலத்தான்! ஆங்கில நாட்டு வரலாறே பிரபுத்துவ வரலாறும். பிரபுக்கள் ஒருபுறம் அரசனை இணக்க முயன்றனர்; மற்றொரு

புறம் குடிகளை வணக்கி நசுக்க முயன்றனர். நீண்ட காலமாகப் பொதுஜன சபை பேருக்குத்தான் இருந்தது; பிரபுக்கள் சபை ஒப்பினாலேதான் பொதுஜனத் தீர்மானம் சட்டமாகும். அரசத்வம், பிரபுத்துவம் இரண்டும் கண்ணில்லாத அசுர பலங்கள். அவை இரண்டும் சேர்ந்து ஏழைக்குடிகளை நசுக்கிச் சித்திரவதை செய்தன. அவை இரண்டிற்கும் இங்கிலாந்தில் சண்டை நடந்ததால் ஜனநாயகம் சிறிது தலை தூக்கி ஏதோ காலே அரைக்கால் சுதந்திரம் நிலவுகிறது.

ஆனால், மணியடித்தாயிற்று; மன்னர் மகுடம் மண்ணிற் சாய்கிறது. யதேச்சாதிகாரம் ஜனநாயகத்தின் முன்னே மறைந்துவருகிறது. பிரபுத்துவம் தனது சுகபோக லீலைகளை இனிச் செலுத்தமுடியாது; உலகம் விழித்துக்கொண்டது. பல பேர் உழைப்பை யுண்டு சில பேர் எஜமான்களாக வாழும் செல்வச் சோம்பேறி வாழ்க்கை இனிச் செல்லாது. மதம், அரசியல் இரண்டிலும், இனித் தனியுடைமையும், பணச் செருக்கும், பிறரை அடிமைப்படுத்தும் அகம்பாவமும் இருக்க இடமில்லை. உலகம் விழித்துக்கொண்டது உழைப்பும் பிழைப்பும் அனைவருக்கும் ஒன்றாகும் காலம் வந்தது. உழைப்பவரே பிழைப்பவர் என்னும் நிலைமைக்கு ஜனநாயக உணர்ச்சி முன்னேறி வருகிறது.

## 68. பிரபுக்கள் சபை

இப்போதிருக்கும் பிரபுக்கள் சபையே வேறு; முன் இருந்த கட்டிடத்தை இடித்து, புதிதாகக் கட்டி

யிருக்கிறார்கள். வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேயின் பக்கத்தில் ஒரு பழைய பெரிய நார்மன் அரண்மனை யிருந்தது. அது எட்டாவது ஹென்றி காலத்தில் தீப்பிடித்து எரிந்தது; அதில் மிச்சமிருந்த கட்டடத்தை மராமத்துச் செய்துதான் பிரபுக்கள் சபை, பொதுஜன சபை இரண்டையும் இருசிறகில் அமைத்தனர். முன்னே பிரபுச் சபை நீண்ட சதுரம்; இப்போது முட்டை வடிவம். சதுரத்திற்கும் வட்டத்திற்கும் எவ்வளவு வேற்றுமை யுண்டோ அவ்வளவு வேற்றுமை முற்காலப் பிரபு சபைக்கும் தற்காலப் பிரபு சபைக்கும் உண்டு. கடப்பாறை பார்லிமென்டின் கட்டடத்தை மாற்றியதுடன், அதன் போக்கை யும் மாற்றிவிட்டது.

இனி அன்றன் காலத்திலிருந்த பழம் பிரபுக்கள் சபையில் நாம் இன்று புகுவோம். பிரபுக்கள் சபை செஸ்ட்நட் மரத்தால் உத்திரம் வேய்ந்த உயர்ந்த கட்டிடம். அதற்கு நான்கு பெரிய ஜன்னல் வழியே வெளிச்சம் வரும். இரவில் பளிங்கு மெழுகுதிரி விளக்குகள் கிளை கிளையாக எரியும். வெளிச்சம் சுமாராகவே இருக்கும். ஆதலால் ஆந்தைகளுக்கு அதிக வெளிச்சம் பிடிக்காது. இந்த ஹால் கடைசிக்கு நேர் எதிரே விரிப்பிட்ட சிங்காதனம் விளங்கும். அதன் பக்கத்தில் கனைப்புத் தி காயும். அரியணைக்கு வலது புறம் மூன்று வரிசையாக மெத்தை-பெஞ்சுகள் போட்டிருக்கும். அவற்றில் பிஷப்புகள் அமர்வர்; அரியணைக்கு இடதுபுறம், அவ்வாறே மூன்று வரிசையாக அமர

கார பெஞ்சுகள் உண்டு; அவற்றில் கோமான்கள், மஹாப் பிரபுக்கள், பிரபுக்கள், சீமான்கள் ஆகியோர் "ஜம்" என்று கொலுவீற்றிருப்பர். அரியணைக்கு எதிரே வைகௌண்டுகள் அமர்வர். அவர்களுக்குப் பின்னால் பாரன்கள் அமர்வர். பாரன், வைகௌண்ட், ஏன், மார்க்விஸ், ட்யூக், பீர், லார்ட்—ஆகிய பெயர்களெல்லாம் பிரபுத்துவத்தின் ஸ்தாயி வரிசைகளாகும்.

சிம்மாசனத்தின் வலதுபுறம் உயர்ந்த பெஞ்சுகளில் காண்டர்பரி, யார்க் ஆர்ச் பிஷப்புகள், உட்காருவர். 'பெஞ்சு' என்றால் பள்ளிக்கூட விசுபலகை யில்லை; பிரபுக்கள் உட்காரும் பெஞ்சுகள் உயர்ந்த வேலைப்பாடுகளுடன் வெல்வெட்டு மெத்தை தைத்து, விளங்கும். பிரபுக்கள் நாலைந்து மணி நேரம் ஓரிடத்தில் தமது ஸ்வரூபத்தை அடக்கிக்கொண்டு உட்காரவேண்டுமானால் அதற்கு எவ்வளவோ ஏற்பாடுகள் வேண்டுமல்லவா? அவ்வளவும் அச் சபையிலும், பெஞ்சிலும், மேஜையிலும், அடுத்துள்ள அறைகளிலும் செய்யப்பெற்றிருக்கும். தெய்வ வரப்பிரசாதத்தினாலேதான் ஒரு ஆர்ச் பிஷப் வருகிறான் என்ற நம்பிக்கை அக்காலம் இருந்ததால் அவருக்கு உயர்ந்த இடம் தந்தனர். அரியணையின் வலதுபுறம் இளவரசனுக்கு நாற்காலி போட்டிருக்கும். இடதுபுறம் அரசன் பந்துக்களான கோமகருக்கு அலங்கார நாற்காலிகள் போட்டிருக்கும். பின்னால் பிரபு வீட்டு மக்கள் உட்காருவர். இரண்டு வரிசை பெஞ்சுகளுக்கும் இடையே ஒரு பெரிய சதுர இடமுண்டு. அதில் மூன்று ஸ்தானங்கள் அமைத்திருக்கும். ஒன்றில்

லார்ட் சான்ஸலர் உட்காருவார்; மற்றொன்றில் ஜட்ஜுகளும், ஸ்டேட் கௌன்ஸிலர்களும் உட்காருவர்; மற்றொன்றில் அரசாங்கக் காரியதரிசிகள் அமர்வர். இவர்களெல்லாம் ஓட் செய்யலாம்; ஆனால், பேசக்கூடாது. அவர்களுக்கருகே அரசர் குமாஸ்தாவும், பார்லிமெண்டரி குமாஸ்தாவும் தங்கள் தஸ்தாவேசுகளுடன் உட்காருவர்.

முன் சொன்ன சதுர இடத்திற்கு நடுவே ஒரு பெரிய மேஜைமேல் ரிகார்டு கட்டுகளும், தீர்மானக் காயிதங்களும், மனுக்களும், குறிப்பு பேரேடுகளும் அடுக்கப்பெற்றிருக்கும். அந்த மேஜையின் நான்கு மூலைகளிலும் மெழுகு திரி விளக்குகள் எரியும். கட்டியக்காரன், டபேதார், மொக்சி முதலிய சேவகரெல்லாம் டவாலி போட்டுக்கொண்டு அவரவர் இடத்தில் இருந்து கடமை காப்பர்.

எலிஜபெத் ராணி, பிரபுக்களின் தொகையை வெகுவாகக் குறைத்தாள். அவள் காலத்தில் 65 பிரபுக்களே சபையிருந்தனர். ஜேம்ஸ் II, 188 பிரபுக்களைச் சபையிருக்கச் செய்தான். அன்னாள் காலத்தில் 207 பிரபுக்கள் சபை வீற்றிருந்தனர். கத்தோலியப் பிரபுக்கள் சபைக்கு வருவதில்லை. பிரபுக்கள் சபையின் அலங்காரத்தைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை. எல்லாம் பூவேலைதான்; எங்கும் சித்திரப் படங்கள் மிளிரும். அவற்றில் ஸ்பானிஷ் ஆர்மடாக் கப்பல் அமிழும் காட்சி பின்னப்பெற்றிருந்த திரைச்சேலையின் வேலைப்பாடு பளிச்சென்றிருந்தது. அது பிரபுக்கள், எலிஜபெத்திற்கு வழங்கிய அன்புக் காணிக்கையாம்.

இந்தப் பிரபுக்கள் சபையில் இனி நடந்த ஃவின்ப்ளேன் சார்லியைக் கவனிப்போம். கிங்ஸ் கெட்டிலிருந்து பிரபுச்சபை வரையில் நடக்கவேண்டிய சடங்குகளெல்லாம் மங்கலான வெளிச்சத்திலே நடந்தன. அது இராணி, வில்லியம் கௌபருக்கு இட்ட கட்டளை. எதற்காக? ஃபெர்மேன் சார்லியின் இளிச்சவாய் தெரியாமல் இருப்பதற்காக. ஒரு பிரபுவின் அங்கக் குறைகளைப்பற்றி யாரும் மூச்சுவிடக் கூடாது. இளிச்சவாயைப் ‘பவள மலர்வாய்’ என்றுதான் சொல்லவேண்டும். இங்குக் கூடிய பிரபுக்களில் சிலர் நரைதிரை விழுந்த தொண்டு கிழவர்; சிலர் கண்டங்கல், சிலர் கூனல், சிலர் பூனைக்கண்ணர்—என்றாலும் பெண்களும் பிரபுக்களும் தம்மை என்றும் இளந் திருவாளராகவே நினைத்துக்கொள்வர். ஒரு பெண்ணின் வயதைக் கேட்கக்கூடாது; பிரபுவின் வயதையும் [illegible]ப்படியே. அட்லாஸ் படம்போலே முகம் சுருக்கமும் சொள்ளையுமாக இருந்தாலும் “பூரண சந்திர பிம்பம்” என்றே சொல்லவேண்டும். பெண்களைப் போலவே பிரபுக்களும் முகஸ்துதியை விரும்புவர். “புதிய பிரபு இளிச்சவாயாமே” என்றாள் இராணி. “வாய் இளிச்சால் பிரபு வார்த்தைக்கு மதிப்பில்லாது போகுமா? ஒரு பிரபுவின் முகம் பிரபுத்துவமே” என்று லார்டு சான்ஸலர் சமாதானம் சொன்னார்.

இருட்டானதும் மற்றப் பிரபுக்கள் வருமுன்பே ஃபெர்மேன் பிரபு சபையில் அமர்ந்தான். அவனுக்கு இருபுறமும் இரண்டு கிழட்டுப் பிரபுக்கள் அமர்ந்தனர். பிரபுக்களெல்லாம் திடபுடலாக வந்து

அரியணைக்கு வணங்கியபின் தத்தம் இடங்களில் அமர்ந்தனர். சபை நிறைந்தது. காண்டர்பரி ஆர்ச் பிஷப் பிரார்த்தனை செய்தார்; உடனே நடவடிக்கை தொடங்கியது; பார்லிமெண்டரி குமாஸ்தா புதிய பிரபுவின் வரலாற்றையும், வரவையும், இராணியின் அங்கீகாரத்தையும் படித்து முடித்தான். க்வின்ப்ளேன் பெர்மான் சார்லி பிரபுவானான். இனி அவனை அசைக்க முடியாது. அவனுடல் பிரபுக் கோலத்துடன் விளங்கியது. அவன் உள்ளமோ ஏழைகளைப் பற்றியே சிந்தித்தது. செல்வர் எளியர் இருவரும் ஒருவராக அவனிடம் சேர்ந்து விளங்கினர்.

## 69. பிரபுக்கள் அரட்டை

இன்று ஏழு மணிக்கு யாருக்கும் தெரியாது; எட்டு மணிக்கோ, லண்டன் நகரம் முழுதும் அதே பேச்சுத்தான். கோமான் முதல் குதிரையோட்டி வரையில் அதே பேச்சுத்தான். எதே பேச்சு? இளிச்சவாயன் மனுஷப் பிரபுவான பேச்சு. பிரபுக்கள் சபைக்கு வந்ததும் அதைப்பற்றியே அரட்டையடித்தனர்.

—ஹ ஹ ஹ!

—ஹா ஹா ஹா!

—உண்மைதானா?

—ஆமான்னா?

—என்ன, அந்த இளிச்சவாய்க் கோமாளியா!

—ஆமா ஸ்வாமி ஆமாம்; ஆமாம்!

—அதெப்படி?

—சக்கிரத்தை அடித்தது; கோமாளியை விண்ட் வெளில் கொண்டு தள்ளியது !

—நேற்று அவனைப் பார்த்தால் "இந்தாடா இனிச்சவாயா," என்று ஒரு பார்வை வீசியெறிந் திருப்பேன்.

—இன்று ? ஃபெர்மான் சார்லி பிரபுவே வணக் கம் என்பீர் !

—இப்போது, நமது வாய்தான் இனிக்கிறது.

—மைலார்ட் பூரே !

—ஏன், மைலார்ட் டோர்செஸ்டர் ?

—நீர் கிழட்டுப்புலியாயிற்றே ; லின்னாக் க்ளான் சார்லியை உமக்குத் தெரியுமா ?

—ஆஹா, அந்தக் குடியரசுப் பித்தனை நான் பார்த்திருக்கிறேன். அந்த 'ஜினோவா ஆந்தை' இறந் ததும் எனக்குத் தெரியும்.

—இல்லை பூரே பிரபுவே ; க்ளான் சார்லி நியாய மான சுதந்திரவாதி. கிராம்வெல் நண்பர்; சார் லெஸ் II-ன் சுயேச்சாதிகாரம் பிடிக்காமல் ஸ்விட்சர் லாந்திற்குச் சென்றுவிட்டார். அவர் நியாயமான அரசியல் வாதி.

—நியாயமான....அரசியல் வாதியா ? அரசியலுக் கும், நியாயத்திற்கும், வாதிக்கும், என்னங்காணும் சம்பந்தம் ? மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறீரே! உமக்கு அனுபவம் போதாது. நாளாக ஆகத் தெரிந்துகொள்வீர் நமது அரசியலுக் கும் நியாயத்திற்கும் உள்ள தூரத்தை. ஆளிடம் பணிவ

கிடையாது; தனக்கு லார்ட் சான்ஸலர் வேலை கிடைக்கவில்லையென்று மூக்கைத் துருத்திக்கொண்டு ஓடினன். அந்தக் குட்டெல்லாம் எனக்குத் தெரியுங் காணும். ஸர் தாமஸ் மூர் கழுத்தை வெட்டியது எவ்வளவு நியாயமோ, அவ்வளவு நியாயம் க்ளான் சார்லி நாடு கடந்து தனிமையில் இறந்ததும் ஆகும்.

—உமக்கு அவர் குடும்பத்தைத் தெரியுமா?

—அவர், அவர் திருத்தாத்தா எல்லாரையும் தெரியும்.

—அவர் கிழட்டு வயதில் கலியாணம் செய்து கொண்டாராமே!

—அதனலென்ன? மீசை நரைத்தால் ஆசை நரைக்குமோ? உன்னைப்போன்ற வாலிபக் காளை தான் இளம் பெண்களை மணக்கவேண்டுமோ? என் முன்னே அந்த வார்த்தை சொல்லாதேயும்.

—தாத்தாவை அப்படிச் சொல்லுவேன? க்ளான் சார்லிக்கு மகன் உண்டாமே.

—மகன் மாண்டான்.

—இல்லை. இருக்கிறன்.

—இல்லேலென்ன, அந்த மகன் இறந்து புதைந்து பண்ணினதை ஜேம்ஸ் மன்னனே எழுத்து மூலம் நிரூபித்தானே.... பிறகு?

—இல்லேலென்ன? திரும்பிப் பாரும், பின்னலே, அதோ இருக்கிறனே, அவனே ஃபெர்மான் சார்லி....

—ஆளைக்காணேமே? மயிர்க் கும்மல்தான் காண்கிறது.

—இரண்டு கிழட்டுப் பிரபுக்களுக்கு நடுவே பாரும்.

—சரி சரி சரி........

—மைலார்ட் கோல்பெப்பர்!

—ஏன் மைலார்ட் கிராந்தாம்?

—நமது டிர்ரிமோர்? பாவம்!

—என்ன பாவம், ஆள் ஜோராகத்தானே இருக்கிறான்.

—அவனுக்குப் பிரபுத்துவம் நாஸ்தி.

—ஹா....என்ன?

அவனை நாஸ்தி பண்ண வந்தான் இளிச்சவாயன் ........பாரும் அங்கே....

சபை முழுதும் இவ்வாறு புதிய பிரபுவைப் பற்றியே பேச்சாயிருந்தது. எல்லாரும் எட்டி எட்டிப் பார்த்தும் இளிச்சவாயைக் கண்டுபிடிக்க முடியவில்லை. கிழட்டுப் பிரபுக்களின் பொய் மயிர் மேகத்தில் அவன் மறைந்திருந்தான்.

இச் சமயம் பிரபுக்களிடம் ஒரு சுற்றறிக்கை வந்தது. அதில் மூன்று வரிகளே காணப்பெற்றன. அவை ஃபெர்மான் பிரபுவைத் தான் மணப்பதாக ஜோஸேன் இராணிக் கெழுதிய பதிலாகும்.

" மதாம்,

இந்த ஏற்பாடு எனக்கும் சம்மதமே. ஃபேர் மான் க்ளான்சார்லி என் கணவனாகட்டும்; டேவிட் டிர்ரிமோர் பிரபு என் காதலனா யிருக்கட்டும்."

—ஜோஸேன்.

இந்த அறிக்கையைப் படித்ததும் இளம் பிரபுக்கள் ஒருவரையொருவர் தமாஷ் செய்தனர்.

—சபாஷ்! அப்படிப்போடு சக்கை! சரியான ஜோடி.

—இராசாத்திக்கும் இளிச்சவாயனுக்கும் கண்ணாளம்!

—ஆமென்!

—ஆமா, அவள் இவனைத்தான் மதிக்கப்போகிறாள்!

—மிதிக்கப்போகிறாள்.

—மை டியர் லார்ட் டூரா, நீர் பண்ணிக்கிறீரா ஜோஸேனை?

—ஐயோ வேண்டாம். அவளுக்குக் கணவன் பிடிக்காது. காதலரே வேண்டும்.

—ஏங்காணும்! ஆள் சிலையிலடித்தது போலிருப்பாள். என்ன நாளுக்கு, தனக்கு மினுக்கு....நீர் காதலனாகவாயினும் இருமே!

—ஐயையோ வேண்டாம்! என்னைத்தூக்கி அவள் விழுங்கிவிடுவாள். அந்தத் திமிங்கிலம்பேச்சு வேண்டாம்.

—போங்காணும். அவள் ஒருவனுக்கு எவ்வளவு இன்பமளிப்பாள் தெரியுமா?

—ஒருவனுக்கா? பலருக்கு............ஓராயிரம் பேருக்கு என்று சொல்லும்.

பெண்ணுக்குப் பிழை சொல்லாதேயுங்காணும். அப்படித்தான் உலகம்........பெண்ணென்றால் இன்பக் கடல்; அதில் ஆளுக்கு ஒரு கை அள்ளிப்பருகினால் குறையென்ன?

—இன்பக்கடலா ? உமக்கின்னும் அகத்துக்காரி யாரில்லை ; அதனால் சொல்லுகிறீர். பெண்ணைப் பெற்றது யார் தெரியுமா ?

—மனிதன்

—முதல் மனிதன் எப்படிப்பிறந்தான் ?

ஆதாம் பெற்றான்.

—எப்படி ?

—ஏவாள்மூலம்........

—அப்படி இல்லேங்காணும் ; கேளும். சாத்தான் ஏவாளை வசப்படுத்தி ஆதாமுக்குள் புகுந்தான். ஆணைப்பிடித்த சாத்தான் பெண்ணைக்கூடிப் பிள்ளையைப் பெற்றான். அபெல் கெய்ன் பிறந்தனர் ; சண்டைபோட்டனர் ; கெய்ன் அபெலைக் கொன்றான். மனிதசமுதாயமே அபெல் கெய்ன் கூட்டமாகி வருகிறது. எல்லாம் பேய்க்கூட்டம் ; அதை வளர்ப்பது பெண்....தெரியுமாங்காணும்.

இந்தமாதிரிச் சபை முழுதும் ஏகக் கசமுசலாயிருந்தது. பனிச்சென்று ஒரு வெளிச்சம் தெரிந்தது ; இராணியின் அரியணைக்கு இருபுறமும் இரண்டு கிளை விளக்குகள் விளங்கின.

" மாண்புள்ள ராணியின் கமிஷனர் பிரபுக்கள் ! " என்று கட்டியக்காரன் கூவினான்.

கப் சுப் ! மௌனம் பரவியது. வாயாடிப் பிரபுக்கள் பேச்சைக் கட்டிவைத்தனர். இங்கிலாந்து நிதிக் காப்பாளர் கோடோல்ஃபிப், கௌன்ஸில் தலைவர் பெம்ப்ரோக், அரச முத்திரை அதிகாரி நியூகாஸில்— ஆகிய மூவரும் வந்து அரியணையை வணங்கி அதன்

முன்னிருந்த பெஞ்சில் அமர்ந்தனர். உடனே "பொது ஜன சபை வரட்டும்," என்று உத்திரவிட்டனர். கட்டியக்காரன் சென்றான்; ஒரு பெரிய கதவு திறந்தது; பொதுஜன சபை அங்கத்தினர், தமது பேச்சுத் தலைவர் ரைட் ஆனரபிள் ஜான்ஸ்மித்துடன் வந்து உரிய இடத்தில் அமர்ந்தனர். கட்டியக்காரன் "ஓ, எஸ்" என்றான்.

குமாஸ்தாக்கள் கமிஷனரை வணங்கி அமர்ந்தனர். பொதுஜன சபையில் நிறைவேறிய தீர்மானங்களை அவர்களிடம் வணக்கத்துடன் அளித்தனர். ஒவ்வொரு தீர்மானத்தையும் பார்லிமெண்டரி குமாஸ்தா படித்தான். படித்ததும் பிரபுக்களில் ஒவ்வொருவர் பெயரும் கேட்டுச் சம்மதி குறித்தான்.

—முதல் பில்: பொதுஜன சபை தீர்மானித்தது! மஹாராணியின் ஹாம்டன் கோர்ட்டு மாளிகையில் புதிய கட்டிடங்களுக்காக பத்து லட்சம் ரொக்கம்.

—சரி, நியாயம்.

—பொதுஜன சபையின் உண்மையை இராணியார் அங்கீகரிக்கிறார்.

—இரண்டாவது மசோதா: எலிசபெத் ஆட்சியில் ஆர்மடாப் போரின்போது 1,85,000 காலாட் படைகளும், 40,000 குதிரைப் படைகளும் சேர்க்கப் பெற்றன. அவை கீழ், நடுத்தர வகுப்புகளினின்றும் சேர்ந்தன. அச் சேனைக்கு Train bands (ட்ரெயின் பாண்ட்ஸ்) என்று பெயர். அது சம்பளமில்லாச் சேவகம் செய்கிறது. அதனின்று விலகியவர்களை



ஆ, அப்போது யாரோ அவன் கையை நக்கியது போலுணர்ந்தான்; திரும்பினான். சடசடவென்று காதை அடித்து வாலை ஆட்டி ஒரு நண்பன் அருகே நின்றான்; யார்? ஓமோ, ஓநாய்.

சர்க்கார் சிறைபிட்டு அபராதம் போடுகிறது; இதைப் பொதுஜனங்கள் மறுக்கிறார்கள்.

—பொதுஜனங்களே, இராணி விரும்புகிறாள்; ஆதலால் உங்கள் மறுப்பு மறுக்கப்படுகிறது.

மூன்றாவது மசோதா, மதவரியை அதிகப்படுத்தி சர்ச்சுகளுக்கு அதிக உதவி செய்வதைப் பற்றியது. நான்காவது வரி உயர்வைப் பற்றியது. மார்பிள் காயிதம், கோச்வண்டி, வக்கீல்—அடோர்னி தொழில், தோல்பதனிடுதல், சோப்பு, துணி, சாராயம், மா இவற்றின்மேல் வரி உயர்த்த வேண்டும்; வியாபாரிகள் எதிர்க்கிறார்கள்.

—அரசாங்கத்திற்குப் பணம் வேண்டும்.

—இராணி விரும்புகிறாள்.

—வரி மசோதா ஊர்ஜிதமானது.

ஐந்தாவது மசோதா, வைத்தியம் செய்து கொள்ளப்புகும் நோயாளி, தனது கருமாதிக்காக ஒரு பவுன் சர்க்காருக்குத் தந்தபிறகே ஆஸ்பத்திரியில் இடம் பெறுவான் என்பது.

—அதுவும் இராணி விருப்பம்.

—மசோதா சட்டமானது.

—சரி, பொதுஜனசபையிலிருந்து வந்த மசோதாக்கள் சட்டமாயின.

உடனே அச் சபையினர் எழுந்து வணங்கிச் சென்றனர். கதவு மூடியது.

## 70. வீராவேசப் புயல்

லார்ட் சான்ஸலர் பேசினார். "பிரபுக்களே, மஹாகனம் தங்கிய மஹாராணியின் கணவன் கம்பர்லாந்து

பிரபுவுக்கு, 1,50,000 பவுன் வருஷ வருமானம் அதிகமாகத் தருவதுபற்றி நாம் பல நாட்கள் விவாதித்து முடித்தோம். இப்போது அத் தீர்மானத்தை ஓட்டுக்கு விடுவோம். முதலில் இளம்பிரபுக்கள் சம்மதத்தை அறிவோம். பெயர் கூப்பிட்டதும் ஒவ்வொரு பிரபுவும் எழுந்து 'சம்மதம்' 'சம்மதமில்லை' என்று சொல்லி ஆட்சேபணையிருந்தால் குசாலாகப் பேசலாம்" என்றார்.

பிரபுக்கள் பேரேட்டை விரித்து, பார்லிமெண்டு குமாஸ்தா ஒவ்வொருவர் பெயரையும் கூப்பிட்டான். அவர் சொல்லையும் குறித்துக்கொண்டான்.

—மை லார்ட் ஜான், ஹெர்வே பாரன்.

—சம்மதம்.

—மை லார்ட் ஃப்ரான்ஸிஸ் ஸெய்மோர், கோன்வே பாரன்.

—சம்மதம்.

—மை லார்ட் ஜான் வெஸ்ளன்.

—சம்மதம்.

—மை லார்ட் சார்லெஸ் மாண்டேக் ஹாலிஃபாக்ஸ் பாரன்.

ஹாலிஃபாக்ஸ், "நமது ராணியின் கணவனார், டென்மார்க் இளவரசர், கம்பர்லாந்து கோமான், இங்கிலாந்தின் கப்பல் தலைவர், சேனைத் தலைவர்—அவருக்கு இன்னும் லக்ஷம் பவுன் கூடத் தரவேண்டும். அது நமது ஆங்கிலிக மதத்திற்கே கௌரவமாகும்,

நாட்டிற்கே பெருமையாகும். என் சம்மதத்தைச் சந்தோஷமாகத் தெரிவிக்கிறேன்" என்றமர்ந்தார்.

—மை லார்ட் க்ரிஸ்தாஃபர் பர்னார்டு பாரன். தனது ஜரிகையணிகளை ஆடம்பரமாகப் பகட்டி "சம்மதம்" என்றமர்ந்தார் கிறிஸ்தாபர் பிரபு.

—மை லார்ட் ஃபேர்மேன் க்ளான் சார்லி, பாரன் க்ளான் சார்லி அண்ட் ஹங்கர்வில்.

எழுந்தான் க்வின்ப்ளேன். கம்பீரமான குரலில் "சம்மதமில்லை" என்று கூவிச் சபை முன்னே நின்றான்.

அவன் மனச்சாட்சி புரட்சி செய்தது. தனது வாழ்வின் கடமையை நிறைவேற்றும் காலம் வந்து விட்டதென்று அவன் உணர்ந்தான். ஒரு நிமிஷம் எப்படியோ சிரித்த வாயை அடக்கிக்கொண்டான். பிறகு இயற்கையான இளிச்சவாயைக் காட்டி நின்றான்.

—"ஐயோ பயங்கரம்! யாரிவன்?" என்று பிரபுக்கள் கூவினர். "யாரிவனை உள்ளே விட்டது?" என்றனர்.

"நீ யார்? எங்கிருந்து வந்தாய்?" என்றொரு கிழட்டுப் பிரபு அதிகாரமாகக் கேட்டார்.

"நான் தெருத்தூசியிலிருந்து வந்தேன்" என்று கையைக் கட்டிக்கொண்டு, பிரபுக்களையே பார்த்தான் க்வின்ப்ளேன்.

"நான் யார்? நான் வறுமை; பிரபுக்களே நான் உங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லவே வந்தேன்" என்று புயலாய்க் கிளம்பினான் க்வின்ப்ளேன் :—

"பிரபுக்களே, நீங்கள் உயர்ந்த இடத்தில் வீற்

றிருக்கிறீர்கள்; சுகபோகங்களை அனுபவிக்கிறீர்கள் உங்களுக்கு ஏராளமான செல்வம், செல்வாக்குகள் உள்ளன. உங்கள் அதிட்டக்கதிர் உச்சத்தில் ஒளிர்கிறது. தேனீக்கடியில்லாமல் தேன் சாப்பிடும் பிரபுக்களே, நீங்கள் மதுமயக்கத்தில் பிறரை மறந்துபோனீர்கள். உங்களுக்குமேலே ஆண்டவன் உள்ளான்; உங்களுக்குக் கீழே கோடானுகோடி ஏழைகள் பரிதவிக்கின்றனர். நான் ஏழை எளியவரிடமிருந்து வருகிறேன். உங்களுக்கு மனித சமுதாயத்தைப்பற்றி ஒரு செய்தி கொண்டு வருகிறேன். நீங்கள் செல்வர்; செல்வமே உங்களுக்கு அபாயம். பிறர் அறியாமையால் நீங்கள் செல்வச் செருக்காடுகிறீர்கள். பிறர் இரவில் நீங்கள் வெளிச்சம்போடுகிறீர்கள். உஷார்; இதோ அருணோதய மாகிறது. அதை நீங்கள் தடுக்கமுடியாது; மடமையிருள் விலகப்போகிறது; ஜனங்களின் மனச்சாட்சி குமுறியெழும்; அவர் உள்ளத்தில் ஒளி யூற்றுப் பொங்கியெழும். மடமை யிருள் ஒழியும்; அறிவு மலரும்; எல்லாரும் ஒரு நிகர் என்னும் சமத்துவம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் பொங்கி யெழும். அப்போது உங்கள் அழுலும் அதிகாரமும் அஞ்சி நடுங்கும். பணக்காரர்களே, உங்கள் பணம் ஏழைகளின் கண்ணீரினின்று வருவது என்றுணருங்கள். உங்கள் சுகபோகம் ஏழைகளின் துயரத்தில் புல்லுருவிபோலப் படர்கிறது. மற்றவர்களை நாஸ்தியாக்கி நீங்கள் ஆஸ்தி சேர்க்கிறீர்கள். மனித சமுதாயம் என் உள்ளத்தினின்றும் பேசுகிறது; நான் மனித சமுதாயத்தின் குரல், கூக்குரல்! மனித சமுதாயத்தின் துக்கம் என் குரலை

அழுத்துகிறது. என் மனத்தில் துக்கானுபவங்கள் குவிந்துகிடக்கின்றன. செல்வர்களே, நேற்று நான் ஒரு கோமாளியாயிருந்தேன், இன்று நான் பிரபுவாயிருக்கிறேன்—விதியின் அற்புதம்! நீங்கள் ஒளியையே பார்க்கிறீர்கள்; நான் நிழலைப் பார்த்துவந்து சொல்லுகிறேன். ஒளிக்குப் பின்னாலிருக்கும் நிழலை நீங்கள் அறியீர்கள். உங்கள் செல்வ மாளிகையைச் சுற்றி ஓடும் ஏழைகளின் கண்ணீர் அருவியை நீங்கள் சற்றும் காணீர்கள். ஏழைகளின் கண்ணீரையும் துன்பத் துடிப்பையும் காணவேண்டும், அநுபவிக்கவேண்டும் என்றே இறைவன் என்னை ஒரு அரசன் மூலம் உருக்குலைத்து மறைத்து வைத்தான். எனது தந்தையை உங்களிற் பலர் அறிவீர்கள்; நான் அவரை அறியேன்; பிரபுத்துவத்தால் அவருக்கும் உங்களுக்கும் உறவு. சுதந்திர உணர்வால் அவருக்கும் எனக்கும் உறவு. செல்வப் பொறாமை பிடித்தவர், என்னைப் பாதாளத்தில் உருட்டினர். அதுவும் நல்லதே. கீழே மாந்தர் படும் துயர்களைப் பார்த்து மேலேறி வந்து, உங்கள் முன் என் மனத்தைத் துணிந்து பேச முடிந்ததல்லவா? நான் ஜன சமுத்திரத்தின் ஆழத்தில் தேடி உண்மை முத்துக் கொண்டுவந்திருக்கிறேன். மாடமாளிகையில், சணப்பண்டையில் சுகமாகச் சாய்ந்து அதிகாரஞ் செய்யும் பிரபுக்களே, நான் அநுபவித்துச் சொல்லுகிறேன்; கண்ணாரக் கண்டதைச் சொல்லுகிறேன். நான் வறுமையில் வளர்ந்தேன்; வெயிலில் உலர்ந்தேன்; பனியில் வாடினேன்; பசியால் வருந்தினேன்; கொடுமையைச் சகித்தேன்; வசையைப் பொறுத்தேன்.

என்னைப்போன்ற எளியர் துயரைப் பார்த்தேன்; நான் கண்ணீரில் மிதந்தேன்; ஏழைகளின் புண்ணீராற் கொழுக்கும் பிரபுக்களே, கேளுங்கள். நீங்கள் "இராணி" என்றழைக்கும் ஒரு பெண், இரும்புத் தடியனை ஏவி என்னைக் கொண்டுவரக் கட்டளையிட்டாள். அக்கட்டளையை மீறலாம் என்று நினைத்தேன். ஆயினும் அந்தர்யாமியான கடவுள் "உனக்கு அங்கே ஒரு வேலையிருக்கிறது, செல்" என்று என்னை முன்னே பிடித்துத் தள்ளுவது போலுணர்ந்தேன்.

அவன் ஆணையை நிறைவேற்றவே இங்கு நிற்கிறேன். சீமான்களே, நீங்கள் இரக்கமில்லாமல் காலடியில் வைத்து நசுக்கும் ஜனசமுதாயத்தினின்று நான் வந்திருக்கிறேன். இந்த ஆடம்பரமான வெல்வெட்டணிந்து மினுக்க அல்ல; கந்தலின் முறையீட்டை உங்களுக்குச் சொல்லவே வந்தேன். ஒரு இரவில், காரிருளில், புயலில், பனிக்கட்டி மழையில், மலைப் பாறையில் அனாதையாக, பசி தாகம் பொறுத்து கால் இரத்தம் பீற, மனித சமுதாயத்தை நோக்கி ஓடிவந்தேன். நான் முதலில் பார்த்தது உங்கள் சட்டமே; அது ஒரு தூக்குமேடை வடிவில் என முன் நின்றது; இரண்டாவதாக உங்கள் செல்வச் செருக்கின் பயனைக் கண்டேன். அது பனியில் விறைத்துக்கிடந்த ஒரு குழந்தைத் தாயின் வடிவாக நின்றது. அனாதையாகிய நான் ஒரு அனாதைக் குழந்தையை எடுத்து வந்தேன். செல்வர் கதவைத் தட்டினேன்; பேச்சுமூச்சில்லை. ஒரு நாடோடி ஏழைக் கிழவன் எனக்கு ஆதரவளித்தான். அவனுக்கு ஒரே நண்பன்—ஒரு ஓநாய்.

இச் சமயம் உணர்ச்சி பொங்கியதால் வார்த்தை வராமல் விம்மினன் க்வின்ப்ளேன். உடனே இளிச்ச வாயால் பக்கெனச் சிரித்தான்.

அவ்வளவுதான்! சபை முழுதும் "ஹ ஹ ஹ ஹா ஹா ஹா!" என்று இடிநகை புரிந்தது. "சபாஷ் க்வின்ப்ளேன்! பலே கோமாளி! பலே தமாஷ்—இளிச்சவாயா, பச்சைவண்டிக் கோமாளி, இங்கே பல்லிளிக்கவா வந்தாய்! நீ பிரபுவா! நடக்கட்டும் உன் கோமாளிப் பேச்சு!" என்று கேலி செய்தனர் பிரபுக்கள்.

க்வின்ப்ளேன் பேச்சைத் தொடர்ந்தான் :—
எளிமையைப் புண்படுத்திக் கேலி செய்யும் ஆங்கிலப் பிரபுக்களே, வாயை மூடுங்கள்! உங்கள் அதிகாரச் செருக்கை எண்ணி வருந்துங்கள். நீங்களும் மற்றவர்களைப் போன்ற மனிதர்களே; உங்களை நீங்கள் தெய்வத்திற்குச் சமானமாக நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஒரு நாள் காய்ச்சலில் படுத்தால் உங்கள் வாழ்வு தெரியும். நீங்களும் பிறந்து இறக்கும் மனிதர்களே. இறக்கு முன் இரக்கம், தயை, நேர்மை, உண்மை இவற்றைப் பூணுங்கள். மனிதன் என்பது உள்ளமே; உள்ளம் என்பது அன்பு. அந்த அன்பில்லாத மனிதன் இரும்புக்கட்டைக்குச் சமானம். இங்கிருக்கும் அன்பருக்கு, தருமவான்களுக்கு, இரக்கமுள்ள நல்லோருக்குப் பேசுகிறேன். குழந்தை குட்டி இருக்கிறவர்கள் கேளுங்கள். இந்த நாட்டில் கோடி அனாதைக் குழந்தைகள் பசியாலும் பனியாலும் வாடுகின்றன; நானே அப்படிப்பட்ட குழந்தையா

யிருந்தேன், பிரபுத்துவமே, உன் காலடியில் நசுங்கிக் கிடக்கும் ஏழைகளைக் கண்டு இரங்கமாட்டாயா? உன் நெஞ்சம் கல்லா? உன் தங்கக்கால் ஏழையின் தலைமேல் அகம்பாவத்துடன் அழுந்தி நிற்கிறது! செல்வர்களே, உங்களுக்கு அதிகாரம் இருக்கிறது; இரக்கம் இருக்கட்டும். நீங்கள் பெரியவர்கள்; உங்களுக்கு எளியவர் படும் துயரம் தெரியட்டும். உங்களிடம் பணம் இருக்கிறது; ஏழைகளுக்குத் தாராளமாக உதவும் மனம் இருக்கட்டும். நீங்கள் சுகபோக மாளிகை மெத்தையில் புரளுகிறீர்கள்; உங்கள் வெல்வெட் மெத்தையின் நாற்றம் எனக்குத் தெரியும். நிற்க நிழலில்லாமல் தெருவில் சாவுடன் போராடியழும் ஆயிரக்கணக்கான ஏழைகளிடம் உங்களுக்குப் பரிவு வரட்டும். ஐயோ பிரபுத்துவமே, அகம்பாவமே, அதிகாரச் செருக்கே, உன் சட்டக் கொடுமையை சௌத்வார்க் பாதாளச் சிறையிற் சென்று பார். புழுவினும் கேடாக மனிதனை நடத்துகிறாய் நீ! இருட்சிறை; ஈரத் தரை; கைகால் விலங்கு; ஒரு ஏழைக் கிழவன் வயிற்றில் கருங்கல் ..............ஆ! அக் காட்சியைக் கண்டு என் மனம் வெடித்தது! மூச்சுவிடக்கூட முடியாமல் ஏழைகளின் மார்பில் இரும்புக் காலை வைத்து நசுக்கும் பிரபுத்துவமே கேள்! தங்க மாளிகை கட்டிப் பொங்கும் பிரபுக்களே, ஒருவாய்ச் சோற்றிற்கு ஏழைகள் படும் பாட்டை நீங்கள் அறிவீர்களா! வயிற்றுக் கொடுமையால் பெண்கள் விபசாரச் சாக்கடையில் விழுந்து 20 வயதிலேயே உடல் நலம் இழந்து கிழவிகளாகின்றனர். ஏழைப் பெண்கள் வயிற்றுக் கொடுமையால் மானத்தை விற்கின்றனர். சீமாட்டிகளின் நாகரிக

விடசாரமேயா, சதைக்கொழுப்பால் அட்டூழியம் செய்கிறது. அதையும் என் கண்ணுரப் பார்த்தேன். உங்கள் மாளிகையில் நடக்கும் கொலைகளையும், காமக் களியாட்டங்களையும், கற்பழிவுகளையும் கண்டேன், கண்டேன்! உங்கள் சிற்றறைகளின் பெரிய பயங்கர இரகசியங்களைக் கண்டு குடல் நடுங்கினேன். ஆயிரம் ஏழைகள் வாழக்கூடிய இடத்தை வளைத்து ஒரு செல்வன் மாளிகை எழுப்புகிருன். அந்த மாளிகை அலங்கார-ஈாகரிக-பணக்காரப்-பாப-நரகமாயிருக்கிறதே!

செல்வர்களே, ஒரு சாங்கத்தில் இறங்கிப் பாருங்கள் தொழிலாளிகள் படும் துயரத்தை; சாலின் அலகிலிருந்து அவர் வயிறு வளர்க்கின்றனர். ஐயோ, பசிக்கொடுமையால் அனுதைக் குழந்தைகள் மண்ணையும் கரியையும் உண்டு மாளுகின்றனர்.

நீங்கள் இன்று நிறைவேற்றிய தீர்மானத்தைப் பார்த்து உங்கள் அரசாங்கத்தின் இரக்கமற்ற உள்ளத்தை அறிந்தேன். உங்கள் சுகபோகங்களுக்கும், மாளிகைச் செழிப்புக்குமே உலகம் இருப்பதாக நீங்கள் கருதுகிறீர்கள். ஆ, எவ்வளவு சுயநலம்! சிந்தித்துப் பாருங்கள். மனிதப் பிரபுக்களே....நீங்கள் இராணியென்பவளும் மற்றப் பெண்களைப்போல உடலும் உயிரும் கொண்ட ஒரு பெண்; அவள் கணவனும் மற்ற மனிதரைப்போன்றவனே. ஒரு மனிதனுக்கு இலட்சக்கணக்கான பவுன்கள் தந்து இன்னும் பத்து லட்சம் பவுன்கள் கொட்டுவது என்ன அநியாயம்! அந்தப் பணம் லட்சம் ஏழைகளுக்கு ஆயுளெல்லாம் பிழைப்புத்தருமே! இப்படி ஏழைகளை

விழுங்கும் அசுரச் செல்வ வாழ்வு என்ன கொடுமை! வைத்தியசாலைக்கு வரும் நோயாளி தனது கருமாதிக்கு ஒரு பவுன் கட்டவேண்டும் என்கிறீர்கள். உங்கள் வைத்தியத்தை நம்பினால் கருமாதிகாறு மிச்சம்? ஏழை யெளியவர் எப்படிப் பணந் தருவர்? பொதுஜனங்களைக் கசக்கிப் பிழிந்து வரி வாங்குகிறீர்களே, அதில் ஒரு பங்கு கல்விக்கும் சுகாதாரத்திற்கும் எடுத்துவைக்கலாகாதா? நாட்டில் வறுமை தாண்டவமாடுகிறது; வியாபாரம் மந்தமாயிருக்கிறது. இச்சமயம் நீங்கள் வரிகளை உயர்த்துவது என்ன நீதி? எதற்காக வரிகளை உயர்த்தவேண்டும்? பிரபுக்களாகிய உங்கள் சுகபோக லீலைகளுக்காகத்தானே ஏழைகளை இப்படிக் கசக்கிப் பிழிகிறீர்கள். நீங்கள் சிலர் நின்று கொழுக்கத்தானே கோடானுகோடி ஏழைகளைப் பட்டினி போட்டுக் கொல்லுகிறீர்கள்! நான் நாடெல்லாம், ஊர் ஊராகத் தெருத்தெருவாகச் சுற்றிப் பார்த்திருக்கிறேன். ஏழைகளின் நிலைமை கண்றாவியாயிருக்கிறது. சாக்கடையைச் சுத்தம் செய்யப் பணமில்லாமல் பல கிராமங்கள் நாற்ற நரகத்தில் நோயுழல்கின்றன லங்காஷயரில் தொழில் நடக்கவில்லை; வேலையில்லை; கூலியில்லை; பட்டினி! வரிக்கொடுமை தாங்காமல் மீன் பிடிப்பவர் வலையைக்கட்டி வைத்துவிட்டனர். ஐயோ, அவர் குழந்தைகள் புல்லை யுண்கின்றனர்! சில ஊர்களில் குஷ்டரோகிகள் அதிகமாகின்றனர். அவர்களுக்குப் புகல் இல்லை. அவர்கள் எதாயினும் இருள் குகையில் ஒண்டி யழுகின்றனர். அவர்கள் வெளியே வந்தால் சுடுகின்றனர். இதுவா கிறிஸ்து தருமம்! நீங்கள் இன்று பணக்கார பிஷப்புகளுக்கு மீண்டும் வரி

உயர்த்திப் பணஞ்சேர வழி செய்தீர்கள். ஏசுநாதர், ஏழையாக எளியவருக்காக வாழ்ந்தார். அவர் பெயரைச் சொல்லி வாழும் இந்தப் பிஷப்புகளுக்கு இவ்வளவு பணம் எதற்கு? உங்கள் செல்வச் சோம்பலைப்போல அவர் சமயச் சோம்பலும் ஏழைகளின் அறியாமையால் வளருகிறது. பிஷப்புகளே! நீங்கள் வானோங்கிய அலங்காரக் கோயில்களில் உபதேசம் செய்யும் ஊரிலுள்ள ஏழைகளின் கதி என்னவென்று பாருங்கள். தொட்டிலில்லாமல், ஏழைகள் குழந்தைகளைக் குழிதோண்டி, அதில் படுக்க வைக்கிறார்கள். பிறக்கும்போதே அவர்களுக்குக் குழியும் தயாராகிறது.

பிரபுக்களே, உங்கள் சுகபோக லீலைகளுக்காக வரிகொடுப்பவர் யார் தெரியுமா? பரம ஏழைகள், பட்டினிகிடக்கும் ஏழைகள்! அவர்கள் சாவினால் நீங்கள் பிழைக்கிறீர்கள். கோடிப்பேரை வறியராக்கி நீங்கள் வளம் பெறுகிறீர்கள். கோடிப்பேரை அடிமைகளாக்கி நீங்கள் அதிகாரச்செருக்கில் மதங்கொண்டு திரிகிறீர்கள். என்ன, நாளெல்லாம் பாடுபடும் தொழிலாளியின் வேர்வைப் பணம், தொந்தியாடாத சோம்பேறிச் செல்வனுக்கோ சேர்வது? என்ன, கந்தை யுடுத்தினவனைக் கசக்கிப்பிழிந்து வெல்வெட் பிரபுக்களா கொழுப்பது! பிச்சைக்கூடையில் பூதம் புகுந்தது போலிருக்கிறதே நீங்கள் வரி வாங்கும் இலட்சணம்! நான் குடியரசுவாதி; எல்லாரும் சுதந்திரமாயிருக்க நான் விரும்புகிறேன். உலகில் எல்லாரும் உழைத்துண்ணவேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

உழைத்தவருக்கு உழைப்பின் பயன் எய்த வேண்டும். சோம்பேறிச் செல்வத்தை வாரி ஏழை களுக்குச் சூறையிடவேண்டும். பிரபுத்துவம் ஒழிக! முடியரசு ஒழிக! இரண்டையும் நான் வெறுக் கிறேன். அகம்பாவம் பிடித்த சீமான்களையும், வெட்கங்கெட்ட சீமாட்டிகளையும் நான் பார்த்தேன். சார்லெஸ் II-ஐ நான் வெறுக்கிறேன். எனது தந்தையைக் காதலித்த ஒரு பெண், அவர் ஜினிவா வில் வருந்தும்போது, தனது காதலை சார்லெஸுக்கு விற்றாள். விபசாரக் கொடுமை என்னே! சார்லெஸ் II, ஜேம்ஸ் II இவர்கள் மன்னராம்—போக்கிரிகள், திருடர்கள், அயோக்கியர்கள், விபசார தாசர்கள், பெண்ணடியார்கள், ஏழைகளின் எமராஜர்கள்! உங்களைக் கேட்கிறேன்—மன்னர் மன்னர் என்று கூத்தாடும் கொண்டாடும் மனிதரால் என்ன பயன்? இவர்கள் சுயநலச் செல்வச் சோம்பேறிகள்! நாட்டின் புல்லுருவிகள்! ஏழைகளின் சதையைப் பிழிந்து, கண்ணீரைக் குடிக்கும் அசுரப் பாம்புகள்! இவர்கள் இன்று கொழுத்துத் தமது தங்கக் கால்களால் ஏழைகளை நசுக்க இன்னும் வரிச்சுமை ஏற்று கிறார்கள்! இந்த அரியணையை நீங்கள் வணங்கு கிறீர்கள். அதனின்று வரும் சட்டங்கள் எமபாசம் போலிருக்கின்றன. அவை இரும்புக் காலால் எறும்புகளைப்போல ஏழைகளை நசுக்குகின்றன, செல்வர்களே, இரங்குங்கள்! உங்களுக்கே நீங்கள் இரங்குங்கள். பொதுஜனங்கள் விழித்துக்கொண்டு எழுந்து உரிமையைப் பெறும் காலம் வருகிறது! அரியணைகள் ஆட்டங்கொடுக்கின்றன; முடிகள்

சாய்கின்றன; ஜனசமுதாய மரத்தின் வேர் உழைப்பாளிகள். அதில் மலர்போல நீங்கள் செல்வப் புன்னகை புரிகிறீர்கள். வேர் வாடினால் உங்கள் மலர் நகையும் வாடும். கவனம். சமுதாயக் கப்பல் உங்கள் அட்டூழியச் சுமையால் மூழ்கிக்கொண்டிருக்கிறது; நீங்களும் அத்துடன் மூழ்க நேரிடும்; உஷார்!

[பிரபுக்கள் 'கொல்'லென்று சிரித்தார்கள்.]

சிரியுங்கள்! சிரியுங்கள்!! வயிற்றெரிச்சல் தீரச் சிரிக்கத்தான் வேண்டும். உங்கள் பிழைப்பே சிரிக்கப் போகிறது, பாருங்கள். நானும் உங்களைப்போலச் செல்வத் தொட்டிலில் கிடந்தேன்; உங்கள் அரசன் என்னைக் கொன்றான். ஒரு ஏழை என்னைக் காத்தான்.

நான் கிளான் சார்லி பிரபு; நான் க்வின்ப்ரேன். நான் பிரபுக்களுடன் அமர்ந்தேன்; ஏன்? பிரபுத்துவம் ஏழைகளை எப்படி நசுக்குகிறது என்பதை விளக்கவே இன்று தங்கள் முன் வந்தேன். நான் செல்வத்தில் பிறந்தேன்; வறுமையில் வாடினேன்; வறியவர் துயரைச் சொல்லவே வந்தேன். உங்கள் போலி மினுக்குகளையும், இரக்கமற்ற கொடுமைகளையும் எடுத்துச் சொல்லத் துணிந்தே இங்கு வந்தேன்!

ஆ! பொழுது புலர்கிறது! ஒளி காண்கிறது. பொதுஜனங்களின் மனச்சாட்சி துள்ளிவிழித்தெழுகிறது! செல்வச் செருக்கு தலைசாய்கிறது! சோம்பேறி மாளிகைகள் தரைமட்டமாகின்றன. பிரபுத்துவம் தனது ஆடம்பர உப்பரிகையினின்று

மண்ணில் உருவாகிறது! இனி செல்வனில்லை; ஏழையில்லை; அரசனில்லை; குடிகளில்லை; ஆண்டையில்லை; அடிமையில்லை; எசமானில்லை; சேவகனில்லை; நசுக்குவோரில்லை; நலிவோரில்லை; வறுமையில்லை; மடமையில்லை. உழைப்பும் பிழைப்பும் சமரசத் துய்ப்பும் உண்டாம். உலகப் பொருளெல்லாம் உலகோர் சமவுரிமையாகும். எல்லாருக்கும் உழைப்புண்டு; பிழைப்புண்டு; எல்லாரும் ஒரு நிகர். இனிப் பெண்மை பெருமை பெறும். ஏழைப் பெண்கள் மானமாகப் பிழைப்பர்; விபசாரம் ஒழியும்; செல்வர் காமக் களியாட்டங்கள் அடங்கும். மனிதரை அடிமைகளாக விலங்குகள்போல நடத்தும் செல்வக் கொடுமை ஒழியும். பிரபுக்களே, உங்கள் செருக்கும் மினுக்கும் செல்வக் கொடுங்கோலும் இனிச் செல்லாது. ஜனநாயகம் விழித்தெழுந்து சுயேச்சாதிகாரத்தை உருட்டித் தள்ளப் போகிறது. நீங்கள் நசுக்கும் புழுக்கள் சிங்கங்களாக எழுந்து கூடி உங்கள் அகம்பாவத்தை நசுக்கப் போகின்றன. இங்கே எசமான்கள் முன்னே வணங்கி நிற்கும் ஊழியர்களே, தலை நிமிருங்கள். உங்கள் முகத்தைக்கூட இந்த அகம்பாவப் பிரபுக்கள் பார்க்கமாட்டார்கள். நான் உங்களில் ஒருவனாகப் பேசுகிறேன். தலை நிமிருங்கள். நீங்களும் அவர்களைப்போன்ற மனிதர் தாமே!



இச் சமயம் சபை ஏக ரகளையானது! "ஹூம்! ஹூஹூஹூ-டடடாட்ட! தூதூதூ! நடக்கட்டும் கோமாளிக் கூத்து! அட இளிச்சவாயா, இது பச்சை வண்டி

யல்ல, பாராளுநப் பிரபுக்கள் சபை! அப்பா! சிரித்துச் சிரித்து வயிறறுந்து போச்சுதடா! போதுமடா இளிச்சவாய்ப்பதரே! இவன் பிரபுவாம்! விளக்கு மாற்றுக்குப் பட்டுக் குஞ்சமா? நாய்க்குச் சிவிகையா! அட பைத்தியம்; பைத்தியம், மூடடா இளிச்சவாயை! போடா வெளியே! தெருக்கோமாளி! இந்தா ஒரு காசு. இனிப்போ வெளியே! கழுதை, கனைத்தது போதும்; இனி வாயைத் திறக்காதே; செருப்படி விழும்; கொடுடா லண்டன் கெல்தா! இல்லை யில்லை; நடக்கட்டும் கூத்து; இங்கே பிரசங்கம் முடிந்ததும் தூக்கு மேடையில் ஏற்றி அதிகப் பிரசங்கம் கேட்போம். இல்லை, வாள் முனையில் பதில் தருவோம்! இந்தக் கோமாளியை யார் இங்கே விட்டது; செவுட்டில் விட்டு முடுக்குமைய்யா? சந்தை நாய் சந்தையில் போய் குலைக்கட்டும். ஆ, என்ன பயங்கர முகம், இவன் அழகுக்குப் பேச்சு வேறு! அடிடா மண்டையிலே!" என்று இவ்வாறு பிரபுக்கள் புயலாய்க் கிளம்பினர். தான் ஏறிய மலையுச்சி இடிந்து அதனுடன் தானும் ஒரு கணவாயில் விழுவதுபோலுணர்ந்தான் க்வின்ப்ளேன். என்ன வந்தாலும் சரி, தன்னுட் குமுறிக்கொண்டிருக்கும் எண்ணங்களைக் கொட்டித் தீர்த்துவிடுவதென்றே அவன் துணிந்து நின்றான்.

☆

ஒரு இளம் பிரபு வெகு கோபத்துடன் வாளை உருவிவந்து "இளிச்சவாய்ப் பேயே! என்ன சொன்னாய்.............நாய்" என்றான்.

க்வின்ப்ளேன் இடிகுரலெடுத்தான். "நான்

சொல்லவில்லை; உங்கள் நாசத்தை உணர்த்துகிறேன். நான் பிறரைப்போல உங்களைப் புகழ வரவில்லை; உங்கள் கொடுமைகளை இகழவே வந்தேன். என்னை பேய் என்றீர்கள்! உங்கள் அநீதியைக் கண்டுதான் நான் பேயானேன். என்னை நாய் என்றீர்கள்; நானே ஜனசமுதாயம். இனி நான் உங்கள் எச்சிலுக்காக அலையமாட்டேன். நீங்கள் ஏழைகளின் வீட்டைக் கொள்ளையடிக்கவிடாமல் குலைப்பேன்; நான் நாய்தான்; பணக்காரத் திருடர் வருகிறார்கள் உஷாராயிருங்கள் என்று ஜனசமுதாயத்திற்கு எச்சரிக்கை செய்கிறேன். என்னை இளிச்சவாய்க் கழுதையென்றீர்கள். என்னை இளிச்சவாயனாக்கியது நானா? உங்கள் ராஜா என்னை இப்படிச் செய்தான்; செல்வக் கொடுங்கோல், அதிகார ராக்ஷஸத்தனம் என்னை இப்படிச் செய்தது. என் இளிச்சவாய் நீங்கள் ஏழைகளைச் செய்யும் சித்திரவதையின் அறிகுறி. வெட்கம், வெட்கம்! என்னைக் கழுதை என்றீர்கள். நான் பொதுஜனம். இன்று நான் உங்கள் அகம்பாவக் கொடுமைகளைச் சுமக்கிறேன். இச் சுமையை ஒரு நாள் கீழே தள்ளி என் காலிற்போட்டு நொறுக்குவேன். பிறகு நானே சிங்கமாகி நாட்டை ஆளுவேன். என் வாய் உங்கள் கொடுமையால் காலாக்னி போலச் சிரிக்கிறது; என் மனம் கொதிக்கிறது. உங்கள் மமதை சிரிக்கிறது; என் இரக்கம் அழுகிறது."

குரல் தழுதழுத்தது! இச்சமயம், பிரபுக்கள் கலாட்டா அடங்கியது. சிலருக்கு இப்பேச்சு புதிய உணர்வைப் புகட்டியது.

“ பிரபுக்களே, என் இளிச்சவாய், அரசர் கொடுமையைப் பார்த்தே இளிக்கிறது; இந்த இளிப்பு ஏழையின் அழுகுரலை வாய்திறந்து காட்டுகிறது. இந்த இளிப்பு உங்கள் கொடுமையை விளக்குகிறது. ஒரு செல்வன் பொறுமையால் பச்சைக் குழந்தையாகிய என் வதையுண்டதைக் குறிக்கிறது. மன்னன் என்னை மறைத்தான்; அவன் கொடுமைகளை வெட்டவெளிச்சமாக்கவே கடவுள் என்னை உங்கள் முன் கொணர்ந்தார். மன்னரின் அகம்பாவச் சட்டத்தை மனச்சாட்சியினின்று கடவுள் மறுக்கிறார். ஓ பிரபுக்களே, உங்களுக்குமேல் ஒரு பிரபு, ஒரு தெய்வம் இருப்பதை உணருங்கள். ஓ மன்னர்களே, உங்களுக்குமேல் ஒரு இறைவன் இருப்பதை உணருங்கள். அவன் எல்லாம் வல்லவன்; அவன்முன் ஏழை பணக்காரன் என்ற வேறுபாடில்லை. அவனே அரசன்; உலகம் அவன் அரசு; அவனிச்சையே நீதி; அது மனச்சாட்சியின் பேசுகிறது.

“பிரபு, எஜமான், மன்னன், அதிகாரி, தலைவன் என்னும் செருக்கை ஒழியுங்கள். நீங்களும் இன்றிருந்து நாளை மண்ணாகும் மனிதர்தாம். வாள்பிடித்த மன்னர் கொடுங்கோலைக் கோடாலியால் தகர்த்தெறிந்தான் கிராம்வெல்; அந்தக் கிராம்வெல் கண்டார் என் தந்தை; எந்தை சுதந்திரர், ஜனசுயாட்சியை விரும்பியவர். அவர் இரத்தம் என்னுள் ஓடுகிறது. நீங்கள் சட்டத்தால், ஆயுதக் கொடுங்கோலால் அடக்கிவைத்த வாய் நெருப் புமிழ்கிறது; நீங்கள் நசுக்கப் பார்த்த மனச்சாட்சி குமுறி யெழுந்து, உங்கள் அகம்பாவ வேரைப் பிளக்கிறது. நடுங்குங்கள்

பிரபுக்களே; உங்கள் வெல்வெட் உடைகளைக் கந்தைகள் கிழிக்கப்போகின்றன! எத்தனை நாள் நீங்கள் ஜனங்களின் வாயை மூடிவைக்க முடியும்? நீங்கள் செய்யும் கொடுமைகளை எத்தனை நாள் உங்கள் பட்டால் பொத்திவைப்பீர்? பட்டு கிழிகிறது! ஏழைகளின் நரகத்தின் மேல் எழுந்து செருக்காடும் உங்கள் செல்வ விண்கள், பாதாளத்தில் சரிந்து விழுகின்றன. இதோ நேரம் வருகிறது; ஏழைகள் வாழ, பிரபுக்கள் வீழ, நேரம் வருகிறது! உங்கள் விருந்து, இடம்பக் கூத்து, காமக் களியாடல், குடிவெறிக் கூக்குரல், உங்கள் கூட்டம், ஆட்டம், பாட்டம், சட்டம், அச்சு, அதிகாரம் எல்லாம் என் சிரிப்பைப் போன்றன. எல்லாம் பொய், பொய், போலி மினுக்கு! உண்மையென்னும் ஊழியிடி உங்கள் தலைமேல் கர்ஜிக்கிறது! அதுவே என் சிரிப்பு; அது செல்வக் கொடுமைக்கு நெருப்பு, நெருப்பு, நெருப்பு."

மஹாப் பிரபுக்கள் இந்த உண்மைத் தீயிடியை எப்படிப் பொறுப்பார்கள்? எல்லாரும் "இளிச்சவாய்ப் பயலே, இரு சொல்லுகிறோம்" என்று சிரித்தார்கள். அந்தச் சிரிப்பு எரி மலை பொங்குவது போலிருந்தது. "இன்னும், பாக்கியும் நடக்கட்டும்! கோமாளிப் பயலே; இளிச்சவாய்க் கழுதை; அதிகப் பிரசங்கி முட்டாள்; தூக்கு மேடை காத்திருக்கிறது; வா" என்று பிரபுக்கள் மனங் கொதித்தனர், சிரித்தனர், கேலி செய்தனர். பிரபுக்கள், ஜட்ஜுகள், பிஷப்புகள், கமிஷனர்கள், குமாஸ்தாக்கள், சேவகர் எல்லாரும் கேலி செய்தனர், சிரித்தனர், கைகொட்டி

னர், பூட்ஸ் காலை 'தட் தட்' என்று தட்டினர். மேஜை யில் அடித்தனர். பிரபுக்களின் குழந்தைகள் "இனிச்சவாயனுக்கு ஜே" என்று கலகலச் சிரிப்புப் பொங்கினர்.

க்வின்ப்ளேன் மட்டும் அசையாமல் நின்று ஏதோ ஒரு கனவில் ஆழ்ந்திருந்தான்.

"எதிர்பாராத இந்தச் சம்பவத்தால் சபை கலைக் கிறது" என்றார் கமிஷனர். உடனே சபை காலியானது. அச் சபைச் சுவர்களில் பல கதவுகள் உண்டு. அவற் றைத் திறந்துகொண்டு எல்லாரும் அரியணையை வணங்கி இமைகொட்டுமுன் வெளியேறினர். கடைசி மான் பிரபு வெளியேறியதும் கதவு மூடச் சேவகர் காத்திருந்தனர். அரியணைக்கு வணங்காமல் பிரபு வெளியேறினார். "போ, போ" என்று சேவகன் கதவை மூடினான். வாசலில் ஒரு சேவகன் "கழற் றும் சட்டையை" என்று க்வின்ப்ளேன் அணிந்த பார்லிமெண்டு-பிரபு உடையைப் பறித்துச் சென்றான்.

## 71. டிர்ரியின் பிரசங்கம்

வரும்போது எவ்வளவு சடங்குகள், எத்தனை பரிவாரங்கள், மரியாதைகள்! போகும்போது யாரு மில்லை; வெஸ்ட்மினிஸ்டர் கட்டிடத்துக்குத் தனி யாகச் சென்றான் க்வின்ப்ளேன்; இங்கும் அங்கும் சில கிழட்டுப் பிரபுக்கள் இழுத்து இழுத்து நடந்து மெல்லச் சென்றனர். ஒரு விசாலமான கூடத்தில் கலகலவென்று பேச்சும் சிரிப்பும் நிர்த்தூளி பட்டன. க்வின்ப்ளேன் அங்கே சென்று மறைந்திருந்து கேட் டான். கூடத்தில் வாலிபப் பிரபுக்கள் கூடி இனிச்ச

வாயனைப்பற்றித் தமாஷாகக் கேலிபண்ணிச் சிரித்தனர். அவர்களுடன் டாம் ஜிம் ஜாக்கும் சேர்ந்தால் தமாஷுக்குக் கேட்கவேண்டுமா? அவனும் பிரபு சபையில் அமர்ந்து ஃபெர்மேன் சார்லியின் நீண்ட பிரசங்கத்தைக் கேட்டான். இன்று தலை முதல் கால்வரை ஜரிகை பணிகள் பூண்டு வெகு ஜோராயிருந்தான் டிர்ரிமோர். அவன் அலங்கார புருஷன், தமாஷுக்குப் பேர்போனவன் அல்லவா? ஃபெர்மான் பேச்சில் பொறுமையிழக்காமல் சிரித்தவன் அவனொருவனே. வாலிபப் பிரபுக்களுக்கு அவன் அந்தப் பெரிய பிரசங்கத்தைப்பற்றி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தான் :—

"இளம் பிரபுக்களா, நீங்கள் சுத்தப் பயங்காளிகள்; கோபித்துக்கொள்ளாதீர்கள்! நீங்கள் பயங்காளிகள் இல்லை, சுத்த முட்டாள்கள்; இளிச்சவாயன் பேசினது உங்களுக்கு விளங்கவில்லை; அவன் பேச்சில் குப்பை அதிகம்; பேச்சு கோர்வையாயில்லை; ஆக்ஸ்போர்ட் கேம்ப்ரிட்ஜி பெஞ்சுகளைத் தேய்த்த நமக்கே ஒரு சபையில் பேசுவதானால் வார்த்தை வரமாட்டேனென்கிறது.

"தெருக் கோமாளியை அரிஸ்டாடில் போலப் பேச நாம் எதிர்பார்க்க முடியாது. இருந்தாலும் பரவாயில்லை. அளந்து கொட்டினான். அவன் பேசினதில் உண்மையுண்டு. அது தெரியாமல் நீங்களெல்லாம் சேர்ந்து அவன் மேலே பாய்ந்தீர்கள். தெருவில் திரிந்த அவனைப் பிரபுவென விளக்கிய கடவுளுக்கு வந்தனம். அதனால் எனக்கிருந்த பட்டம் பதவியெல்

லாம் போயிற்று. பரவாயில்லை. புழு கழுகானது; இனிச்சவாய்க் கோமாளி க்லின்ப்ளேன் ஃபெர்மான் க்ளான்சார்லி பிரபுவானுன்; ஒருவன் முன்னுக்கு வந்தால் சந்தோஷப்படவேண்டும். அதுதான் ஒரு சமுதாயம் உருப்படும் வழி. அவன் சிரிப்பு நெருப்புத்தான்; நீங்களே கோமாளிபோலச் சிரித்தீர்கள். அவன் முகத்தைப் பார்த்துக் கேலி செய்தீர்கள். மைலார்ட் ஹாவர்ஷாம் உமது வைப்பாட்டி மூஞ்சியைப் பாரும்; குரங்குபோல "உர்" என்கிறது. அவளை நீர் சுப்ரதீபம் என்கிறீர். ஏனெனில், அந்தக் குரங்கு ஒரு பணக்காரி. ஃபெர்மான் பிரபு உங்களைவிட எவ்வளவோ புத்திசாலி. அவனுக்கிருக்கிற மூளை உங்களுக்கில்லை. அவனை நீங்கள் பண்ணிய கேலி என்னைப் புண்படுத்திவிட்டது; உங்களை நான் பழி வாங்கப்போகிறேன். நாளை உங்களை ஒரு கை பார்க்கிறேன். என்னை எப்படி, எங்கே, யார் வேண்டுமானாலும், எதனாலாயினும் தாக்குங்கள். வாளால் வெட்டுங்கள்; கையால் குத்துங்கள். சம்மதம்—நாளை உங்களை ஒரு கை பார்க்கிறேன்!"

"சம்மதம்; துப்பாக்கியால், வாளால், கையால், சம்மட்டியால் தாக்குவோம்" என்று இளம் பிரபுக்கள் பலவாறு சபதம் கூறுகையில், க்லின்ப்ளேன் அங்கே தோன்றினுன்.

—ஆ, வரவேண்டும் ஃபெர்மான் பிரபு; தங்களுக்குப் பரிந்து பேசினேன்.

—வந்தனம் டாம் ஜிம் ஜாக்!

—தங்களைக் கேலி செய்த இவர்களை நாளைக் கொல்லுவதெனத் தீர்மானித்திருக்கிறேன்.

—எனப்படி ?

—உங்கள் மேலும் எனக்குக் கோபம் ?

—ஏனோ ?

—மின்னஸ் க்ளான் சார்லி பிரபுவைக் காதலித்த பெண், சார்லெஸ் II-ஐயும் காதலித்தாள் என்றீரல்லவா ?

—ஆமாம் ?

—எனது தாயாரை நீர் அவமானப்படுத்தினீர். உம்; பட் பட், பட்! இந்த அறை ஞாபகத்தில் இருக்கட்டும் !

—ஆ, அப்படியானால் என் தகப்பனார் பிள்ளையா நீர், என் சகோதரா !

—ஆம், நாம் சகோதரரே; சகோதரருக்கழகு சண்டை போடுதல்; வாரும் நாளையே வாட்சண்டை புரிந்து கழுத்தை அறுத்துக்கொள்வோம்.

## 72. எல்லாம் வெறுமை

பாரிஸைப்போலவே அக்கால லண்டனிலும் இரவு 11 மணிக்கே விளக்கணைத்துவிடுவர்; தெருக்கள் இருட்டாயிருக்கும்; ஜன நடமாட்டம் இராது. செண்ட் பால் கடியாரம் 12 மணி யடித்தது. அப்போது லண்டன் பாலத்தின் வழியே ஒருவன் தனியாக ஸௌத்வார்க்கை நோக்கிச் சென்றான். அவன் பூவேலை செய்த பட்டங்கி பூண்டிருந்தான்; அவன் இடுப்பில் ஒரு வாள் தொங்கியது. ஆங்காங்கிருந்த ஊர்க்காவலர் " பிரபு, வாட் போர்புரியச் செல்லுகிறார் " என்று அவனுக்கு மரியாதையாக வழிவிட்ட

னர். (அக்காலம் இரகசியமாகக் கொலை செய்ய, அல்லது வாட்போரில் ஒருவரைக் குத்திக்கொல்ல நள்ளிரவிலேயே செல்வர்.) பசி பிடித்தவன் உணவைத் தேடிச் செல்வதுபோலவும், இடி-புயல்-மழைக்குத் தப்பி இருப்பிடந் தேடுவான்போலவும் அந்த மனிதன் செல்லுகிறான்.

அவனே க்லின்ப்ளோன். கோர்லியோன் அரண்மனை, க்ளான் சார்லிப் பட்டம், பதவி, சொத்து, சுகம், பிரபுத்துவம், பிரபு சபையில் அங்கம் வகிக்கும் மகத்துவம் எல்லாம் ஒரு கேலிக் கனவுபோல் அவனை விட்டு மறைந்தன. பிரபுக்களின் வாழ்க்கை ஏழைகளைப் புடைத்துண்ணும் பேய்களின் வாழ்க்கை போல் அவனுக்குப் பயங்கரமாயிருந்தது. செல்வர் கொடுமையை உள்ளபடி, துணிந்து பேசிய ஒருவன் க்லின்ப்ளோன். அவன் உள்ளதைச் சொன்னான்; உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்தானே! மடாக்குடியன், ஆடுகளையும் கோழிகளையும் தன் வயிற்றுச் சுடுகாட்டிற் புதைக்கும் கொடுங் கொலைஞன்—அவனைக் குடிகாரன், மஹாபாபி என்றால் கோபம் வந்துவிடுகிறதல்லவா? தாம் செய்யும் தீவினைகளைப் பிறர் அறியாமல் மறைக்கின்றனர் உலகோர்; ஒரு நாள் அவர் செயல் அம்பலத்திற்கு வந்துவிடுகிறது; உடனே அவருக்குக் கோபம் பொங்கி வருகிறது. இப்படித்தான் உண்மையை மறைத்துப் போலிபினுக்கு உலகை ஆளுகிறது. உலகமே போலி தானே; அதன் வாழ்வும் மேகச் சித்திரம்போலே மாறும் வெறுமைதானே! இதில் மனச்சாட்சியைப்

பின்பற்றும் உண்மையாளர், கோளும் பொய்யும், வஞ்சமும், அகம்பாவமும் கொண்ட அயோக்கியரால் வருந்துகின்றனர். அவர் அயோக்கியத்தனத்தைத் துணிந்து சொன்னால், உயிருக்கே ஆபத்து வந்துவிடுகிறது. மனிதனை மனிதன் மனிதனாக மதிப்பதில்லை; அகம்பாவங்கொண்ட செல்வக்காரத்தால் மனிதனை மனிதன் புழுப்போல நசுக்கப் பார்க்கிறான். இந்த அக்கிரமம் இன்னும் எங்கும் நடந்து கொண்டிருக்கிறது. தானே எஜமான் மற்றவரெல்லாம் தனது அடிமைப் புழுக்கள் என்னும் கொடிய மமதையிருக்குமட்டும், உலகில் சாந்தமாவது மண்ணாவது! கொதிப்பேறிக் கொந்தளித்துப் புயல் வீசும் கடலில் ஒரு சிறு படகிற்கு அமைதி ஏது? அகங்காரம், மமகாரம், செல்வச் செருக்குகள், இவை உண்மையின் வாயை மூடுகின்றன; வஞ்சமற்ற நல்லோரைப் பகைக்கின்றன; பொய்யரின் இச்சகத்தில் மயங்கிச் சாதுக்களைக் கொலைசெய்கின்றன. ஒரு சோக்ரதன் விஷங் குடித்துச் சாகவேண்டியிருக்கிறது. ஏன்? அவன் உண்மையைத் துணிந்து பேசினான். போலிக் கலைவான்களுக்கு அது பிடிக்கவில்லை. வீராங்கனை ஜோந்தார்க்கு பிரான்ஸைக் காத்தாள். அன்னியப் படைகளை ஆடுபோல் துரத்தியடித்தாள். அவளுக்கு உலகம் அளித்த பரிசென்ன? அவளை விலங்கிட்டனர்; கம்பத்தில் கட்டினர்; சுற்றிலும் விறகடுக்கினர்; உயிரோடு எரித்துச் சாம்பலாக்கினர். பிறகு வருந்தி, "ஆஹா! அவள் நமது தெய்வமல்லவா!" என்று திருவிழாக் கொண்டாடினர். "நாம் பெரியோம்" என்று பகட்டவே மாந்தர் முயல்

கின்றனர். உண்மையான பெரியவன் எளியவனாகிறான். மாந்தர் போலி நடைகளையும், வஞ்சச் செருக்கையும், அகம்பாவக் கொடுமைகளையும் எடுத்துச் சொல்லும் துணிவு சில உத்தமருக்கே உண்டாகிறது. அத் துணிவிற்காக அவ் வுத்தமர் சிலுவையேறியும், தீக்குளித்தும், வாளால் வெட்டுண்டும், துப்பாக்கியால் சுட்டுண்டும் இறக்கின்றனர். உலக வரலாறே இரத்தப் பிரவாகந்தானே! அந்த இரத்தப் பிரவாகத்தில் இன்றிரவு க்வின்ப்ளேன் வாழ்வும் மூழ்கியிருக்கும். ஏன்? அவனும் உண்மையைத் துணிந்துரைத்தான். கொடுமையைக் குமுறியெதிர்த்தான். தன் உயிரை மதியாமல் அதிகாரச் செல்வச் செருக்கின் அக்கிரமங்களுக்குச் சவுக்கடி கொடுத்தான். நெற்றிவேர்வை சொட்டச் சொட்டப் பாடுபட்டும் கஞ்சிக்கில்லாமல் பரிதவிக்கும் ஏழைகளுக்காகப் பரிந்துபேசினான். அவரை நசுக்கும் செல்வர் கொடுங்கோலைத் தூள் தூளாக முறித்தெறிந்தான்! பிரபு, முதலாளி, மன்னன், சுயேச்சாதிகாரி —அனைவரையும் வாரி விழுங்கப் பொதுஜனங்களின் உள்ளத்தில் குமுறிக்கொண்டிருக்கும் சுதந்திர தாகத்தை அவன் அப்போதே உணர்ந்து விளக்கினான். க்வின்ப்ளேன் எளியோர் நண்பன்; செல்வக் கொடியோர் பகைவன். க்வின்ப்ளேன் தீர்க்கதரிசி, மற்ற தீர்க்கதரிசிகளைப்போலவே உலகம் அவனைப் பழித்தது; கேலி செய்தது; இதோ கொலை செய்யவும் வாளுருவி வந்தது. ஆனால், அதற்குள் அவன் தப்பிவிட்டான். க்வின்ப்ளேனுக்கு ஒரே நாளில் மாளிகைச் செல்வத்தின்

பாபக் கொடுமையும், போலி மினுக்கும், அகம்பாவமும் புலனாயின. உடை நடை மினுக்கித் தம்மைத் தேவதைபோல நினைத்து அகம்பாவம் செய்யும் சீமாட்டிகளின் விபசாரச் சாக்கடையை அவன் கண்ணாரக் கண்டான். கணவனை வெளிமுடுக்கிக் காதலர் பலரை உள்ளே அழைத்துக் கதவை மூடிக்கொண்டு சுகபோக லீலைகளில் புரளும், அலங்காரக் காம க்ரோதப் பன்றிகளான ஜோஸென்களின் வண்ட வாளமெல்லாம் ஒரே நாளில் அவனுக்குத் தெரிந்தன. இப்போது அவன் உள்ளம் மாசற்ற, வஞ்சமற்ற பதிவிரதையான தயாவை நாடிச் செல்கிறது; கபட மற்ற, எளிய, தூய கருமவாளனை உர்ஸுலை நாடிச் செல்லுகிறது. ஏழைகளின் உழைப்பையும் உணவை யும் பறித்துண்டு அவர் வயிற்றிலடிக்கும் பஹார்சுரச் செல்வரை அவன் சீ என்று ஒதுக்கினான். எளிய உணவை வந்த;ஏழைக்குக் கொடுத்துத் தான் தண்ணீர் குடித்திருக்கும் உத்தமனாகிய உர்ஸுலை அவன் வணங்கினான். ஏதோ தலையில் கட்டிக்கொண்டு போவதுபோலப் பணத்தைப் பூட்டிப்பூட்டி வைத்து, மாளிகைகள் கட்டி, மாந்தரைத் தமது சுகபோகங் களுக்கு அடிமையாக்கி வெல்வெட் மெத்தைகளில் பாபுருஷருடன் புரளும் ஜோஸென்களின் வாழ்வை "தூ, உவ்வே" என்று அவன் மனம் மலம்போல் ஒதுக்கியது.

"ஆ தயா! என் பரிசுத்தமான தயா! நானின்றி வாழாத தயா, நீ எங்கே? நீயின்றி நான் வாழேன்" என்று அவன் டாட்காஸ்டர் விடுதியை நோக்கி ஓடினான். கோட்சொல்லி பர்கில்ஃபெத்ரோக்களின்

பாவைகளான செல்வர் நட்பெல்லாம் அவனுக்குப் புளித்துப்போயிற்று. நம்மிடம் இருப்பதைக் கொள்ளையடிக்க முகமன் பேசுவர்; பிறரை நம்முன் ஏசுவர்; நம்மைப் பிறர்முன் ஏசுவர்; இங்கிருப்பதை அங்கு சொல்வர்; அங்கிருப்பதை இங்கு சொல்வர்; கோளேற்றுவர், வெடிவைப்பர், சிண்டு முடிப்பர், மித்திரபேதம் செய்வர், வெகு உருக்கமாகப் பேசிப் பொருளைக் கைப்பற்றுவர்; பிறகு 'போடா பயலே' என்பர். முன்னால் கூழைக் கும்பிடுபோடுவர். பின்னால் கொடிய கலகம் விளைப்பர். நாம் நல்லது செய்தாலும் நயவஞ்சமாகப் பொல்லாப்புக் கட்டுவர். தனது தொந்தி நிரம்பப் பிறர் வயிற்றிலடிப்பர்; எசமான்களிடம் பிறர் யாரும் அணுகாதபடி தந்திரம் செய்வர்; அவர் பொருளைத் தாமே பறித்துண்ண வழி செய்வர்—இப்படிப்பட்ட உலகோருடன் என்ன நட்பு வேண்டியிருக்கிறது? கிட்ட வந்தாலும் இந்த நட்பு நமக்கு வேண்டாம்; வஞ்சகர்களுடனும், நம்மேல் பாயும் ஆங்காரப் புலிகளுடனும், காட்டுப்பன்றிகளுடனும், மலைப்பாம்புகளுடனும் நட்பாடல் ஆபத்தல்லவா? மனிதர் உறவை வெறுத்து, ஒரு ஓநாயுடன் சகோதரத்துவம் கொண்டாடி எளிய வாழ்வு வாழுகிறானே, அந்த வஞ்சமற்ற கிழவனே நமது நண்பன், நமது தந்தை என்று ஆர்வமுடன் நினைத்தான் க்வின்ப்ளேன்; தான் கண்ட செல்வர் வாழ்வெல்லாம் அந்த நன்றியுள்ள ஓமோவின் கால் தூசி பெறுமெதன நினைத்தான். இவ்வித உணர்ச்சி அலைகளுடன் க்வின்ப்ளேன் டாட்காஸ்டர் விடுதியைக் கண்டான். பௌலிங்கிரீன் மைதானமே விரிச்

சென்றிருந்தது. வாழ்க்கையின் அரவமே அங்கில்லை; ஏன்? அங்கு ஸர்க்கஸ், விகடம், குஸ்தி செய்து பிழைத்த ஏழைகளையெல்லாம் பிரபுத்துவம் ஒரே மணி நேரத்தில் காலிசெய் தோட்டியது. அரவமற்ற அந்த விசால மைதானத்தில், விண்மீன்கள் கண் சிமிட்டும் நள்ளிரவில், டாட்காஸ்டர் விடுதி ஒரு சமாதிபோலத் தோன்றியது. வெளிச்சமில்லை; 'உள்ளே உறக்கம்' என்று நினைத்தான்; கோவிகம் படுக்கும் நாயறை அவனுக்குத் தெரியும்; அதன் கதவைத் தட்டினான்; பதிலில்லை. "சிறுவர் ஆழ்ந் துறங்குவர்; கிழவர் அலுத்துறங்குவர்" என்றான். "மாஸ்டர் நிகோலாஸ், நிகோலாஸ், கதவைத் திறங் கள்!" என்று உரக்கக் கூவினான், கதவைத் தட்டி னான், காலால் உதைத்தான்; பதிலில்லை. "உர் ஸுலஸ், ஓமோ" என்று உரக்கக் கூவினான்; பதிலில்லை. "நிகோலாஸ், கோவிகம், ஃபோபே, வீனஸ், உர்ஸுலஸ்," என்று நாமாவளிகளை உரக்கக் கூவினான். பிறகு விடுதியின் ஜன்னல்களைத் தட்டினான், ஆளரவமே இல்லை. "ஆ! எங்கே இவர்கள்?" என்று பெருமூச்சுவிட்டான். பொறுமையிழந்தான்; ஒரு கண்ணாடி ஜன்னலைக் கையால் உடைத்தான்; கை இரத்தமானது; அதை அவன் கவனிக்கவில்லை; ஜன்னலில் ஏறித் தாள்ப்பாளைத் திறந்து, உள்ளே புகுந்தான். ஒவ்வோர் அறையாகப் பார்த்தான். எல்லாம் வெறுமையாயிருந்தன; இருட்டில், சட்டி முட்டி, சாமான் பெஞ்சு நாற்காலிகள்மேல் இடறி விழுந்து, விழுந்து வீடு முழுதும் சுற்றிப் பார்த்தான்; யாருமில்லை. தான் ஆடிய அரங்கைப் பார்த்தான்; பச்சை வண்டி

மேடை இல்லை. என்ன செய்வான் ? எங்கே இவர்கள் சென்றார்கள் ? யார் அறிவர் ? இனி அந்த வெறும் வீட்டில் தேடிப் பயனென்ன ?

க்லின்ப்ளேன் டாட்காஸ்டர் விடுதியை விட்டு, டௌளிங்கிரீன் மைதானம் முற்றிலும் அலைந்து தேடினான். ஆள் அரவமேயில்லை. எல்லாம் வெறுமை. பர்கில்ஃபெத்ரோவின் சூழ்ச்சியும், இராணி உத்தரவும் டௌளிங்கிரீனைக் காலியாக்கியது, நிர்மூலமாக்கியது.

## 73. தேம்ஸ் நதிக்கரையில்....

க்லின்ப்ளேன் வெகு விரைவாகச் சந்து பொந்தெல்லாம் தாண்டித் தேம்ஸ் நதிக்கரையைச் சேர்ந்தான் ; அதன் கைப்பிடிச் சுவற்றில் முழங்கைகளை ஊன்றிச் சாய்ந்து, நீண்ட சிந்தனையில் ஆழ்ந்தான். பிரபுக்களின் சிரிப்பு—எரிமலையிற் குளித்துத் தப்பி, டிர்ரிமோர் வாளால் பிரட்டியதையும் தாங்கி, தான் வெறுத்த மாளிகைக் கொடுமைகளைத் துறந்து, தான் விரும்பிய எளிய தூய காதலியை நாடி வந்தான். வெறுமையே கண்டான். சுற்றிலும் இருள் ; அவன் மனத்திலும் இருள் ; டாட்காஸ்டர் விடுதி ஆளற்றது. பச்சை வண்டியைக் காணோம் ; அதில் வசித்த தனது தந்தையைக் காணோம் ; காதலியைக் காணோம்........ ஆ! அவன் தலை சுழன்றது, உள்ளம் இடிந்தது, ஆன்மா இருண்டது, கவலை விம்மியது. அவன் ஏறின செல்வச் சிகரம் தகர்ந்து மண்ணில் உருண்டது. தன்னை உயர்த்தி உருட்டிய ஊழ்வினையை நினைந்தான். “ விதி இந்தக் கதவு திறக்கும்போது அந்தக் கதவை மூடி

விடும்" என்று பார்க்கில்ஃபெத்ரோவின் வார்த்தையை
நினைத்தான்.

தேம்ஸ் நதி, கரிய வினைவெள்ளம்போல ஆழ்ந்து
முன் செல்கிறது; க்வின்ப்ளேன் நினைப்பாறு வேக
மாகப் பின் செல்லுகிறது.

"எனது கடமையைச் செய்து தீர்த்தேன்;
என்னுள் பதினைந் தாண்டுகளாகக் குமுறிக்கொண்
டிருக்கும் எண்ணங்களை அந்தச் செல்வக்கொடியார்
முன்பே துணிந்து சொன்னேன். குகைச் சிங்கத்
தின் முன்பே அதன் அட்டூழியங்களைச் சொன்னேன்.
மனச்சாட்சி மகிழ்ந்தது; சிரிப்பும் கேலிக் கூப்பாடும்
என் உள்ளத்திற் கனலும் உண்மையை அணைக்கப்
பார்த்தன; முடியவில்லை. பேச வாயில்லாமல் சிறு
மைப்பட்டு வருந்தும், கோடானுகோடி சகோதர
சகோதரிகளின் நிலைமையைப் பெரிய பிரபுக்கள் முன்பு
விளக்கினேன். பேயிடம் அகப்பட்ட பிள்ளைபோல,
இந்த அரக்கரிடம் ஏழைகள் அகப்பட்டு வருந்துகிறார்
கள். வாயைத் திறந்தால் தண்டனை, கண்டனை.
அந்த வாயில்லாப் பூச்சிகளுக்காகவே நான் பரிந்து
பேசினேன். எளியவருக்காக வலியவரிடம் முறையிட்
டேன். நான் உணர்ந்ததை, அறிந்ததை, என் கண்
ணாரக் கண்டதைச் சொன்னேன். இதில் பிசகென்ன?
உண்மையைச் சொன்னேன். அதற்காகவே இறைவன்
என்னை ஒரே நாளில் செல்வச் சிகரத்தில் ஏற்றினார்.
அதற்காகவே எனது தலைவிதி ஒரு சுரக்குடுக்கைக்
குள் 15 ஆண்டுகள் உறங்கியது; அதற்காகவே
கருணைக்கடல் அதைப் பதினைந் தாண்டுகள் கவன
மாகப் பாதுகாத்துத் தக்க சமயத்திற் கரைசேர்த்தது.

ஃபெர்மேன் க்ளான் சார்லி 15 ஆண்டுகள் அலையில் நீந்திக் கரை வந்து சேர்ந்து, இராணியை அடைந்தான். க்வின்ப்ளேன், ஜன சமுத்திரத்தில் 15 ஆண்டுகள் அலைந்து, இங்கு வந்து சேர்ந்தான். இருவரும் ஒருவரானார். எதற்காக? ஏழை க்வின்ப்ளேன் ஃபெர்மான் பிரபுவாகி, நீண்டகாலம் சுகபோகக் கொடுங்கோலால் நாட்டை நலித்த பிரபுத்துவத்திற்குச் சாட்டை கொடுக்கத்தான்; சரியான சாட்டை கொடுத்தேன், என் பிறவிக் கடனை முடித்தேன். இதேமாதிரி ஏழைகள் பேசியிருந்தால் அந்த இடத்திலேயே கொன்றிருப்பர். என்னைச் சிரிப்புப் புயலால் அவர்கள் தாக்கினர். நான் ஊமைகளுக்காகப் பேசினேன்; ஆனால், செவிடருக்குப் பேசினேன். என் பேச்சில் உண்மை இருக்கிறது என்று சகோதரன் டிர்ரிமோரும் 'பட்'டென்று என்னை அடித்தான். என்னை வாட்போரில் கொல்லக் கங்கணங் கட்டிக்கொண்டான். என் வாயைப் பார்த்தார்கள்; என் சொல்லை உணரவில்லை. என் வாய் அவர் கொடுமையின் அறிகுறி என்று அவர்கள் உணரவில்லை. ஒரு ஏழை க்வின்ப்ளேன் இப்படி இரங்கிக் கதறுகிறான். ஒரு ஜேம்ஸ் II அப்படிக் கொடுமை செய்கிறான். என்னே உலகம்! என்னே செல்வக் கொடுமை! என் சிரிப்பு ஏழைகளின் அழுகைக்கு அறிகுறி என்பதை அவர்கள் அறியார்கள். என் மனத்தைக் கேலி மையாண்டியால் அவர்கள் கொலை செய்தனர். நாளை என் உடலையும் வெட்டித் தள்ளுவர். ஆனால், என் சொல் வீணாகாது. அதை இந்த அகம்பாவச் செல்வர் கேட்கவில்லை; என்றாலும், கால சக்தி அதைக்

கேட்டது. என் மனத் துடிப்பைக் கடவுள் கேட்டார். இந்தச் செல்வக் கொடியரின் வன்செவி ஆசை நாயகியரின் மழலையைக் கேட்கும்; சிற்றின்பப் பாடல்களைக் கேட்கும் ; உண்மையைக் கேட்காது. ஆனால், இவர்களை உண்மை கேட்கும்; தெய்வம் கேட்கும். தெய்வத்திற்குப் பொதுவாக என் கடமையைச் செய்தேன் ; அதனால் நான் ஏறிய உயரத்தினின்று கீழே உருண்டேன் ; பரவாயில்லை. நான் வருந்தவே பிறந்தேன் ; வருந்துவோர் துயரை வருத்துவோரிடம் துணிந் துரைத்தேன். மனச்சாட்சி மகிழ்ந்தது ; இனி யாரை நான் மகிழ்விக்க வேண்டும் ? உலகின் உறவும், செல்வமும் என்ன நிலை ? இன்று காலை அதிட்டம் என்னைப் பிரபுவாக்கியது. இதே நாள் இரவு, இதோ நான் மீண்டும் அனாதையாக நள்ளிரவில், இந் நதியைப் பார்த்து, எனது துயரைச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். தங்கக் கனியைச் சுவைத்தேன் ; 'சீ, விஷம்' என்று துப்பினேன். நான் எளிய, சுதந்திர வாழ்வில் இன்புற்றிருந்தேன். என்னைச் செல்வ மாளிகைச் சிறையிலடைத்தனர். சிறையை உடைத்துக்கொண்டு மீண்டும் இதோ விண்ணளாவிய விரிநிலத்தில், சுதந்திர கானம் செய்து ஓடும் தேம்ஸ் நதியின்முன் நிற்கிறேன்.

இறைவன் என் கண்ணைத் திறந்தான் ; பர்க்கில் ஃபெத்ரோவின் மாயத்தால், உண்மையை விட்டுப் போலி மினுக்கை நாடினேன் ; உண்மைக் காதலை விட்டுக் காமச் செருக்கை நாடினேன் ; என்னுருயிர்த் தயாவைவிட்டுக் காமராக்ஷஸி ஜோஸேன் கையிற் சிக்கினேன். எனது அருமைத் தந்தை உர்ஸ[illegible]

விட்டு அகம்பாவச் செல்வரைச் சேர்ந்தேன். மாளிகை நாற்றங்களை அறிந்தேன். அதிகாரச் செருக்கின் புலி நகங்களைக் கண்டேன். நல்ல வேளையாக மாயச்சிறை தப்பி வந்தேன்.

காதலில்லாக் கலியாணம், கணவனுக்குக் கதவை மூடிக் காதலருக்கே கதவைத் திறக்கும் மனைவியர், இரக்கமற்ற சுகபோகம், நாணமற்ற பேய்க் காமம், அன்பில்லா நட்பு, வாள் காட்டி மிரட்டும் சகோதரத்துவம், அறமற்ற அதிகாரம், அறிவற்ற ஆற்றல், ஒளியற்ற பொற்றிரள், நெறியற்ற வாழ்க்கை, அருளற்ற மாளிகை, பொருளற்ற வெற்றுரைகள், இதயமற்ற பிரபுத்துவம்—அனைத்தையும் கண்டேன்; என் **விழி திறந்தது.**

ஆனால், இவ்வனுபவம் என்னுயிருக்கு உலை வைத்ததே! ஆ, என்னுயிரான தயா எங்கே? என் அன்பான உர்ஸுஸ் எங்கே! ஒருவரையும் காணோமே! என்னை வஞ்சிக்க அரசியின் அதிகாரம் அவர்களை அழித்ததோ? ஃபெர்மான் ஆன க்லின் ப்ளேனை மறைப்பதற்கு அவர்களைச் சிறையிட்டனரோ, கொன்றனரோ—என்ன செய்தாலும் யார் கேட்பது? வலிய கொடியரின் வஞ்சச் சிறையாகத் தானே இருக்கிறது உலகம்! ஆ, தயாவும் நானும் விண்ணின்பம் அனுபவித்தோமே. முன்னே சாத்தான் பாம்பு பெண்ணை மயக்கியது; இன்று செல்வச் சாத்தான் பாம்பு ஆணை மயக்கியது. ஜோஸேன்-அரக்கி வலையைத் தப்பினேன்; தயா, உனக்கே உயிர்கொண்டு வந்தேன்; எனது பட்டம் பதவிகளைத் துரும்பென உதறித் தள்ளினேன்; உன்னையே

வேண்டினேன். காரிருள் கவ்விய இந்த எல்லையற்ற உலகில் இனி உன்னை எங்கே காண்பேன்? ஆம், நாமெல்லாரும் இன்றிருந்து நாளைச் சாகும் நரங்கள் தாமே. என் கிளியே! எப்படியும் நீயும் ஒரு நாள் ஊன்கூண்டைவிட்டு வானிற் பறந்து செல்வாய்; நீ இறந்திருந்தால் இதோ நான் உன்னுடன் வந்து சேருகிறேன்; நீ உயிரோடிருந்தால், உனக்காக நான் வானுலகிற் காத்திருக்கிறேன். என் கண்ணே! என்னுயிரே! உன்னை எங்கே தேடுவேன்! இதோ "வா வா" என்று சலசலத்தோடும் இந்தத் தேம்ஸ் நதியில் என் உயிரைக் கரைத்து உன்னைத்தேடி வருகிறேன்."

☆

க்ளின்ப்ளேன் ஆற்றோட்டத்தைப் பார்த்துக் கொண்டே கற்போலிருந்தான். பிறகு "என்னைக் கேலி செய்த பிரபுத்துவமே! உன் அகம்பாவச் சட்டையை இதோ கழற்றி யெறிகிறேன்" என்று தான் அணிந்த வெல்வெட் சட்டையைக் கழற்றிக் கைப்பிடிச் சுவற்றின் கீழே வைத்தான்; அச் சட்டையில் ஒரு நோட்டுப் புத்தகம் இருந்தது; அதில் ஒரு பென்ஸிலும் செருகியிருந்தது. இரண்டு நிமிஷம் கண்மூடிக்கொண்டிருந்தான். பிறகு புத்தகத்தில்,

"நான் போகிறேன்; என் சகோதரன் டேவிட் டிரீமோர், என் இடத்தில் அமர்ந்து, எனக்குரிய சொத்து சுகங்களை அனுபவித்து இன்புறுக!

ஃபேர்மான் க்ளான்சார்லி,

இங்கிலாந்துப் பிரபு!"

என்று விரைவாக எழுதினான். அதைத் தொப்பியில் வைத்துத் தொப்பியைச் சட்டைமேல் வைத்தான். அவை காற்றில் பறக்காமல் ஒரு கல்லையும் மேலே வைத்தான்.

"என் கடமை தீர்ந்தது! இனி எனக்கு வேலை யில்லை; இதோ வருகிறேன், தயா" என்று புறங்கை கட்டித் தேம்ஸ் நதியிற் குதிக்கக் காலெடுத்தான்.

அப்போது யாரோ அவன் கையை நக்கியது போலுணர்ந்தான்; திரும்பினான். சடசடவென்று காதை அடித்து வாலை ஆட்டி ஒரு நண்பன் அருகே நின்றான்; யார்? ஓமோ, ஓநாய்.

## 74. ஓமோ காத்தது

"ஆ ஓமோ, நீயா!" என்று வியந்தான். ஓமோ வின் கண்கள் மகிழ்வால் மிளிர்ந்தன. அது வாலை யாட்டியது. க்லின்ப்ளேனுக்குப் புதிய நம்பிக்கை பிறந்தது. தன் வாழ்வே சரிந்து விழும்போது யாரோ கைகொடுத்து எழுப்பியது போலுணர்ந்தான் அவன். ஓமோ அவனைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே "என் பின் வா" என்பதுபோல நாலடி சென்று வாலாட்டியது. க்லின்ப்ளேன் ஓநாயுடன் சென்றான். ஆள் பின்னே வருவதை அடிக்கடி திரும்பிப்பார்த் துக்கொண்டே ஓமோ முன்சென்று, தேம்ஸ் நதி யைத் தாண்டித் துறைமுகத்தைச் சேர்ந்தது. அங்கே

ஒரு பெரிய கப்பல் நின்றது. அக் கப்பலுக்குச் செல்லப் பலகைப் பாதையிருந்தது. அதன் வழியே ஓநாய் க்வின்ப்ளேனை அழைத்துச் சென்றது. அது டச்சுக் கப்பல்; அதன் விளிம்பில், "ஒகாரா, ரோதர்தாம்" என்று வெண்மையாக எழுதியிருந்தது இருட்டில் தெரிந்தது. கப்பலுக்கு இரண்டு பாய் மரங்களிருந்தன. ஒன்றின் பெயர் பால்; மற்றொன்றின் பெயர் பீடர். க்வின்ப்ளேன் ஓநாயுடனே கப்பலுட் சென்றான். பிரயாணிகளெல்லாம் உறங்கினர். கப்பலின் ஒரு புறம் பழைய கைவண்டி ஒன்றிருந்தது; அது காலத்தால் தேய்ந்து, ஆடிப்போனது. அதனுள் எழுதியிருந்த எழுத்துக்கள் மங்கிப்போயின. அவ் வண்டியின் கீழ் ஒரு சங்கிலியிருந்தது. அங்கே ஓமோ சென்று படுத்துக்கொண்டு க்வின்ப்ளேனையே பார்த்தது. அதுவே உர்ஸஸ் வைத்திருந்த பழைய வண்டி. தனக்குப் புகல்கொடுத்த வண்டியைக் கண்டு க்வின்ப்ளேன் மகிழ்ந்தான். அவ் வண்டியைக் கண்டதும் பழைய கனவுகள் மீண்டன. அவன், சாவினின்று வாழ்விற்கு வந்தவன் போல மகிழ்ந்தான். பெரிய பெரிய செல்வரிடம் இல்லாத அன்பும், நன்றியும் ஒரு ஓநாயிடம் இருந்ததைக் கண்டு வியந்தான். வண்டியின் படிகள் இறக்கிவிட்டிருந்தன; கதவு திறந்திருந்தது. உள்ளே எட்டிப் பார்த்தான் க்வின்ப்ளேன்; வண்டியில் களையில்லை; கவலையும் விசனமும் அதில் வசிப்பதுபோலத் தோன்றின. உள்ளிருந்து யாரோ தனக்குத்தானே புலம்பும் சத்தம் வந்தது. க்வின்ப்ளேன் மறைந்திருந்து கேட்டான்.

# 75. உர்ஸுலஸ் புலப்பம்

*தந்தை உர்ஸுலஸ் நெஞ்சொடு கிளத்துகிறான்; உலகத் துன்பங்களைச் சற்றும் பாராட்டாத அவனும் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறான்; ஈனக் குரலில் அவன் என்ன சொல்லுகிறான் கேட்போம்:*

*தெய்வமே, ஏனிப்படி எம்மைச் சோதிக்கிறாய்? நாங்கள் ஒரு குற்றமும் அறியோம்.*

*காட்டுப் பறவை போலக்*
*களித்திருந்தோமே—அமைதியிற்*
*குளித்திருந்தோமே—ஒரு*
*வேட்டுவன் வந் தெம்மைப் பிரித்த*
*விதிக்கென் செய்வோமே!*

*ஆ, எமக்குத் தெரிந்த தொழிலைக்கொண்டு சிரித்தும், ஊரைச் சிரிப்பு மூட்டியும் வாழ்ந்தோம். எங்கள் சிரிப்பெல்லாம் அழுகையாக மாறியதே!*

*அவன் போய்விட்டான்; அதிகாரப் பாவிகள் என் மகனை அநியாயமாகக் கொன்றுவிட்டார்கள். ஆ, க்வின்ப்ளேன், என் அருமை மகனே! அவனே இவளுக்கு உயிர்; உயிரின்றி உடல் வாழுமோ? ஆண் பறவையை வேடன் பிடித்துக்கொண்டு போனான்; பெண் பறவை இங்கே சோகமுற்றுச் சோர்ந்து தவிக்கிறது. என்னருமைத் தயா மெலிந்து நலிந்தாள்; தன்னுணர்விழந்தாள். வாடி மயங்கினாள்; பிரிவுத்துயரம் ஆளை எப்படிக் கொல்லுகிறது, பாருங்கள்!*

தயா தூங்குகிறாள்; இந்தத் துன்ப உலகில் மனத்திற்குச் சிறிது ஆறுதல் அளிப்பது உறக்கமே. உறக்கம் வாழ்க! ஏதோ சத்தம் கேட்கிறதே. கப்பலி லுள்ள கனவான்களே தயவுசெய்து சத்தம்போடாதீர் கள். இந்த மெல்லியள் உறங்குகிறாள். அவள் சிறியள். கவலையால் சோர்ந்து கண் மயங்கினாள்; கொஞ்சம் காற்றாட இருக்கட்டுமென்றே இங்கே அவளைப் படுக்கவைத்தேன். இன்னும் அவள் முகம் வேர்த்துக்கொட்டுகிறது. முட்டாள், நானும் இப்படி முணுமுணுக்கக்கூடாது. ஓமோ—எங்கே? அதைக் கட்டிப்போடவில்லை; இரை தேடப்போயிருக்கும். எனது நன்றியுள்ள நண்பன் ஓமோ—அவனுக்கு ஒரு தீங்கும் வரக்கூடாது. ஓமோ, என்னருமைச் சகோதரா!" (இச்சமயம் ஓமோ சடசடவென்று வாலாட்டியது)

ஆம், இருக்கிறாய்! எனக்குச் சட்டென்று ஆறுதல் கூறுவோன் நீயே. அந்தப் பாவிகள் ஓமோ வைச் சுடுவேனென்றார்கள்; அவர்கள் என்னவேண்டு மானாலும் செய்வார்கள்—பிரத்யக்ஷ யமராஜர்கள். நல்லவேளையாய் அவர்களைத் தப்பி ஓமோவைக் கப்பலிற் சேர்த்தேன். ஓமோ அமைதியாகப் படுத்துக் கொள். (ஓமோ மறுபடி வாலை யடித்தது.)

இச்சமயம் கப்பல் நகர்ந்தது. நல்ல காற்றடித்தது; இரவு அமைதியாகவேயிருந்தது.

கப்பல் ஓடுகிறது! அப்ப, ஒழிந்தது சீமை வாழ்க்கை! வந்தனம் லண்டனே, விடைபெற்றுக் கொள்ளுகிறோம். பயங்கர லண்டனே, பேய் பிடித்த

லண்டனே, உன்னைவிட்டுச் சந்தோஷமாகப் போகிறோம்—தூக்க நகரமே, நரகமே—பேய்ப் பருந்து போல வந்து ஆண் குஞ்சைத் தூக்கிச் சென்றாய் உன் வலிய நகங்களால். இதோ பெண் புள் சோர்ந்து தவிக்கிறது. உன் பிரபுத்துவம் நாசமாய்ப் போக, ஏதுமறியா ஏழைகள் வாயில் இப்படி வருத்தமணலைக் கொட்டுகிறது.

எவ்வளவு அழகான கட்டிடங்கள், எவ்வளவு அழகான நகரம்' என்று உன்னைக் கண்டு வியக்கின்றனர். அரசாங்கத்தின் புலி நகங்கள் பற்றி ஆட்களைப் பீறி இரத்தத்தை உறிஞ்சும்போது தெரியும் உனது பயங்கரம்! பௌலிங்கிரீனில், டாட்காஸ்டர் விடுதியில், எவ்வளவு சந்தோஷமாயிருந்தேன்; பணம் பெட்டி பெட்டியாகக் கொட்டியது. ஒரு இரும்புத் தடி வந்து, எங்கள் மகிழ்வை மண்டையிலடித்துத் தகர்த்ததே! இன்று ஏப்ரல் 30; ஏப்ரல் மாதமே எனக்குப் பயந்தான். 5, 27 ஆகிய இரண்டு தேதிகளே ஏப்ரலில் நல்ல நாட்கள். 10, 20, 29, 30-இவை மிகவும் கெட்ட நாட்கள். இந்த நாள் ஆபத்தில்லாமல் செல்லவேண்டுமே; பயணம் பரவாயில்லை; நல்ல கப்பல், நல்ல காற்று, நாளை மாலை ரோடெர்டாமில் (Rotterdam) இருப்போம். அங்கே புதிய வாழ்வைத் தொடங்குவோம். பழையபடி இந்தச் சிறு வண்டியை ஊருக்கு ஊர் இழுத்துச் செல்வோம். மூலிகை விற்றுப் பிழைப்போம்....சரிதானே ஓமோ? (ஓமோ வாலடித்து ஆமோதித்தது). நகரம் என்றாலே கவலைதான். அதிலும் மஹாப்பிரபுக்கள் ஆட்ட

ஹாசம் செய்யும் நகரென்றால், கிட்டப் போகக் கூடாது. எனது லண்டன் இந்தப் பழைய வண்டி தான். இதில் நான்கு பேர் இருந்தோம். க்வின் ப்ளேனால் பச்சை வண்டி யோகம் வந்தது; பணம் வந்தது; புகழ் வந்தது; நல்ல காலம் வந்தது; கெட்ட காலம் வந்தது; இரும்புத் தடியனும் அந்தத் தொங் கிக் கொடியனும் என் பிழைப்பைக் கெடுத்தனர். ஆனால், உலகில் எதுதான் நிலை; மனிதர் கட்டின தைக் காலம் இடித்துத் தள்ளுகிறது. மனிதனைச் சாவும் விதியும் சம்மட்டிப் பூசை கொடுத்து மாய்க்கின்றன. நேற்றுக் காதலனுடன் கொஞ்சிய கிளி, இன்று அவனை இழந்து இதோ பரிதவிக் கிறாள்; லண்டன் சைத்தான் என் எளிய வண்டியில் புகுந்தது! விட்டது சனியன்; அதன் முகத்தில் இனி விழிக்கவேண்டாம். அதன் பாதிரிகளும், அதிகாரிகளும், அழுலும், சிறையும், பிரபுத்துவமும்— எல்லாம் என் கண்ணுக்கு மறைந்தன. காடே இன் பம்; காட்டு மரங்களின் இலைகளுடன் இனிப் பேசு கிறேன். தயா இல்லாவிட்டால் காட்டிற்கு ஓடியிருப் பேன். தயா உறங்குகிறாள். உறங்கு, என் அருமைக் குழந்தாய்.

## 76. தயாவின் சோகம்

இச் சமயம் ஒரு மெல்லிய குரல் கேட்டது. தயா பேசினாள்.

“அவர் போய்விட்டார்! இனி நான் இருப்ப தேன்? அவரே என் உயிர்; என் உலகம். அவ ரின்றி உலகம் எனக்குத் தூசிபெறாது. ஆ, இப்போதே

நான் கண்ணிழந்தவளானேன்; காதலனுடன் இருந்த போது எனக்கொரு மனக்கண் இருந்தது. அதுவும் மறைந்தது. அப்பா, எனக்கு நோயில்லை; உன் தனிப்பேச்சை நான் கேட்டேன். உலகம் துயரமே. நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். அப்பா, அவரைத் தேடிச் செல்கிறேன்.

—குழந்தாய்! பேத்தாதே. இரவு கழிந்ததும் நாம் புதிய ஊரில் இருப்போம்.

—அப்பா, எனக்கு இரவு பகலில்லை; இரவே அறியாமல் இருந்தேன்; இப்போதே இருள் என்னைக் கௌவியது. எனக்கு ஒளி தரும் சூரியனைத் தேடிச் செல்லுகிறேன். அவன் எங்கே இருக்கிறானென்று எனக்குத் தெரியும். இந்த உடல் ஒரு ஊன்கூடு; இதைச் சுமந்துகொண்டு என்னால் பறக்கமுடியாது. இதை உதறிப் பறக்கிறேன். என்னவன் பறந்து சென்றான். யானும் அவன் பின்னே செல்கிறேன். ஆன்மாவின் கூடு கீழேயில்லை. இது வெறும் வாடகை வீடு; ஆன்மப் பறவையின் கூடு பரமண்டலத்தில் இருக்கிறது; அங்கே நான் இதோ செல்லுகிறேன். அப்பா! பிறகு நீயும் அங்கே வருவாய். பிறகு ஓமோவும் வரட்டும். கீழிருக்கும் ஆன்மாவைக் காந்தம்போலவே மேலுலகம் இழுக்கிறது.

—குழந்தாய்! நீ இரு.

—எப்படி? மூச்சில்லாமல் இருப்பதெப்படி? உயிரில்லாமல் நடப்பதெப்படி? அவர் வரவேண்டும்; இன்றேல் நான் அவரிடம் போகவேண்டும்—அதுவே உயிர்ப்பதாகும். அவர் வாரார்; நான் நில்லேன்.

அப்பா, போவதே நல்லது; இந்த உலகில் துக்கந் தான் மிச்சம்; இங்கிருந்தென்ன செய்வது? இன்றிருந்து நாளைப்பிரியும் அன்பால் பயனென்ன? நித்தியமான அன்பு மேலேயிருக்கிறது; அதை அடைவேன்; அந்த அன்பே கடவுள்.

—குழந்தாய்! பதறாதே. அமைதியாயிரு.

—என் இரக்கைகள் படபடக்கின்றன. உலகம் கடுந்துயர்ச் சுமையா யிருக்கிறது; உலகின் நிலைக் கேட்டை அறிந்தேன். அப்பா, முன்னெல்லாம் கிராமத்திற்குக் கிராமம் சென்று சந்தோஷமாயிருந்தோம்; லண்டனுக்கு வந்தோம்; நமக்குப் பிடித்தது சனியன். ஒரு நாள் ஒரு மின்னு மினுக்கி வந்து கூத்துப் பார்த்தாளல்லவா? அவளை நினைத்தாலே என் மனம் பதறுகிறது. என்மேல் வைத்த அவர் இதயத்தை அவள் பங்கு கொண்டாள்போலத் தோன்றுகிறது. உலகின் மாயவலைகளை நினைக்கும் போது வாழ்க்கையே பிடிக்கவில்லை.

—குழந்தாய்! அமைதியாகத் தூங்கு; பேசாதே; உனக்குக் காய்ச்சல். என்மேல் உனக்குப் பிரியமானால், நான் வருந்தாமல் இருக்கவேண்டுமானால், நீ புலம்பாமல் உறங்கு.

—அப்பா, இதோ நான் நித்திய உறக்கம் கொள்ளப்போகிறேன். இதோ ஆண்டவன் என்னை அழைக்கிறான்; உயரப் பறந்துசெல்லுகிறேன்.

—ஆ அசடே, என்ன எழுந்திருக்கிறாயா? இவளுக்கு ஜன்னி பிறந்துவிட்டது; தெய்வமே! என்ன செய்வேன்.

தயா எழுந்தாள். "இன்று கூட்டம் அதிகம்; நான் தயார். க்வின்ப்ளேன் எங்கே? எங்கே என் காதலன்?—" என்று சித்தப்பிரமை பிடித்துப் பிதற்றினாள்.

க்வின்ப்ளேன் சட்டையும் தொப்பியும் வண்டி மூலையில் மாட்டப்பெற்றிருந்தன. இறந்தவர் உடையை அப்படி மாட்டுவர். தயாவின் பேச்சைக்கேட்டு நடுங்கிப் போனான் க்வின்ப்ளேன். மெல்ல உள்ளே வந்து, மேற்சொன்ன சட்டை தொப்பியைப் போட்டுக் கொண்டான். மெல்ல உர்ஸாஸ் பக்கம் சென்றான். இச் சமயம் தயா மெல்லிய குரலிற் பாடினாள்:—

"பறந்த பறவை வருமோ?—முன்
பாய்ந்த வெள்ளம் வருமோ?
இறந்த மூச்சு வருமோ?—என்
இறைவர் ஆவி வருமோ?
கூட்டை விட்டுப் பறந்தே—என்
கொழுநன் வீடு செல்வேன்!
நாட்டை விட்டுப் பறந்தே—தெய்வ
நாடு சென்று வாழ்வேன்!
காதலா என் கண்ணே—உன்னைக்
கணமும்பிரிய மாட்டேன்
சாதலில்லை யெனக்கே—உன்
சமீப மிருக்குமட்டும்!"

ஆ கண்ணே, எங்கே யிருக்கிறாய்? இச் சமயம் அவள் கரத்தை யாரோ தொட்டணைந்தார்.

# 77. பிரிந்தவர் கூடினர்

—ஆ க்லின்ப்ளேன்—கண்ணா !

—ஆ தயா ! என் உயிரே !

—ஆ க்லின்ப்ளேன் ! வந்தாயா என் மகனே ! நீ உயிரோடிருக்கிறாயா ?

—என் கண்ணா வந்திரா !

—அப்பா, பிரபுக் கோட்டையைத் தப்பி வந்தேன். என் ஆருயிர்க் காதலி ! உன்னைக்கூடி என்றும் வாழ வந்து சேர்ந்தேன். என் கண்ணே, நான் சென்றதால் எவ்வளவு வருந்தினாய் ! கண்ணே, முத்தே, என் செல்வமே, உன்னிடம் பன்மடங்கு அன்புடன் வந்து சேர்ந்தேன் ; நீயே என் விண், என் உயிர், என் உலகம், என்னுயிரின் உயிர்ப்பு நீயே.

—காதலரா என்னை அணைந்தது ?

—ஆம் நானே. நீ யன்றி வாழா நானே; இதோ உன்னிடம் உயிர், மனம் அனைத்தையும் வைத்த நானே, உன்னை அணைத்து முத்தமிடுகிறேன்; கட்டிக் கரும்பே, கனிரசமே, ஆ எத்தனை செல்வக்கோட்டைகளைத் தாண்டி உன்னை மீண்டும் கூடினேன்; ஓமோ இல்லாவிட்டால் நீ சொன்னபடி நான் மேலே சென்றிருப்பேன்; ஓமோ என்னைக் காத்தது. கதையெல்லாம் பிறகு சொல்லுகிறேன். என்னை மன்னி, கண்ணே. ஏதோ ஒரு மாயம் நம்மைப் பிரித்தது. துயர் ஒழிந்து, இடர் நீங்கியது. இனி நம்மை யாரும் பிரிக்கமுடியாது. சாவும் பிரிக்கமுடியாது. நாம் நாளை

உலாந்தாவிற்குச் சென்று மங்களமான மனைவாழ்க்கை நடத்துவோம்; பணத்திற்குப் பஞ்சமில்லை; மன மொன்றி வாழுவோம். இனிப் பயமில்லை; கண்ணே, என் உயிரே, என் கிளியே, என் இன்பமே!

க்வின்ப்ளேன் தயாவை வாரியணைத்து முத்த மிட்டு, இன்பக் கண்ணீர் வடித்தான். உர்ஸஸ் "அட, மெள்ளடா! பயலே, ரோஜாப்பூவைக் கசக்கிப் பிழியாதே," என்று தமாஷ் பண்ணினான். கிழவன் கண்ணீருடன் அந்தப்புறம் திரும்பித் தன் பேச்சைத் தொடங்கினான். "சமாசாரம் புரியவில்லை. கண்ணாரக் கண்டேன்; இவனை அவர்கள் கல்லறைக் குத் தூக்கிச் சென்றார்கள்; ஒரு சர்க்கார் உத்தியோ கஸ்தனும் இவன் இறந்ததாகச் சொன்னான். முட் டாள், நானும் நம்பினேன்; பயல் எப்படியோ தப்பி வந்து விட்டானே! கடும்புயல்! ஆனால், இவ்வளவு உற்சாகம் உடம்புக்காகாதடா பயலே! விடு அவளை." இச் சமயம் க்வின்ப்ளேன், தயாவை மேன்மேலும் கொஞ்சிக் குலாவினான்:—

"தயா! இந்தக் கப்பலுக்கு எப்படி வந்தாய்! பச்சை வண்டி எங்கே, அரசாங்க எமன்கள் மிரட்டி இப்படிச் செய்தார்களோ? இருக்கட்டும், பழி வாங்கு கிறேன்; நான் பிரபு; ஆங்கிலப் பிரபு—தெரியுமா? நான் பிரபுக்கள் சபையில் புகார் செய்வேன்."

உர்ஸஸ் வியந்தான்; "பைத்தியம், உளறு கிறான்; இவன் பிரபுவாம்; சந்தோஷ ஜன்னி பிடித்து விட்டது" என்றான்.

கப்பல் கடலை விரைவாக உழுது சென்றது. தயாவும் க்வின்ப்ளேனும் கட்டித் தழுவிக் கொஞ்சிக் குலாவினர்.

—என் உயிரே, என் இன்பமே!

—என் உலகே, என் கண்ணே, என் விண்ணே

—உன்னை மீண்டும் கண்டேன்; கலந்தேன் இனிப் பிரியேன்.

—உன்னை இதோ என் கையால் அணைந்தேன் இனிப் பிரியேன்.

—ஆ தயா—

—ஆ க்வின்ப்ளேன்.

"சரி, சரி எனக்கொரு பேரன் பிறப்பான்!" ...றன் உர்ஸலஸ். ஓமோவும் வாலாட்டியது.

## 78. வாழ்வுக் கூத்தின் இறுதி

திடீரென்று தயா நெஞ்சு படபடத்தெழுந்தாள். "கண்ணே! உங்கள் வரவின் இன்பமிகை என் மூச்சை அழுத்துகிறது. தங்கள் அன்பு வெள்ளத்தில் மூழ்கி என் மூச்சுத் திணறுகிறது; தங்கள் பிரிவால் நான் சோர்ந்து மடிந்து போனேன்; தாங்கள் வந்து எனக்கு உயிரீந்தீர். அந்த உயிர் இன்பத் துடிப்பேறி உடலில் நிலைக்கொள்ளாமல் மேலே பறக்கிறது. ஆ, க்வின்ப்ளேன்; உயிர் பெற்றேன்; இன்புற்றேன்; இன்பவுயிர் இதோ செல்லுகிறது; நீங்கள் நீடு வாழ்க........"

தயா திடீரென்று மயக்கமாகி விழுந்தாள்.

—ஆ தயா—பயலே உன் சந்தோஷ ஜன்னியால் ..ாள் உயிரை வாங்கிவிட்டாய்! நீ வந்த அதிர்ச்சி ·ால் அவள் மூச்சுத் திணறுகிறது.

—ஆ தயா, தயா? என்ன இது?

—"நாதா தங்களைக் காதலிக்கிறேன்; இனிப் பிரியேன்—ஆ இன்பம், இன்பம்."

தயா, க்வின்ப்ளேன் மார்பில் சோர்ந்தாள். பரம சுகம்! பரம சுகம்" என்றாள். உர்ஸஸ் அவள் நாடியைப் பார்த்தான்; கையை உதறினான், கண்ணீர்விட்டான்.

—ஆ தயா........

—"போகிறேன்........இன்பம்.....வின்!" என்றாள் தயா........

—ஆ நீ போகிறாயா? முடியாது? நான் இருக்க வேண்டுமானால் நீ போகாதே; உன்னைவிட்டு இந்தத் துன்பவுலகில் இருப்பதா நான்? தயா, தயா, அத்தனையோ இடர்களைத் தாண்டி உன்னை மீண்டும் கூடினேன்; இறைவன் நம்மை இவ்வளவு விரைவில் பிரிப்பானா? காலவேடன் கணை அவ்வளவு கொடியதா? நீ இறந்தால் நான் இறப்பேன்; தெய்வம், உலகம், தருமம், நியாயம், சத்தியம், காதல், வாழ்க்கை எல்லாம் பொய்க் கனவாகும்! கடவுளே கொலைகாரனானான். மனிதன் கடவுளை நம்பி மோசம் போனவனாவான். நீ இறப்பதா....முடியாது. தயா! நான் என்ன குற்றம் செய்தேன்....ஆ, என் தயா, தயா....

—என் கண்ணா, அது என் பிழையில்லை; விடை

பெற்றுக்கொள்ளுகிறேன். கண்ணு....அன்பே....இன்பமே.......விண்....

பிரிவினால் சோர்ந்து, தளர்ந்து சாகப்போன தயாவுக்குக் காதலன் வந்து அணைந்த இன்ப அதிர்ச்சியால் மூளை நரம்பு தெறித்து, நாடி ரத்தம் கசிந்தது.

—ஆ தயா, என்னைப் பிரியாதே; உன்னைப் பிரியேன்; நான் பிரபுவாகி, பிரபுக்களைக் கண்டித்து, பிரபுத்துவக்கோட்டையின் அபாயத்தைத் தாண்டி வந்தேன்; செல்வச் சிகரத்திலும், மாளிகைச் செருக்கிலும் ஏறிப்பார்த்தேன்; உன்னைப்போன்ற அன்பு மயத்தைக் காணேன். தயா, நீயே என் வாழ்வு; இனி நாம் சந்தோஷமாக வாழ்வோம்....இரு....தயா... இரு.... !

—அழாதே, என் கண்ணு அழாதே! அழுதென்ன? ஒருமணி நேரத்திற்குமுன்பே நான் இறந்திருப்பேன்; இப்போது நான் இறக்கவில்லை; உடலை உதறி, உயிராக உன்னுட் கலந்திருப்பேன். க்வின்ப்ளேன், என்னருமை க்வின்ப்ளேன். ஆண்டவன் உன்னையே என் உயிராக்கினார்; நான் முதலில் அவனிடம் செல்லவேண்டும்; அது அவன் இச்சை. க்வின்ப்ளேன்! இடிவிழுந்து பனிமலையில் என் ஏழைத்தாய் இறந்தாள்; மின்னலடித்து நான் பொட்டையானேன்; என்னைச் சாவின் வாயினின்று நீ காத்தாய். அனாதையை அனாதை காத்தான்; அனாதையை அனாதை காதலித்தான்; இரண்டு அனாதைகளுக்கும் உர்ஸஸ் தந்தையானார். இருவரும் கூடி வாழ்ந்தோம்; குறைவில்லாமல் வாழ்ந்தோம்; ஒரு நாள்

ஒரே நாள், விதி நம்மைப் பிரித்தது ; என் உயிரும் அப்போதே பிரிந்தது ; என் உயிரை மீண்டும் கொடுத்தாய்; இப்போது இன்பமாகச் செல்லுகிறேன். க்வின்ப்ளேன்! பச்சை வண்டியில் நாம் வளர்ந்ததும், பல ஜனங்கள் மகிழ ஆடியதும், பாடியதும், நீ என்னுடன் கூடி வாழ்ந்ததும்—எல்லாம் ஒரு கனவானது ; முடிவில் உன்னை என் உயிரில் அணைத்துச் செல்லுகிறேன்—என் கண்ணு, என்னை மறக்காதே—தயாவை மறக்காதே, நீயும் என்னுடன் விரைவில் வா ; நாம் இந்தத் துன்பவுலகில் கூடி வாழ்ந்தோம். இனி இன்பவுலகில் கூடி வாழ்வோம். ஆ கண்ணு, கண்ணு—வா, வா !

—இதோ வருகிறேன்; ஐயோ தயா, தயா ! என் உயிரே !

—காதலா....அதோ ஜோதி....அருட்சோதி.... தயாவின் விழிகளில் ஒரு திவ்ய ஜோதி எழுந்தது.

க்வின்ப்ளேனை அவள் உற்றுப் பார்த்தாள் ; நகைத்தாள். பிறகு விரல்கள் மடங்கின ; அவள் தலை கீழே வீழ்ந்தது ; பேச்சில்லை, மூச்சில்லை....

“தீர்ந்தது நாடகம்” என்று உர்ஸஸ் முகத்தை மூடிக்கொண்டு, துக்கம் தாங்காமல் தயாவின் காலடியில் மயங்கி விழுந்தான்.

“இதோ வருகிறேன் தயா!” என்று க்வின்ப்ளேன் கப்பல் முனைக்கு ஓடினான் ; எங்கும் இருள் விரிந்திருந்தது ; விண்மீன்கள் பயங்கரமாகப் பார்த்து நின்றன ; அலைகள்கூட அச்சத்தால் நின்றன ; உலகம்

பேச்சுமூச்சற்றது ; க்வின்ப்ளேன் வானை நோக்கினான்; கம்பீரமாகக் கப்பல் முனையில் நின்றான் ; முன்னே எதையோ கண்டு சிரித்தான். "உலகே, விடுதலை பெற்றேன் ; என் உயிரைக்கொண்டு என்னவளைத் தேடுகிறேன்........தயா, நீ அழைத்தாய், அழைக்கிறாய்; இதோ இவ்வுடலை உதறுகிறேன் ; உலகை மறக்கிறேன் ; வாழ்வைத் துறக்கிறேன் ; உன்னுடன் வந்து கூடுகிறேன்....தயா, தயா.......இதோ வந்தேன் !"

தடார்! அகண்டமான கார்கடலில் ஒரு காதலன் ஆழ்ந்தான் ; அவனுடலை ஆழி விழுங்கியது ; அவனுயிர், காதலியுடன் ஒளி யுலகம் சேர்ந்தது.

உர்ஸஸ் மயக்கம் தெளிந்து எழுந்தபோது க்வின்ப்ளேன் இல்லை ; ஹோமோ கப்பல் முனையில் கடலைப் பார்த்து நின்றது.

இளிச்சவாயன் முற்றிற்று.

PRINTED AT THE SUNDAY TIMES PRESS, G. T., MADRAS